# வைணவ மரபும்
# மெய்ப்பொருளியலும்

டாக்டர் **பி. ஆர். நரசிம்மன்,** எம்.ஏ. (தத்துவம்) எம்.ஏ. (ஆங்கிலம்)
எம்.ஏ (இந்தியப்பண்பாடு). பி.எச்.டி., பி.ஜி.சி.டி.இ., டி.ஜி.டி.,
மெய்ப்பொருளியல் பேராசிரியர்,
அருள்மிகு பழனியாண்டவர் கலை—பண்பாட்டுக் கல்லூரி,
பழனி - 624 602.

*திருமலை — திருப்பதி தேவத்தான*
*ஆசிரியர் உதவித்தொகையுடன் வெளியிடப்பட்டது.*

**விஷ்ணு பதிப்பகம்**
**'நிர்மால்யம்'**
*10-சி, கிழக்குத் தெரு,*
*அனுப்பானடி, மதுரை - 625 009*

டாக்டர். கோ. விசயவேணுகோபால்,
எம் ஏ எம் லிட் பி எச் டி.
பேராசிரியர்
தமிழ்த்துறை
மதுரை காமராசர் பல்கலைக் கழகம்
மதுரை - 625 021.

# அணிந்துரை

வைணவ மரபு வளர்ந்த வரலாற்றினையும் அதன் தத்துவக் கோட்பாடுகளையும் விளக்கும் ஒரு தனி நூல் தமிழில் இல்லை என்றே சொல்லலாம். இக்குறையைப் போக்கும் விதத்தில் அமைந்துள்ளது பேராசிரியர் டாக்டர். பி ஆர். நரசிம்மன் அவர்களுடைய இச்சிறு நூல் தெளிவான சிந்தையுடன் கருத்துக்கள் தொகை வகை செய்யப் பெற்று அமைந்துள்ளது. நூல் இரு பெரும் பிரிவுகளாகப் பகுக்கப்பட்டு கருத்துக்கள் தெளிவாக விளக்கப்பட்டுள்ளன வைணவ மரபு எனும் முதற்பிரிவில் வேதகாலம் தொடங்கி ஆழ்வார்கள் காலம் வரை வளர்ந்த போக்குகள் எடுத்துக்காட்டப்பட்டுள்ளன. வைணவ மரபு விட்டுணுவை முழுமுதற் கடவுளாகக் கொண்டிருப்பினும் நாராயணன், வாசுதேவன், கிருட்டிணன் போன்ற வளர்ச்சி நிலைகளையும் ஒன்றிப்பு நிலைகளையும் ஒருங்கிணைத்து அது எவ்வாறு பெருமரபாக வளர்ந்துள்ளது என்பதனை ஆசிரியர் இப்பகுதியில் நன்கு விளக்கி நிறுவியுள்ளார். வடசொற்களைத் தமிழாக்கம் செய்து ஆசிரியர் பயன்படுத்துவது பாராட்டு தற்குரியது.

ஆழ்வார்களின் உணர்ச்சிகளை அறிவு வழியில் விளக்கிய சந்தானாச்சாரியர்களது பணி பற்றிய விளக்கம் அடுத்து விளக்கப்பட்

டுள்ளது. நாதமுனி, ஆளவந்தார், இராமானுசர், வேதாந்த தேசிகர், பிள்ளை லோகாச்சாரியார், மணவாள மாமுனிகள் ஆகியவர்களது பணிகள் இவ்வகையில் தெளிவுற விளக்கப்பட்டுள்ளன. வைணவர் அன்றாடம் பின்பற்றும் கடைப்பிடிகள் (இவை வடமொழியில் நித்யானுசந்தானம் எனப்படும்) எளிய தமிழில் அருமையாக விளக்கப்பட்டுள்ளன.

இரண்டாவது பெரும் பிரிவு வைணவ மெய்ப்பொருளாகிய தத்துவம் பற்றி விரிவாக எடுத்துரைக்கிறது. அறிவாய்வியல் எனும் பகுதி மிக நன்றாக ஆசிரியரால் விளக்கப்பட்டுள்ளது. அறிவாய்வியல், புலன்கடந்த பொருளியல், சாதனையியல் என மெய்ப்பொருளியல்கள் விளக்கப்படுவதனை ஆசிரியர் வைணவத்தோடு நன்கு பொருத்திக் காட்டியுள்ளார். மேலும் சித்து, அசித்து, ஈசுவரன் எனும் வைணவத்தின் முப்பெரும் அடிப்படைகளையும் மிகத் தெளிவாக விளக்கியுள்ளார்.

சமயம் வேறு, தத்துவம் வேறு; வைணவ மரபில் இவ்விரண்டும் எங்ஙனம் அமைந்துள்ளன என்பதனை வரலாற்று நிலையில் நின்று ஆசிரியர் எடுத்துக்காட்டியுள்ள திறம் போற்றுதற்குரியது.

வைணவம் பற்றிய அனைத்துச் செய்திகளையும் சுருங்கத் தரும் ஒரு வழிகாட்டி நூல் இது. ஆசிரியரின் இந் நன்முயற்சி பாராட்டிற்குரியது. தமிழ் கூறு நல்லுலகம் இத்தகு நன்முயற்சிகளைப் பாராட்டிப் போற்றுமாக.

மதுரை
13–3–87

*விசயவேணுகோபால்*

# அடியவனுரை

இந்து சமயத்தின் அறுவகை வழிபாட்டு மரபுகளில் தமிழகத்தில் தழைத்தோங்கி நிற்பன சைவ, வைணவ வழிபாட்டு மரபுகளே. இவற்றுள் வைணத்திற்குச் சைவ மரபினைப் போன்று பல்கிப் பெருகிய இலக்கியங்கள் இல்லை எனலாம். இக்குறையை எனது பணித்தொடக்கக் காலத்திலிருந்து அடியேன் உணர்ந்து வந்ததன் விளைவாகவும், பல்கலைக்கழகங்களில் இந்தியப் பண்பாட்டுத் துறை கடந்த சில ஆண்டுகளாகப் பெற்றுவரும் வளர்ச்சியின் விளைவாகவும், பொதுவான விருப்பத்தின் பொருட்டும். இச் சிறிய பணியினை ஏற்று இயன்ற அளவு செவ்வனே செய்துள்ளேன். இதற்கு எம்பெருமானின் திருவருளும் எளியேனின் முன்னேற்றத்தில் விழைவும் நல்லியல்பும் கொண்ட பேராசிரியர்கள் எம். செல்லச்சாமி, ப. காளிமுத்து போன்றோரின் நல்லெண்ணமும் இப்பணியில் உறு துணையாக நின்றன எனலாம். இந்நூலுக்கு ஏற்றதொரு அணிந்துரையை அளித்த அன்பர் பேராசிரியர் டாக்டர். கோ. விசயவேணுகோபால் அவர்களுக்கு என் உளமார்ந்த நன்றியைப் புலனாக்கிக் கொள்வதுடன், நூல் குறித்த நேரத்தில் வெளிவர அயராது உழைத்த பரணி அச்சகத்தார்க்கும், முகப்பு அட்டையினைனைச் சிறப்பாக அமைத்துத்தந்த திரு.எல்.என். சகதீச பாபு அவர்களுக்கும் நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன். தமிழ்கூறு நல்லுலகம் இந்நூலை வரவேற்கும் என்ற நம்பிக்கையுடன், எம்பெருமானின் திருவடிகளுக்கே இதனைக் காணிக்கையாக்கி மகிழ்கின்றேன்.

பழனி
25-3-87.

பி. ஆர். நரசிம்மன்

# பொருளடக்கம்

# வைணவ மரபு

# தோற்றமும் வளர்ச்சியும்

## 1. முன்னுரை

இம் மண்ணில் தோன்றுதொட்டு விளங்கிவரும் இந்து சமயங்கள் பல்வேறு வழிபாட்டு மரபுகளைத் தம்மகத்தே கொண்டுள்ளன. இந்து சமயம் பல வழிபாட்டு மரபுகளைத் தன்னகத்தே கொண்டிருப் பினும் ஒரே சமயமாக இன்றும் நிலவுகிறது. அதன் வழிபாட்டு மரபுகளனைத்தும் இறைவனின் பெயரைக்கொண்டே இலங்குகின்றன. வழிபாட்டு மரபுகள் பலவாயினும் பரம்பொருள் ஒன்றே என்பதை அனைவரும் ஏற்கின்றனர். இப்பரம்பொருளைத் தத்தம் வழிபாட்டின் அடிப்படைகளில் வெவ்வேறு பெயருடனும், வடிவத்துடனும் அம் மரபினர் வணங்குகின்றனர். இதனையே,

> ' வணங்கும் துறைகள் பல பலவாக்கி, மதிவிகற்பால்
> பிணங்கும் சமயம் பலபலவாக்கி அவையவை தோறும்
> அணங்கும் பலபலவாக்கி நின் மூர்த்தி பரப்பிவைத்தாய்
> இணங்கு நின்னோரரை இல்லாய் நின்கண் வேட்கை
> எழுவிப்பனே '

என நம்மாழ்வாரும்,

> ' யாதொரு தெய்வம் கொண்டீர் அத் தெய்வமாகி
> அங்கே மாதொரு பாகனார் தாம் வருவார் '

எனச் சிவநாள் சித்தியாரும் குறிப்பிடுவதிலிருந்து துறைகள் பலவாயினும் பரம்பொருள் ஒன்றேயென்பதை அறியலாம்.

இந்து சமயத்தின் பல்வேறு வணங்கும் துறைகளை ஆதிசங்கரர் ஆறு வழிபாட்டு மரபுகளாகத் தொகுத்தளித்தார். அவை 1. முருக வழிபாடு (கௌமாரம்), 2. சக்தி வழிபாடு (சாக்தம்), 3. கணபதி வழிபாடு (காணாபத்தியம்), 4 சூரிய வழிபாடு (சௌரம்), 5 சிவ வழிபாடு (சைவம்), 6. விட்டுனு வழிபாடு (வைணவம்) என்பவை யாகும். இவ் வழிபாட்டு முறைகளில் சூரிய, விட்டுணு வழிபாடு ஒருவகையாகவும், ஏனையவை சிவ வழிபாட்டு மரபைச் சார்ந்தவை யாகவும் விளங்குகின்றன.

வைணவ மரபு விட்டுணுவை முடிந்த பேருண்மையாகக் கொண்டுள்ளது. வைணவத்திற்குப் பாகவதம், பாஞ்சராத்திரம், சாத்வதம், ஏகாந்திகம் என்ற பெயர்களும் வழங்கிவருகின்றன. பாகவதம் என்பது இறைவனைப் பகவான் எனக் கொள்ளும் வழிபாட்டு மரபாகும். பாகவத மரபினர் பாகவத புராணத்தையும், பகவத்கீதையையும், மகாபாரதத்தின் நாராயணியப் பிரிவினையும் தங்கள் நம்பிக்கைகளுக்கு அடிப்படையாக ஏற்கின்றனர். பாஞ்சராத்திர மரபினர் அப் பெயருடன் விளங்கும் ஆகமங்களைத் தங்கள் அடிப்படையாகக் கொள்கின்றனர். சாத்வத மரபு சிரீ கிருட்டிணர் சார்ந்த இனமாகிய சாத்வதத்திலிருந்து அப்பெயரைப் பெறுகின்றனர். ஏகாந்திக மரபு ஒரேயொரு முடிவைக் கொண்டதாகும். இவர்கள் நாராயணனையே மனிதர் அடைய வேண்டிய மேலான முடிவாகக் கொள்கின்றனர்.

வைணவ வழிபாட்டு மரபு விட்டுணுவைப் பரம்பொருளாகக் கருதினும் இக் கொள்கை நான்கு வகையான சிந்தனை ஓட்டங்களின் ஒருமித்த நிலையாகும் என அறிஞர்கள் கருதுகின்றனர். அவை :- 1. வேதங்களில் காணப்படும் மூன்று நீண்ட அடிகளையுடைய இறைவனாகக் கருதப்படும் விட்டுணுவைப் பற்றிய கருத்து, 2. இயல் உலகு மற்றும் மெய்பொருளியல் சார்ந்த இறைவனான நாராயணனைப் பற்றிய கருத்து, 3. வரலாறு சார்ந்த இறைவன் எனக்கருதப்பெறும் வாசுதேவனைப் பற்றிய கருத்து, மற்றும் 4. ஆயர் இனத்தைச் சார்ந்த இறைவனாக கிருட்டிணனைப் பற்றிய கருத்து, என்பனவாகும். இந் நால்வகைக் கருத்துக்களும் இணைந்ததே இன்றைய வைணவ மரபாக விளங்குகின்ற ஒன்றாகும் எனவே இந்நால்வகைக் கருத்துக்களும் காணப்படும் இலக்கியங்களை ஆய்ந்து அவற்றில் இவ்விறைவர்களைப் பற்றிக் கூறப்பட்டுள்ள செய்திகளைத்

தொகுப்பதும், அவ்விறைவர்கள் எவ்வாறு ஒன்றுபடுத்தப்பட்டு இன்றைய வைணவ மரபாக மாறின என்பதை விளக்குவதும் வைணவ மரபின் தோற்றம், வளர்ச்சி எனக் குறிப்பிடலாம்.

## 2. வேதங்களில் காணப்படும் வைணவக் கருத்துக்கள்

இராமானுசராலும் ஏனைய வைணவத் திருத்தொண்டர்களாலும் விட்டுணுவை மேலான உண்மையாகக் கருதுகின்ற வைணவ மரபின் தோற்றக் கருத்துக்கள் ரிக் வேதத்தில் காணப்படுகின்றன விட்டுணு என்ற சொல்லின் பொருள் அனைத்தையும் பரவி நிற்றலாகும். வேதத்தின் போற்றிப் பகுதிகளில் (மந்திரங்கள்) விட்டுணு உலகம் முழுவதையும் பரவி நிற்கும் பெரிய தெய்வமாகக் குறிப்பிடப்பட்டுள்ளது அது மட்டுமன்றி உலகைப் படைத்தவனாகவும், காக்கின்றவனாகவும் விட்டுணு குறிப்பிடப்படுகின்றார் உலகைத் தன்னுடைய மூன்று நீண்ட அடிகளால் அளந்ததினால் திரிவிக்கிரமன் என்ற பெயரையும் பெறுகின்றார். விட்டுணு ரிக் வேதத்தில் நலன் செய்தல், தூய்மை, ஏமாற்றப்பட முடியாதநிலை, பெருந்தன்மை, இரக்கம், விருப்பத்தை நிறைவேற்றுதல், ஆற்றல், அனைத்தையும் உள்ளடக்கியிருத்தல் போன்ற பண்புகள் உடையவராகக் குறிப்பிடப்படுகின்றார். அவனுடைய பக்தர்கள் நிலையான மகிழ்ச்சியுடன் வாழும் அவனுடைய விட்டுணுவின் இருப்பிடம் மிக்க ஒளி பொருந்தியதாகும் தூய்மைக்கும், கருணைக்கும் அடிப்படையாகவும் விளங்குகிறது என்றும் குறிப்பிடப்பட்டுள்ளது இறைவனை அடைவதற்குரிய உயரிய வழி உயிர் தன்னை ஒப்படைத்தலே ஆகும் என்பதும் வேதத்தில் காணப்படுகிறது. மேலும் அன்பு வழியே உயர்ந்ததும் எளிமையானதும் என்று குறிப்பிடுகின்றது. ஏனெனில் அவ்வழி உயிரின் முன்னேற்றத்தின் ஒவ்வொரு நிலையிலும் அளவிடற்கரிய மகிழ்ச்சியை அளிக்கின்றது. உலகப் படைப்பைப் பற்றி அனைத்தும் அறிந்தவர் விட்டுணு எனறும் அவ்வுயர் நிலையினை வேறு எவரும் அடையவில்லை யென்றும் வசிட்டர் குறிப்பிடுகிறார்.

ரிக் வேதத்தின் பத்தாவது நூலில் உள்ள 19-ஆவது செய்யுட் தொகுதி மனிதனைப் பற்றிய பதினாறு செய்யுட்கள் கொண்டதாகும். (புருடசூக்தம்), இப்பகுதியில் விட்டுணுவிற்குப் புருடன் என்ற பெயரும் இவ்வுலகம் அவனுடைய படைப்பு என்றும் குறிப்பிடப்பட்டுள்ளது. தைத்திரியத் தொகுதியில் விட்டுணுவை நோக்கி வேள்வி செய்தால் ஒருவன் பாதுகாப்பு, பொருள் மற்றும் நல்வாழ்வு ஆகியவற்றைப்

பெறலாம் என்ற குறிப்புக் காணப்படுகின்றது. நலன் செய்தலும் மனிதர்க்கு உதவுவதில் நாட்டமும் இறைவனுடைய இரு சிறந்த தன்மைகளாகச் சொல்லப்படுகின்ற உலகியல் ஒழுங்கையும் இயற்கைச் சட்டங்களையும் விட்டுணு நடத்துவதால் உலகைக் காப்பவராகக் கருதப்படுகின்றார்.

எசுர் வேதத்தில் விட்ணுவைக் குறிப்பிடும் பல செய்யுட்கள் அவருக்குத் திருப்படையல் அளிப்பதைக் குறிப்பிடுகின்றது. அதன் 31-ஆவது பகுதியும், 22 பாடல்களில் அடங்கியதுமான மனிதனைப் பற்றிய முதல் பதினாறு செய்யுட்களும் ரிக் வேதத்தில் உள்ளது போன்றே இருக்கின்றன. இறுதிப் பாடலில் சிரியையும், இலக்குமி யையும் விட்டுணுவின் துணைவியர்களாகக் குறிப்பிடுவதிலிருந்து இப் பகுதி இவ்விறைவனைச் சார்ந்ததெனலாம்.

சாம வேதத்தில் மனிதனைப் பற்றிய செய்யுள் தொகுதியுடன் வேறு பல செய்யுட்களும் விட்டுணுவைக் குறிப்பதாக அமைந்துள்ளன. அதர்வண வேதத்தின் பதினாறு பாடல்கள் கொண்ட மனிதனைப் பற்றிய செய்யுள் தொகுதி முழுவதும் சாமவேதத்தின் அடிப்படையில் சில வேற்றுமையுடன் காணப்படுகிறது.

வேதங்களின் சடங்கியல் (பிராமணங்கள்) பகுதியிலும் விட்டுணு இந்துக் கடவுள்களில் முதன்மையான இடத்தை வகிப்பதாகக் குறிப்பிடப்பட்டுள்ளது. ஐத்ரேயப் பகுதியில் 'விட்டுணு மேலானவன்' என்ற தொடர் வருகின்றது. வைணவ மரபில் பிற்காலத்தில் பரந்து விளங்கிய நாராயணன் என்ற சொல் முதன் முதலாகக் கருப்பு எசுர் வேதத்தில் குறிப்பிடப்பட்டுள்ளது.

வைணவ வழிபாட்டு மரபு காலவரையறை செய்ய முடியாத அளவு மிகப் பழமையான வேத இலக்கியங்களிலேயே குறிப்பிடத் தக்க வகையில் தொடங்கியுள்ளதை மேற்கண்ட குறிப்புகள் விளக்கு கின்றன.

### *உபநிடதங்களில் காணப்படும் வைணவக் கருத்துக்கள்*

இன்றைய வைணவ மரபு அதன் கருத்துக்களுக்கு அடிப் படையாகப் பல செய்திகளை உபநிடதங்களிலிருந்தே கொடுக்கிறது. விட்டுணுவை உயர்ந்த உண்மையெனக் கருதும் உபநிடதங்கள் வைணவ உபநிடதங்கள் என வழங்கப்படுகின்றன. வைணவ மரபின் அடிப்படையாக கருத்தமைவான பரம் பொருள் மூன்றன் ஒருமை

என்பது உபநிடதங்களின் வழியே கூறப்படுகின்றது. சுவேதாசுவா தார உபநிடதம் பரம்பொருள் மூன்று நிலையான முடிநிலை உண்மை களால் ஆனது என்று குறிப்பிடுகின்றது. அவை ஆற்றலற்ற அறி யாமை கொண்ட உயிர், ஆற்றலும் அனைத்தறிவும் கொண்ட இறை வன், தனிஉயிர்களின் நுகர்விற்கென இருக்கும் நிலையான பிரகிருதி, என்பவனவாகும். மனிதன் நுகர்பவன், நுகரப்படுபவை மற்றும் இயக்குகின்றவர் ஆகிய மூன்று உண்மைகளை அறிய வேண்டியவன் என்றும், இம் மூன்றினை அறிவதால் ஒரு மனிதன் அனைத்தை யும் அறிந்தவன் என்றும் கூறுகின்றது.

'வைணவத்தின் கருத்தான இறைவன் இயற்கையின் உயிரா கும் என்பது பிருகதாரண்யக உபநிடதத்தில் காணப்படுகின்றது அது இறைவனை உலகின் உள் உறைவானாகக் குறிப்பிடுகின்றது மேலும் அது தன்னுள்ளே இருந்து தன்னைக் கட்டுப்படுத்தும் இறை வனைப் பூமியானது அறிவதில்லை எனவும், அவ் விறைவனின் உடலே இப் பூமியாகும் எனவும் குறிப்பிடுகின்றது இறைவன் உல கின் உள்ளிருந்து அதனை ஆட்சி செய்கின்றான். உலகம் முழுமை யும் பரவி நின்று அதனை மேற்பார்வை இடுவதுடன் அதன் உள் உறைவானாகவும் பேசப் படுகின்றான். அவ் உபநிடதம் இறைவனை அனைத்தும் என்றும், வடிவம் என்றும், வடிவமற்றது என்றும், அறிவு என்றும், அறிவற்றது என்றும், நிலையானது என்றும், செயல் கொண்டது என்றும் கூறுகிறது. இறைவன் உண்மைகளுக் கெல்லாம் பேருண்மையாகும் என்றும் அது சுட்டுகின்றது. இதே கருத்தினைத் தைத்திரிய உபநிடதமும் வெளிப்படுத்துகின்றது அது இறைவனை முரண்பாடுகள் உள்ளிட்ட அனைத்துப் பொருள்களிலும் உள் உறைபவன் என்று கூறுகின்றது. அவற்றை இருப்பிற்குக் கொண்டுவந்து அவன் அதனில் நுழைகிறான்; அதனுள் நுழைந் தபின் இருப்பதாகவும், கடந்ததாகவும் அவன் ஆகின்றான். வரை யறையுடையதும் வரையாற்றலும், அடிப்படைகொண்டதும் அடிப் படையற்றதும், உணர்வும் உணர்வற்றதும், உண்மையும் உண்மை யல்லாததும் ஆன அனைத்துத்தன்மையாக இறைவன் விளங்கு கிறான். நாராயண உபநிடதம் ஒவ்வொரு தனியனின் இருதயத் திலும் விட்டுணு உறைகின்றான் என்று குறிப்பிடுகின்றது. அவன் அனைத்திற்கும் உள் உணர்வாவான் என்று சுபலோபநிடதம் கூறு கின்றது.

இறைவனைப் பண்புகளுடன் கூடியவனாக வைணவமரபு கருதுவதும் உபநிடதங்களின் அடிப்படையிலேயேயெனலாம். தைத்

திரிய உபநிடதம் உண்மை, அறிவு, மகிழ்ச்சி, (சத்தியம், ஞானம், அனந்தம், பிரம்மம்) உடையதாகப் பரப்பொருளாகிய இறைவனைப் பேசுகின்றது. சாந்தோக்கிய உபநிடதம் பரம்பொருள் இறப்பு, தீமை, துன்பம் ஆகியவையற்றதாகக் குறிப்பிடுகின்றது. மாறாகப் பரம் பொருளின் தூய பண்புகளாக உண்மையன்பையும், உண்மை உறுதியையும் குறிப்பிடுகின்றது.

வைணவக் கொள்கையான பரம்பொருள் தனி உயிரிலிருந்து வேறுபட்டது என்பதனை கதா, முண்டக உபநிடதங்களில் காணலாம். கதா உபநிடதம் பரம் பொருளும் தனி உயிரும் மனித இருதயத்தில் உள்ளார்ந்து இருப்பினும் தனி உயிரே செயற்பலன்களை நுகர்கின்றது எனச் சொல்கின்றது. இதே கருத்தினை முண்டக உபநிடதம் அழகிய உருவகமாகக் குறிப்பிடுகின்றது "ஒரே மரத்தில் அமர்ந்துள்ள இரு பறவைகள் ஒன்றுக்கொன்று நட்புத் துணையானவை. இவற்றில் ஒன்று அம்மரத்தின் இனிய பழங்களைச் சுவைக்கின்றது, மற்றொன்று அதனைப் பார்த்துக் கொண்டிருக்கிறது" இறைவன் ஆள்சார்புடைய இருப்பு எனவும், அனைத்துயிர்களும் அதன் பணி புரிபவர்கள் எனவும் இவ்வுபநிடதம் குறிப்பிடுகின்றது.

இறைவன் அனைத்துயிர்கள், அனைத்துப் பொருட்கள் ஆகியவற்றின் உள்ளிருந்து ஆட்சி புரிபவன் என்னும் கருத்தை சுவேதாசுவதாரா உபநிடதம் இறைவனை மிஞ்சிய எதுவும் இல்லை, அதனினும் நுண்ணியதும் இல்லை, இறைவனைக் கடந்து எவ்விருப்பும் இல்லையென்று பேசுகின்றது. அவன் ஒரு மரத்தைப் போன்று நிலையாக நிற்கின்றான்; அம்மரத்தின் தன்மை அதன் எல்லாப் பகுதிகளிலும் விளங்குவது போன்று இறைத்தன்மை அனைத்துப் பொருட்களிலும் அனைத்து உயிர்களிடத்திலும் விளங்குகின்றது அவனே இயல் உலகையும், துறக்க உலகையும் படைப்பவன் தைத்திரிய உபநிடதமும் அனைத்துப் பொருட்களும் மற்றும் இருப்புக்களும் அவனிடத்திலிருந்தே கிளம்பியதாகவும், அவனிலேயே தம் இருப்பையும், இயக்கத்தையும், வாழ்க்கையையும் கொண்டு விளங்குவதாகவும், அவனிலேயே இறுதியில் ஒடுங்குவதாகவும் குறிப்பிடுகின்றது.

உயிரின் அணுவளவுத் தன்மையை பிருகதாரண்யக உபநிடதம் உடலிலிருந்து உயிர் கண் வழியே வெளியேறுகிறது என்று குறிப்

பிடுவதன் மூலம் விளக்குகின்றது. உயிரின் அளவு ஒரு மயிர் நுனியின் பத்தாயிரத்தின் ஒரு பகுதியாகுமென சுவேதாசுவதாரா உபநிடதம் குறிப்பிடுகின்றது.

கதா உபநிடதம் வீடுபேற்றின் நோக்கமாக அலைகின்ற உயிரின் உயர்ந்த முடிவு விட்டுணு உலகத்தை அடைவதாகுமெனக் குறிப்பிடுகின்றது வைணவ உபநிடதங்கள் உயிர்கள் தம் அழியாத் தன்மையினை உணர்கின்ற வீடு பேற்றிற்கு அன்பு அல்லது பத்தி வழியே சிறந்ததென வலியுறுத்துகின்றன. இறைவனைக் காணுகின்ற பொழுது பத்தன் தனது நன்மை தீமைகளிலிருந்து விடுபட்டு இறைத்தன்மையைப் பெறுகின்றான் என முண்டக உபநிடதம் கூறுகின்றது. மேலும் அத்தகைய உயிர் பரம்பொருளைச் சென்றடைந்து அதனுடன் கூடியிருக்கும் முழுமையான வீடுபேறு பெறுகின்றது என்றும் அது குறிப்பிடுவதுடன் தனி உயிர் தனது தனித்த இருப்பிலிருந்து மாறுவதில்லையெனவும், பரம்பொருளைக் கலப்பதில்லையெனவும் குறிப்பிடுகிறது. இவற்றின் மூலம் பிற்கால வைணவ மரபின் அனைத்துக் கோட்பாடுகளும் உபநிடதங்களில் சுட்டப்பட்டுள்ளன என்பதை அறியலாம்.

### கல்வெட்டுக்களில் வைணவக் கருத்துக்கள்

விட்டுணு வழிபாட்டு மரபை வேத உபநிடதங்கள் குறிப்பிடுவதைப்போன்று வாசுதேவ, நாராயணன், கிருட்டிணன் ஆகியோரின் வழிபாட்டு மரபினை மகாபாரதம், பகவத்கீதை மற்றும் பாகவத புராணம் குறிப்பிடுகின்றது. வாசுதேவ வழிபாட்டு மரபின் தோற்றத்தை பற்றி சில கல்வெட்டுக்களும் குறிப்பிடுகின்றன. வாசுதேவன் என்ற சொல்லே வழிபாட்டிற்குரிய இறைவன் என்று பொருள்படும். கி. பி. இரண்டாம் நூற்றாண்டைச் சார்ந்ததாகக் கருதப்படும் இராசபுதன மாநிலத்தைச் சேர்ந்த கோசுந்தி என்னுமிடத்தில் கிடைத்துள்ள கல்வெட்டு சங்கர்சணன் மற்றும் வாசுதேவ வழிபாட்டு மன்றத்தைச் சுற்றிக் கட்டப்பட்ட சுவரைப் பற்றிக்குறிப்பிடுகின்றது. பேச்நகர் என்னுமிடத்தில் கிடைத்துள்ள கல்வெட்டு எலியோடாரசு என்னும் கிரேக்க நாட்டுத்தூதுவன் 'இறைவர்க்கெல்லாம் இறைவனான வாசுதேவனைச்' சிறப்பித்து ஒருகருடத்தூணை எழுப்பிவித்ததாகவும், அத்தூணின் உச்சியில் கருடவடிவைப் பொறித்ததாகவும் கூறுகின்றது. மேலும் அத்தூதன் தன்னை ஒரு பாகவதன் என்று அழைத்துக் கொண்டதாகவும் குறிப்பிடுகின்றது. இக்கல்

வெட்டும் கி. பி. இரண்டாம் நூற்றாண்டின் முற்பகுதியைச் சார்ந்த தாகக் கருதப்படுகின்றது. இவை வாசுதேவன் இறைவர்க்கெல்லாம் இறைவனாக வழிபடப்பட்டதையும், அவனை வழிபட்டோர் பாகவதர் கள் என வழங்கப்பட்டதையும் தெரிவிக்கின்றது. இப் பாகவதமரபு இங்கு பரவியதுடன் கிரேக்கர்களும் இதனைப் பின்பற்றினர் என்றும் இதன் மூலம் அறியலாம். மேலும் நானாகட்டின் நீண்ட குகைக்கல் வெட்டில் முதல் எண் கொண்டது துவந்தச்சுற்றுச் சுவரில் பொறிக் கப்பட்டுள்ள கடவுள் வாழ்த்து. இதில் ஏனைய இறைவர்களின் பெயர்களுடன் சங்கர்சணன், வாசுதேவன் ஆகியோர் பெயர்களும் இடம் பெற்றுள்ளன. இக்கல்வெட்டு கி.பி. முதலாம் நூற்றாண்டைச் சார்ந்ததாகக் கருதப்படுகின்றது.

உரையாசிரியரான பதஞ்சலி, வாசுதேவன் என்ற பெயரின் தோற்றத்தைப் பற்றி குறிப்பிடும் பொழுது வழிபாட்டிற்குரிய இறைவ னான வாசுதேவனை விருசுனி இனத்தைச் சார்ந்த சத்திரியகுலத் தில் தோன்றிய ஒரு வீரன் என்று குறிப்பிடுகின்றார். வாசுதேவன் என்ற வரலாற்றுக்குட்பட்ட ஒரு வீரனே பின்னாளில் வழிபாட்டிற் குரிய இறைவனாக விளங்கினான் என்பதை பாகவத இலக்கியங் களிலும் காணலாம்.

## 3. மகாபாரதத்தின் நாராயணீயப் பிரிவில் காணப்படும் வைணவக் கருத்துக்கள்

மகாபாரதம் இந்து சமய மெய்ப்பொருளியலைப்பற்றிய கலைக் களஞ்சியம் எனலாம். மகாபாரதம் பகவத்கீதை, அனுகீதை, விட்டுணு சகசிரநாமம் போன்ற விட்டுணு வழிபாட்டு மரபைப் பரப்புகின்ற பல பகுதிகளைக் கொண்டிருப்பினும் நாராயணீயப்பிரிவே வைணவ வழி பாட்டு மரபுக் கொள்கையைத் தெளிவாகத் தருகின்ற ஒன்றாகும்.

முன்னர் குறிப்பிட்ட கல்வெட்டுக்களிலிருந்து வாசுதேவனை மையமாகக் கொண்ட ஒரு மரபு தோன்றி விளங்கியதையும் அறியலாம். மகாபாரத சாந்தி பருவத்திலடங்கிய நாராயணீயப்பிரிவு நாராயணனே மேலான இறைவன் எனக் குறிப்பிடுவதுடன் அவனது மூலவடிவே இருக்கின்ற மற்றும் இருக்கப் போகின்ற அனைத்திற்கும் அடிப்படை என்கிறது. தருமனுடைய மக்களான நரன், நாராயணன், கிருட்டிணன் மற்றும் அரி மேலான இறைவனின் வடிவங்களைக் குறிப்பதாகும் என்றும் கூறுகின்றது. நாராயணீயப் பிரிவு வாசுதேவ மரபினை இரு வழிகளில் குறிப்பிட்டாலும் பின்னது முன்னதில் அடங்குவதாகும்.

இப்பிரிவில் முதலாவதாக மரீசி, அத்திரி, அங்கிரசு, புலத்தியன், புலகன், கிரது, வசிட்டர், சுவயம்புலன் ஆகிய எண்மரே முதன் முதலில் வாசுதேவ மரபை மேருமலையில் இறைவன் முன்னிலையில் வெளியிட்டதாகக் குறிப்பிடுகின்றது. இவர்கள் சித்திர சிகந்திகள் என்று அழைக்கப்படுபவர்கள். இறைவனாகிய பகவான் இவர்களைப் புகழ்ந்ததுடன், இவர்கள் வெளிப்படுத்திய புனித நூல்கள், மனித நடத்தைகளான செயல் மற்றும் சிந்தனை பற்றிய அனைத்து நெறிகள் கொண்டதாகவும், வேதங்களுக்கு இணைப்பட்டதாகவும் உள்ளன என்றும் கூறுகின்றார். மேலும் இவை வழிவழியாகப் பரப்பப்பட்டு பிரசுபதியையும் இறுதியில் வசு உபரிசரன் எனப்படும் மன்னனையும் சென்றடையும் என்று தெரிவிக்கின்றார். நாராயணீயம் பிரிவு இவ் வசுஉபரிசரன் ஒரு வேள்வியை இயற்றியதாகவும் அதில் எவ்வித உயிர்ப் பலியும் செய்யவில்லை என்று கூறுகின்றது. வேள்விப் பொருட்கள் கட உபநிடந்தங்களை உள்ளிட்ட ஆரண்யகம் குறிப்பிடும் முறையிலேயே பெறப்பட்டன என்று தெரிவிக்கின்றது இவ்வசு மன்னன் சாத்வத நெறிப்படி சடங்குகள் செய்து வாசுதேவனை ஒரே இறைவனாகக் (ஏகாந்தின்) கருதி வழிபட்டதால் இறைக்காட்சி பெற்றான் என முடிக்கின்றது.

நாராயணீயம் தன் இரண்டாவது பகுதியில் நாராயணன், தன்னை மட்டுமே இறைவனாகக் கருதி வழிபட்ட நாரதருக்குக் காட்சி கொடுத்ததன்றி வாசுதேவ வழிபாட்டு மரபைக் கூறியதாகவும் குறிப்பிடுகின்றது. வாசுதேவனே மேலான உயிர், அனைத்துயிர்களின் உள் உயிர். அவனே அனைத்தையும் படைப்பவன். அனைத்துயிர்களும் வாசுதேவனின் வடிவமாகிய சங்கர்சணனில் உள்ளது. சங்கர்சணனிடமிருந்து பிரதியும்ணனும், மனமும், பிரதியும்ணனிடமிருந்து அநிருத்தனும், தன் உணர்வும் வெளிப்படுகின்றன எனக் கூறுவதுடன் தன்னை வாசுதேவனின் இந்நால்வகை வடிவங்களுடன் ஒன்றுபடுத்திக் கொள்வதுடன், இம்பரபைப் பின்பற்றுவோர் சாத்வதர்கள் ஆவர் எனவும் தெரிவிக்கின்றார். மேலும் நாராயணன் தானே பிற கடவுள்களையும், ஏனையவற்றையும் தன்னிலிருந்தே படைப்பதாகவும், இறுதியில் அனைத்தையும் தன்னுள்ளே ஒடுக்கிக் கொள்வதாகவும், பின்னர் தனது தோன்றி வந்த வடிவ நிலைகளான அவதாரங்களைப் பற்றியும் நாரதருக்குக் கூறியதாக இவ்விரண்டாம் பகுதி தெரிவிக்கின்றது.

வாசுதேவன் என்ற சொல், மொழியின் சொல்லிலக்கணப்படி உலகை முழுமையாகத் தழுவி நிற்பதனையும், அனைத்திருப்புக்

களின் தங்குமிடம் என்பதனையும் குறிக்கும். மகாபாரதத்தின் இறுதிப் பகுதிகளில் பாவங்களினின்னும் நீங்கிய உயிர் செல்லும் வழி பின்வருமாறு குறிப்பிடப்பட்டுள்ளது. வாயிலான சூரியனில் நுழைந்தவுடன் உயிரின் பருப்பொருள் சார்ந்த அழுக்குகள் எரிக்கப் பட்டு உயிர் அணுவளவினதாக அமைவதாகவும், பின்னர் சூரியனி டமிருந்து விடுபட்டு அநிருத்த வடிவில் நுழைந்து மனமாக மாறுவ தாகவும், பின்னர் பிருதியும்நனின் வழியே சங்கர்சணனில் சேர்ந்து தனி உயிராக மாறுவதாகவும், இறுதியில் பிரகிருதியின் இயல்புகள் நீங்கப் பெற்று மேன்மை பொருந்திய உயிராகிய வாசுதேவனைச் சென்றடைவதாகவும் கூறுகின்றது. பிறிதொரு இடத்தில் போரின் தொடக்கத்தில் அருச்சுனனுக்குக் கூறப்பட்ட ஏகாந்திக வழிபாட்டு முறையானது வாசுதேவ வழிபாட்டு மரபேயாகும் என்று மகாபாரதம் கூறுகின்றது. இம்மரபு நாராயணனால் உலகத் தோற்றங்கள் ஏற் படும் பொழுதெல்லாம் வெளிப்படுத்தப்படுவதாகும், நான்காவது உலகப் படைப்பின் பொழுது இது இருமுறை வெளிப்படுத்தப்பட்ட தால் சாத்வதம் என்ற பெயரைப் பெற்றதாகவும் கருதப்படுகின்றது. இம்மரபானது கொல்லாமையை அடிப்படையாகக் கொண்டதாகும்

மேற்கூறியவற்றிலிருந்து வாசுதேவ வழிபாட்டு மரபு கொல் லாமையை அடிப்படையாகக் கொண்டது, படையல் பொருட்கள் ஆரண்யகங்களில் உள்ளபடி பெறப்படல்வேண்டும் இறைவர்கட்கெல் லாம் இறைவன் வாசுதேவன் அல்லது அரி என அழைக்கப்படுவது; இம்மேலான இறைவன் வேள்விமுறை கொண்ட வழிபாடுகளின மூலமோ, துறவற வழிபாட்டு முறைகளினாலோ காணப்படாது, அன்பின் ஒருமுனைப்பான ஒரே இறைவன் வழிபாட்டு முறையிலேயே காணப்பெறலாம், என்பன போன்ற செய்திகள் அடங்கியதாகும் என்று அறியலாம்.

நாராயணீயப் பிரிவின் இருவகை விளக்கங்களில் நாராயணனை விளக்கிய மரபு, பகவத்கீதையில் தெரிவிக்கப்பட்டுள்ள வழிபாட்டு மரபினை ஒத்திருக்கின்றது. பக்தியை அடிப்படையாகக் கொண்ட மரபு பகவத்கீதையில் தெளிவான ஒரு நிலையைப் பெறுகின்றது.

### *பகவத்கீதையில் காணப்படும் வைணவக் கருத்துக்கள் :-*

பகவத்கீதை மகாபாரதத்தின் ஒரு பகுதியாகும். வைணவ மெய்ப்பொருளியலின் அடிப்படைக் கருத்துக்களான ஆள் சார்புடைய

இறைவனையும், பக்தி மற்றும் பிரபக்திக் கோட்பாடுகளையும் சிறந்த முறையில் விளக்குவது கீதையாகும். மெய்ப்பொருளியலைப் பயன் வழிச் செலுத்துகின்ற உயிர்களையும், உலகையும் வாழும் இறைவனுடன் நெருங்கிய உறவு கொண்டதாக விளக்கும் முயற்சியே கீதை கீதை எண்ணற்ற பண்பு நலன்களையுடைய ஆள்சார்புடைய இறைவனையே மேலான, உயர்ந்த உண்மை எனக்கூறுகின்றது நிலையான பிரகிருதியையும் உயிர்களையும் இறைவனின் பகுதிகளாகக் கூறுகின்றது. வைணவ மெய்ப்பொருளியலில் காணப்படும் இறை. உயிர், உலகு மற்றும் இவற்றிடை அமைந்த உறவு ஆகியவை கீதையில் காணப்படுகின்றன.

வீடு பேறடைந்த உயிர் இறைவனைப் போன்றே இருக்கும் என்று கூறுவதுடன் அவ்வுயிரை 'அக்சரம்' என்றும். தளைக்குட்பட்ட உயிரைச் 'சரம்' என்றும் கீதை குறிப்பிடுகின்றது. முக்கூறுகளையுடைய பிரகிருதி இறைவனின் உண்மையில்பைத் தளைக்குட்பட்ட உயிரிடமிருந்து மறைத்து அதனை உலகப் பொருள்களை நுகரச் செய்கின்றது என்றும், அப்பிரகிருதி இறைவனின் விருப்பத்தினாலேயே உலகமாகப் படிமுறை வளர்ச்சியை உயிர்களின் வினைப் பயன்களுக்கேற்ற வகையில் பெறுகின்றது என்றும், இப்பிரகிருதியின் இயல்பினாலேயே உயிர் தன்னைச் செயல்புரிபவனாகக் கருதுகிறது என்றும் கீதை குறிப்பிடுகின்றது.

எல்லையற்ற இறைவன் உயிரின், தொடர்பாகத் தன்னை ஒரு எல்லையுடைய வடிவில் வெளிப்படுத்திக் கொள்கின்ற, தோன்றி வந்தவடிவ நிலையாகிய அவதார விளக்கமும் கீதையில் காணப்படுகின்றது. வரம்பற்ற நிலையிலிருந்து வரம்புக்குட்பட்ட நிலைக்கு இறைவன் தனது மாயை என்ற ஆற்றலால் தன்னை மாற்றிக் கொள்கின்றான். இந்நிலையில் அர்ச்சுனனின் தேரோட்டியாகிய கிருட்டிணன் விட்டுணுவின் மற்றுமொரு வடிவம் என்று கூறுவது கிருட்டிண-விட்டுணு ஒருமையினை விளக்குகின்றது கிருட்டிணன் அர்ச்சுனனுக்குத் தனது உலக வடிவைக் காட்டியது இவ்வுண்மையைச் சுட்டுவதேயாகும்

இராமானுசருடைய, வினை, அறிவு, மற்றும் பக்தி நெறிகளின் இணைக்கத்தைக் குறிப்பிடுகின்ற கருத்துக்களும் கீதையில் காணப்படுகின்றன. ஒரே இறைவனை வழிபடுதலாகிய பக்தி நெறியின் சிறந்த விளக்கமே பகவத் கீதை எனலாம். பக்தி நெறியே

உயர்ந்த நெறி என்று கூறும் கீதை, வினையையும், அறிவையும் அதற்கு இன்றியமையாத துணைகளாகும் என்கின்றது. அறிவும் செயலும் ஒன்றுக்கொன்று எதிரானதல்ல; மாறாக ஒன்று மற்றொன் றாக மாறும் தன்மையது. தன் உணர்வால் விளக்கமுறும் செயலே அறிவு; அறிவைத் தூய்மையாக்கும் பற்றற்ற செயலே உண்மை யான செயலாகும். பற்றுதலின்றிச் செய்யப்படும் செயல் மனத்தைத் தூய்மைப்படுத்தி உண்மையை உணர்வதற்குரிய தகுதியைக் கொடுக் கின்றது. உயர்ந்த இருப்பின் இயல்பை ஒருவன் அறிவதனால் இறைவன் மீது அன்பும், மதிப்பும் அவனிடம் ஊற்றெடுக்கும். இறைவன் மீது கொள்ளும் அன்பு பரபத்தி எனில், இவ்வன்பு படிப்படியாக வளர்ந்து இறைவனிடமே தன் இருதயத்தை வைத்து வேறெதனையும் பொருட்படுத்தாத நிலையான பரமபத்தியில் கொண்டு செலுத்தும். இது இறுதியில் கிருட்டிணனான இறைவன் "அனைத்துக் கடமைகளையும் விட்டுவிட்டு என்னையே புகலிட மாகக் கொள்; நான் அனைத்துத் தளைகளினிற்றும் உன்னை விடுவிப்பேன்" என்று கீதையின் இறுதிப் பகுதியில் கூறும் பரபத்தி நெறியில் சேர்க்கும். பரபத்தி நெறியே அனைத்திலும் உயர்ந்த நெறி என்பதே வைணவத்தின் கருத்து.

மகாபாரதத்தின் நாராயணீயப் பிரிவு வேத உபநிடதங்களில் குறிப்பிடப்பட்ட விட்டுணுவை வாசுதேவன், நாராயணன் மற்றும் விட்டுணுவின் வெளிப்பாட்டுருவ வடிவங்களில் ஒன்றுபடுத்தியதெனில், கீதை விட்டுணுவை கிருட்டிணன் மற்றும் தோன்றிவந்த வடிவங் களுடன் ஒன்றுபடுத்துகிறது எனலாம்.

*இராமாயணம் :*

இராமாயணம் மகாபாரத்தில் கிருட்டிணன் உரைத்த அறவழி யில் இராமன் வாழ்ந்து காட்டிய முறையை விளக்குவதாகும். இக் காப்பியம் பத்திமரபினைப் பரப்புவதில் பெரிதும் துணை நிற்பதால் வைணவத்தின் சிறந்த நூலாகக் கருதப்படுகிறது வால்மீகி இயற்றிய இராமாயணம் இருபத்து நான்காயிரம் பாடல்களைக் கொண்டது. காயத்திரி மந்திரத்தின் இருபத்துநான்கு எழுத்துக்களையும் முறையே ஒவ்வொரு ஆயிரத்தின் முதற்பாடலில் முதல் எழுத்தாகக் கொண்டு விளங்குவது இக்காப்பியத்தின் மிகப் பெரிய சிறப்பாகும். இராமன் வாழ்ந்து காட்டியதை இறைவன் மக்களை உய்விப்பதற்காக மேற் கொண்ட வடிவாகக் காண்பர் வைணவர்கள்.

### *புராணங்களில் காணப்படும் வைணவக் கருத்துக்கள் :*

புராணங்கள் என்பது பழைய கால வரலாற்றின் உருவக வடிவிலமைந்த மரபுவழிக் கதைகளாகும். அவை சமயத்தின் நுணுக்கமான ஆழ்ந்த உண்மைகளை புரிந்து கொள்ளும் வகையில் தருபவையாகும். புராணம் என்ற சொல் பழமை என்றே பொருள்படும். பிரும்மா, ஒரு சமயம் உலகமுழுமையின் படைப்பு, ஒடுக்கம் பற்றியும், துறவியர் மற்றும் மன்னர்களின் குடிவழி பற்றியும், மனுவின் காலங்களைப் பற்றியும் மரபுவழிபட்ட உரையைத் துறவியரிடையே நிகழ்த்தியதாகவும், அந்த உரையின் அடிப்படையில் வியாசர் ஒரு ஒரு புராணத் தொகுதியை இயற்றி அவருடைய மாணவரான இராமரர்சனருக்கு விளக்கியதாகவும், இவர் தனது மூன்று மாணாக்கர்களுக்கு அதனைத் தெரிவிக்க, இந்நான்கு மாணவர்களும் தனித் தனியே ஒவ்வொரு புராணத்தை இயற்றினர் என்றும், இந்நான்கு புராணங்கள் படிப்படியாகப் பதினெட்டுப் புராணங்களாக வளர்ந்தன என்று இவ்விலக்கியங்களைப் பற்றிக் குறிப்பிடுவதுண்டு. பதினெண் புராணங்களில் விட்டுணு, பாகவத, பத்ம, கருட, நாரத மற்றும் வராக புராணங்கள் வைணவ வழிபாட்டு மரபைச் சார்ந்தவை. இவைகளின் படைப்பும் ஒளி பொருந்தியதென்பர். இவற்றில் விட்டுணு புராணம், பாகவத புராணம் வைணவ அடிப்படைக் கருத்துக்களை விளக்குபவையாகும்.

### *விட்டுணு புராணம் :*

இப்புராணம் வாசுதேவனே உயர்ந்த உண்மையெனக் கூறுகின்றது. அவன் வரம்பெற்றவன், மாறுதலற்றவன், முழுமையானவன், அனைத்திலும் பரவிநிற்பவன் எனவும், அனைத்தையும் கடந்த மேலான உயிர் எனவும், இரணியகர்ப்பன், அரி, சங்கர்சணன், தாரா, வாசுதேவன், அச்சுதன், நாராயணன், புருடோத்தமன், பிரும்மா, சிவன் மற்றும் இதுபோன்ற பெயர்கள் அவனுக்கு மட்டுமே பொருந்துவது என்றும் குறிப்பிடுகின்றது. விட்டுணுவின் அடிப்படை இயல்பானது அஃனது பல்வேறு வெளிப்பாடுகளான புருடன், முதன்மைப்பொருள், காலம் ஆகியவற்றினால் தாக்கமுறாத கடந்த நிலையாகும். அவ்வெளிப்பாடுகள் இறைவனின் தன் வெளிப்பாடுகளாதலால் உண்மையானதும், இவ்வுலக முறைமைகளின் அனைத்து மாற்றங்களுக்கும் அடிப்படையானவையுமாகும். இவ்வெளிப்பாடுகள் இறைவனின் லீலா வாதம் எனப்படுகிறது.

இறைவன் இருப்பும், இயங்கும் இயல்புடையது உலக. உயிர்களின் இயக்கங்கள் அனைத்தும் இறைவனது மாயை ஆற்றலினால் நடைபெறுகின்றன. உலக முறையில் பருப்பொருள் கோட்பாட்டைவிட அறக்கோட்பாடு உயர்ந்தது. ஆனால் அன்பு, கருணைக் கோட்பாடுகள், அறக்கோட்பாட்டினையும் விட உயர்ந்தவை. இறைவனின் தோன்றிவந்த வடிவங்களில் கிருட்டிண வடிவமே அனைத்து வகையிலும் முழுமையுடையதாகையால் கிருட்டிணனின் இம்மண்ணுலக வாழ்க்கை வரலாற்றை இப்புராணம் விவரிக்கின்றது. இப்புராணத்தை இராமானுசர் தனது சிரீபாடியத்தில் பெரும்பான்மையான இடங்களில் மேற்கோளாகக் குறிப்பிடுகின்றார்.

### *பாகவத புராணம் காட்டும் பாகவத வழிபாட்டு மரபு*

பாகவத புராணம், விட்டுணு தோன்றிவந்த வடிவங்களில் நிகழ்த்திய அருஞ்செயல்களையும் வீரச்செயல்களையும் விளக்கும் நூல். பாகவதம் என்பது பகவானின் பெருமையைக் கூறுவதாகும். பக்தி உணர்வை வளர்க்கும் மிகச்சிறந்த நூல் என்று இதனைக் குறிப்பிடுவர். வாசுதேவனைக் கிருட்டிணனுடன் ஒன்றுபடுத்தியப் பின்னர் இவ்விரண்டும் நாராயணனுடன் ஒன்றுபடுவதாகவும் இந் நாராயணனே பரம்பொருளான விட்டுணு என்றும் இப்புராணம் கூறும். இந்நூலின் பன்னிரண்டு தொகுதிகளில் பத்தாவது தொகுதி கிருட்டிணனின் வாழ்க்கையையும், அவனது சாதனைகளையும் விவரிக்கின்றது ஏனெனில் கிருட்டிணனே 'முழுமையாகத் தோன்றி வந்த வடிவமும் பரம்பொருளுமாகும் எனப் பாகவதம் கருதுகின்றது.

பாகவதம் இறைவனைப் பண்புநலன்கள் உடையவராகவே ஏற்கின்றது இறைவன் தன் இயல்பைப் பற்றிப் பின்வருமாறு கூறுவதாக அதில் குறிப்பிடப்பட்டுள்ளது. "தொடக்கத்தில் (உலக முறைமையாக எனது தன்வெளிப்பாட்டிற்கு முன்பு) நான் மட்டுமே இருந்தேன். என்னைத் தவிர வேறு எந்த இருப்பும் வெளிப்பட்ட நிலையிலோ அல்லது வெளிப்படாத நிலையிலோ இல்லை. பலவாந்தன்மையானவை படைக்கப்பட்ட பின்பும்நான் தனியிருப்பைக் கொண்டிருந்தேன். (ஏனெனில்) அவையனைத்தும் எனது தன் வெளிப்பாடுகளேயன்றி என்னிலிருந்து பிரிந்தனவோ, முற்றிலும் தனியிருப்பையுடையனவோ அல்ல. அவையனைத்தையும் அழித்த பின்பும் கூட நான் மட்டுமே இருப்பைக் கொண்டிருந்தேன்,

(ஏனெனில் காலத்திற்குட்பட்ட எனது தன் வெளிப்பாடுகளான அவை முடிவில் என்னிலே ஒடுங்குகின்றன)". இக்குறிப்பிலிருந்து இறைவனது கடந்த, உள்ளுறை நிலைகளும், அவனது ஆற்றலால் அவனிலிருந்தே உலகம் தோற்றுவிக்கப்பட்டு, அழிக்கப்படுவதையும் இருக்கின்ற அனைத்திற்கும் அவனே அடிப்படை என்பதனையும் அறியலாம். மேலும் இறைவன் உலகைப் படைப்பதன் நோக்கம் உயிர்களுக்கு வினைப்பயன்களை அளித்து, அவைகளை நுகரச் செய்வதும். தன்னை வழிபடுவோர்க்கு தன் அன்பருளால் வீடு பேறு அளிப்பதும் ஆகும் என்பதை அறியலாம்.

இவ்வாறு இறைவனைப் பரம்பொருளாகப் பாகவதம் குறிப்பிட்டாலும், அது ஆள்சார்புடைய இறைநிலையையே மனித அன்பிற்கும், பத்திக்கும், வழிபாட்டிற்கும் உரியதாக வலியுறுத்துகின்றது. எனவே தோன்றி வந்த வடிவநிலை பாகவதத்தின் இன்றியமையாத கோட்பாடாக விளங்குகின்றது. தூய்மையான உணர்வு எனப்படும் புருடக் கருத்தமைவு அதிகம் பயன்படுத்தப்படுகின்றது. கிருட்டிணனைப் புருடோத்தமன் என்று கருதுகின்றது. அவனே நாராயணன் உலகம், உடல், உயிர் கொண்டதாகக் கருதி கிருட்டிணனை உலக வடிவினனாகக் கூறுகின்றது இவ்வுலகம் பிரகிருதியிலிருந்து படிமுறை வளர்ச்சி பெற்றதென்றாலும் அதன் காரணம் இறைவனின் மாயை எனும் ஆற்றலே எனவும் கருதுகின்றது இதுவே இறைவனின் விளையாட்டு (லீலை) எனப்படுவது தோன்றி வந்த வடிவநிலையும் விளையாட்டு நிலையும் ஒன்றுக்கொன்று தொடர்பானவையே

மனித வாழ்வு மிகவும் உயர்ந்ததெனப் பாகவதம் கருதுவதுடன் மனிதன் வரம்பற்ற உணர்வைப் பெற்று இறைநிலையை அடையக் கூடியவன் என்கின்றது. சிறந்த துறவிகள், பக்தர்கள், கடமையுணர்வுள்ளோர் அத்தகையோரே, இறைவனுக்கும் மனிதனுக்குமிடையே பாலமாக அமைவோர் இந்நிலை பெற்றவர்கள். தோன்றி வந்த வடிவினராகவே நாரதர், கபிலர், தாத்தரேயர், பிருகு, வியாசர் போன்றோர் கருதப்படினும் கிருட்டிணனே அவ்வடிவுகளில் மிக உயர்ந்து நிற்பவன். அவனது பிருந்தாவன விளையாட்டுக்கள் இறைத் தன்மையின் மிகச் சிறந்த பண்பும், ஆன்மீக உயர்மதிப்புடையனவும் ஆகும்.

பாகவத வழிபாட்டு மரபின் அடிப்படையே பத்தி தான். இப்பத்தி நெறி ஏனைய அறிவு, வினைநெறிகளுடன் இணைந்ததே

யாகும். ஏனெனில் அன்பின்றி, வினைகளோ அல்லது அறிவோ பயனற்றவையாகும். அன்பிலும் இருநிலைகள் உண்டு. ஒன்று இறைவன் உயிர்களிடம் காட்டும் அன்பு, அதனை இறைக்கருணை எனலாம். மற்றது உயிர்கள் இறைவன் மீது கொள்ளும் அன்பு: இதனைப் பக்தி என்கிறோம். இதில் இறைக்கருணையாகிய அன்பு என்றும் இயல்பாக அனைவரிடத்தும் வெளிப்படுவது. அது இறை அன்பின் இயற்கை. அது உயிரின் வீடு பேற்றில் வினைக்கோட் பாட்டின்வழி செயல்படுகின்றது. பாகவதமும் வழியாக ஏற்கப்படும் அன்புநெறி, மற்றும் கடந்த நிலை அன்பு முதலியவைகளையும், பல்வேறு வகையான அன்பு நிலைகளையும் குறிப்பிடுகின்றது. பாக வதம் சமுதாய, சமயச் சடங்குகளின் துறவை ஏற்பதில்லை. உறுதி யான அன்பையே, இறைவனை ஒன்றாக நாராயணனாக அல்லது வாசுதேவனாகக் கருதி வழிபட்டுச் செலுத்தும் அன்பையே வீடு பேற்றிற்கு வழியாகச் சொல்கின்றது.

பாகவதம் பாஞ்சராத்திர ஆகமங்களை அடிப்படையாகக் கொண்டது. வாசுதேவனை அவனது வெளிப்பாட்டு வடிவங்களில் வணங்கும் நிலைகளாகப் பின்வருவனவற்றைக் குறிப்பிடுகின்றது. 1) அபிகமனம்-உடல், சொல், எண்ணம் இறைவனிடம் நிலைபெறக் கோயிலுக்குச் செல்லல். 2) உபாதானம்-வழிபாட்டிற்குரிய பொருள் களைச் சேகரித்தல் 3) இச்சியம் - வழிபடுதல் 4) சுவாத்தியாயம் - இறைவனைப் பற்றிப்புகழும் நூல்களைத்தானே கற்றறிதல் 5) யோகம் -இறைவனை ஒரு முனைப்பாகச் சிந்தித்தல்

### *சாத்வத வழிபாட்டு மரபு*

மகாபாரதத்தின் தொடக்க பருவத்தில் வாசுதேவன் சாத்வதன் எனவும், துரோணபருவத்தில் சாத்யகி எனவும், உத்தியோக பருவத்தில் சனார்த்தனன் எனவும் குறிப்பிடப்படுகின்றான். பீசுமர் இறைவன் வாசுதேவன் எனப்படுவான் என்றும், அவனை நால்வகைச் சமூகத் தினரும் வழிபட வேண்டுமென்றும், துவாபர காலத்தின் முடிவு மற்றும் கலிகாலத்தின் தொடக்கத்தில் சாத்வதக் கோட்பாடுகளுக் கிணங்க சங்கர்சணனால் அவன்புகழ் பாடப்படும் என்றும் கூறுகின்-றார். விட்டுணு புராணத்தில் யாதவர் மற்றும் விருசினி குலத்தின் வழித்தோன்றல்களைக் குறிப்பிடுமிடத்தில் சாத்வதன் அம்சத்தின் மகனெனவும் அவனைப் பின்பற்றுவோர் சாத்வதர்கள் என அழைக் கப்படுவார்கள் எனவும் குறிப்பிடப்பட்டுள்ளது. பாகவதமும் பரம்

பொருளான இறைவனை ஒரு குறிப்பிட்ட முறையில் வழிபடுபவர்கள் சாத்வதர்கள் என அழைக்கப்படுவர் என்று குறிப்பிடுவதுடன், அவர்களை யாதவர்குலப் பிரிவுகளான அந்தகர்கள், விருசினிகள் ஆகியோருடன் இணைத்துச் சொல்கின்றது

மேற்கூறியவற்றிலிருந்து சாத்வதம் என்பது விருசினி இனத்தின் மற்றொரு பெயர் என்பதும் வாசுதேவன், சங்கர்சணன், அநிருத்தன், பிருதியும்னன் ஆகியோர் அவ்வினத்தைச் சேர்ந்தவர்கள் என்பதனையும், சாத்வதர்கள் வாசுதேவனை இறைவனாக ஒரு குறிப்பிட்ட முறையில் வழிபட்டவர்கள் என்பதனையும் அறியலாம். இவை மகாபாரதத்தின் நாராயணீயப் பகுதியில் சொல்லியவற்றை உறுதி செய்கின்றது. எனவே சாத்வத இனம் மேன்மையான இறைவனை வாசுதேவனாகவும் கிருட்டிணனாகவும் கருதி, அவனை அன்பினால் வழிபடுவதே வீடு பேறடையும் வழியாகக் கருதியதையும், சந்திர குப்த மௌரியரின் காலத்தில் மாசிடோனியத் தூதுவரான மெகசுதனிசு குறிப்பிட்டுள்ளதைக் காணுமிடத்து இத்தகைய வழிபாட்டு மரபுடன் கி. மு. நான்காம் நூற்றாண்டிலேயே விளங்கியதை அறியலாம். இதிலிருந்து இம்மரபு உபநிடதக் காலத்திலேயே தொடங்கியிருக்கும் எனலாம்.

சாத்வதர்களின் இறைவனான வாசுதேவன் அவ்வினத்தின வழித்தோன்றலே என்பதைப்பற்றி பீசுமபருவத்தில் பிரம்மன் புருட பரமேசுவரனை நோக்கிக் கூறுவதிலிருந்து அறியலாம். அவர் கூறுவதாவது "முன்னொரு காலத்தில் பரம்பொருளாகிய வாசுதேவன் சங்கர்சணனையும், சங்கர்சணன் பிருதியும்னனையும், பிருதியும்னன் அநிருத்தனையும், அநிருத்தன் விட்டுணுவையும், விட்டுணு என்னையும் (பிரம்மா) முறையே படைத்தனர் அதேபோன்று தற்பொழுது மீண்டும் மனித வடிவங்களில் தோன்றி யாதவர் குலத்தை விரிவுபடுத்த வேண்டும்". இதே கோரிக்கையை இறைவனிடம் பிரசாபதி வைத்ததாக அப்பகுதியில் மேலும் குறிப்பிடப்பட்டுள்ளது. வாசுதேவன் என்ற பெயரில் மனிதர்களிடையே தோன்ற வேண்டும் என்பதே இவைகளின் கருத்தாகும். எனவே இறைவன் தனது நால்வகை வெளிப்பாட்டு வடிவப் பெயர்களுடன் யாதவர் இனத்தில் தோன்றி சாத்வத வழிபாட்டு மரபை விளக்கியுள்ளான் எனலாம். எனவே சாத்வதர்களைப் பொறுத்தமட்டில் வாசுதேவன் தனிமனிதப் பெயரேயாகும்,

பாகவதத்தில் இப்பெயர் இறைவனுக்குரியதாக உயர்த்தப் பட்டுள்ளது கிருட்டிணன், சனார்த்தனன், கேசவன், விருசினி முதலியவை இனப் பெயர்களல்லவாதலால் அவை பின்னர் வாசு தேவனுக்கு அளிக்கப்பட்டிருக்கலாம். இவற்றுள் கிருட்டிணன் என்பது வேதகாலத்து ஒரு முனிவரின் பெயராகும். இவர் அங்கிரசு குலத்தைச் சார்ந்தவர் என வேதம் குறிப்பிடுகின்றது சாந்தோக்கிய உபநிடதம் தேவகியின் மைந்தனான கிருட்டிணன் அதே குலத்தைச் சார்ந்தவன் எனக் குறிப்பிடுகின்றது பின்னர் கிருட்டிணர்களைக் கொண்ட கிருட்டிணகுலம் தோன்றியது. இவர்களின் முதல்வரான கிருட்டிணன் இறைநிலைக்கு உயர்த்தப்பட்ட காலத்தில் கிருட்டிணன் வாசுதேவனே எனக்கருதும் மரபு தோன்றுகின்றது. இவ்வாறு தான் வாசுதேவனுக்குக் கிருட்டிணன் என்ற பெயர், அதே குலத்தைச் சார்ந்ததால் அளிக்கப்பட்டது எனலாம். இந்து சமயத்தின் பல கடவுட் கோட்பாடு பல கடவுள்களை ஒரு கடவுளின் வெளிப்பாடாகக் கருதி ஒரு கடவுட் கோட்பாடாக விளக்குவதில் அமைந்ததே இவ்வாசுதேவ கிருட்டிண இணைப்பெனலாம்.

***வாசுதேவ-நாராயண, வாசுதேவ-விட்டுணு, வாசுதேவகிருட்டிண-கோபால கிருட்டிண ஒன்றிப்புக்கள்.***

வைணவ மரபில் பரம்பொருளாக இன்று கருதப்படும் விட்டுணு, நாராயணன், வாசுதேவன் போன்ற இறைவர்களின் பெயர்கள் எவ்வாறு ஒரே இறைவனைச் சுட்டும் என்பதை அவைகளின் இயல் புகளைக் கொண்டு ஒன்றுபடுத்தியதன் வழி அறியலாம். வேத உபநிடதங்களில் விட்டுணுவாக விளங்கிய இறைவன் காப்பியங் களிலும் புராணங்களிலும் நாராயணன், வாசுதேவன் எனக்கருதப்படு கிறான்.

நாராயணன் என்ற சொல்லின் பொருள் நரர்களின் தங்கு மிடம் என்பதாகும் நாரணர்களாகிய மனிதர்கள் மற்றும் கடவுள் களின் இறுதி நோக்கமாக, தங்குமிடமாக கேசவனை, அரியை நாராயணீயப் பகுதி குறிக்கின்றது. நாராயணன் வசிக்குமிடமாகிய பாற்கடலிலிருந்தே அனைத்தும் தோன்றியது என இருக்கு வேதம், வாயு, விட்டுணு புராணங்கள் கூறுகின்றன. நாராயணனைப் பற்றிய கருத்துக்கள் பிராம்மண மற்றும் ஆரண்யப் பகுதிகளில் விரிவடைந்தன. சதாபாத பிராம்மணம் ஒரு வேள்வியில் நாராயணன் தன்னை எல்லா உலகங்களிலும், எல்லாக் கடவுள்களிடத்தும், எல்லா

வேதங்கள், உயிர்க்காற்றுகளிலும் வைத்தான் என்று குறிப்பிடுவது அனைத்திற்கும் மேலான ஒரு நிலையை நாராயணன் பெறுவதைக் குறிக்கின்றது. இம்மேலான நிலையை, அவன் தொடர்ந்த ஐந்து இரவுகளில் நடத்திய வேள்வியினால் (பாஞ்சராத்ர சரித்திர) அடைந்தான் எனக் குறிப்பிடுகின்றது. மற்றோர் இடத்தில் நாராயணனே புருட சூத்திரத்தினை இயற்றியவன் எனக் குறிப்பிடுவது அவனுக்குப் புருடன் என்ற பெயர் வந்ததின் அடிப்படையை விளக்குவதற்கே எனலாம்.

தைத்திரீய ஆரண்யகத்தில், உபநிடதத்தில் குறிப்பிடப்படும் பரம்பொருளின் பண்புகளுடன் நாராயணன் குறிப்பிடப்படுகின்றான். மகாபாரதத்திலும் புராணங்களிலும் அவன் படைப்புக் கடவுளாகப் பேசப்படுகின்றான் இவ்வாறு நாராயணன் படைக்கப்பட்டவைகள் வழிபடப்படும் பொருளாக மாறுகின்றான். சுவேததீபம் என்றழைக்கப்படும் வெண்தீவு நாராயணனின் இருப்பிடம். இங்கு சென்றுதான் நாரதர் நாராயணனிடம் ஒரே இறைக் கொள்கையைக் கற்றுத் திரும்புகிறார். இவ்வாறு பிராம்மணங்களின் காலத்தில் நாராயணன் மேலான நிலைக்கு உயர்த்தப்பட்டுள்ளது காப்பிய காலங்களில் தோன்றிய வாசுதேவ வழிபாட்டுக்கு முந்திய நிலையாகும் வாசுதேவன் நாராயணனுடன் ஒன்றுபடுத்தப்பட்டது காப்பிய காலத்தில்தான். வனபருவத்தில் எங்கும் பரவியிருக்கும் நீரின் மீது ஆலிலையில் படுத்திருந்த சிறுவன் மார்க்கண்டேயனை விழுங்க அவன் வாயில் அனைத்துலகையும் கண்டு திகைத்து வெளியே போந்து "அவனை யார்"? என்று கேட்க "நானே நாராயணன்" என அச்சிறுவன் கூறுவதாகக் குறிப்பிட்டுள்ளது இந்த நாராயணனே வாசுதேவன் என நாராயணீயப் பகுதியில் குறிப்பிடுவது நாராயண-வாசுதேவ ஒருமைக்குச் சான்றுகளாகும். இந்த படைப்புக் கடவுளான நாராயணன், நரனுடன் இணைத்துச் சொல்லப்படும் நாராயணனின்றும் வேறுபட்டதெனினும் அதன் வளர்ச்சியென்பதை நாராயணீயம் சுட்டிச் செல்கின்றது. நாராயணீயத்தின் தொடக்கப்பகுதியில் மேலான உயிர் தனது நான்கு வடிவங்களான நரன், நாராயணன், அரி, கிருட்டிணன் ஆகியவர்கள் தருமத்தின் மக்களாகக் கூறப்படுகின்றனர் வாமன புராணத்தில் அகிம்சை இவர்களின் தாய் எனக் குறிப்பிடப்பட்டுள்ளது. எனவே நாராயணீயப் பகுதியில் குறிப்பிடப்படும் நரன், நாராயணன், முன்னொரு காலத்தில் முனிவர்களாகப் பத்ரிகாசிரமத்தில் தவமியற்றிவர்கள். ஆனால் மகாபாரதம் இயற்றப்பட்ட காலத்தில் இவ்விரு கடவுள்களும் மிக்க புகழுடன்

விளங்கியவர்கள். வனப்பருவத்தில் இவ்வுண்மைகள் தெளிவாகக் குறிப்பிடப்பட்டுள்ளன. ஆனால் உத்தியோகப்பருவத்தில் நரன் அர்ச்சுனனாகவும், நாராயணன் இறைவனாக, வாசுதேவனாகவும் கருதப்படுகின்றனர்.

இதேபோன்று வேதக்கடவுளான விட்டுணு தனது நெடிய மூன்று அடிகளால் இவ்வுலகை அளந்ததை மிகச்சிறப்பாகக் குறிப்பிடுவர் அவனது முதலிரண்டு அடிகள் கருதப்படினும் மூன்றாவது அடிக்காட்சிக்குரியது. இதனை உயர்ந்தோர் விட்டுணுவின் கடந்த அடி (பரமபதம்) என்கின்றனர். அங்கு கடவுள்கள் கிணற்றிலுள்ள தேனைச் சுவைப்பவர்களாகவும் இந்திரனுடைய தோழனாக விட்டுணு விளங்குவதாகவும் குறிப்பிடப்பட்டுள்ளது இவைகளிலிருந்து பிராம்மண, காப்பிய மற்றும் புராண காலங்களில் விட்டுணு மிக உயர்ந்த நிலையை எய்தியதை அறியலாம். இதன் காரணம் அவனது மூன்றாவது அடியேயாகும். பிராம்மணங்களில் வேள்வியின உச்சியை முதலில் சென்றடைந்து அனைவரிலும் உயர்ந்ததாக விட்டுணு குறிப்பிடப் படுகின்றார். மேலும் வேள்விக்குரிய இடத்தைப் பெறுவதில் அசுரர்கள் ஒரு குள்ளனின் அளவிற்கு நிலம் வழங்குவதாகக் கூற விட்டுணு தனது நெடிய வடிவம் கொண்டு அனைத்தையும் பரவி நின்று தன் மேலான நிலையை உணர்த்தியதாகவும் குறிப்பிடப்பட்டுள்ளது உயிரின் பயணத்தின் முடிவாக விட்டுணுவைக் கதா உபநிடதம் கூறுகின்றது ஆனால் காப்பிய காலத்தில் விட்டுணு மிக உயர்ந்த நிலையில் கருதப்பட்டு நாராயணன், வாசுதேவன் ஆகியவற்றுடன் ஒன்றுபடுத்தப்படுகின்றான்.

அனுகீதையில் துவாரகைக்குத் திரும்பிக் கொண்டிருந்த கிருட்டிணன் உத்தங்க முனிவருக்கு உயிரின் தத்துவத்தை விளக்கியும், தன்னுடைய விராடசுயவடிவைக் காட்டியுப சென்றான் என்று குறிப்பிட்டுள்ளது இவ்வடிவம் அர்ச்சுனனுக்குக் காட்டியதைப் போன்றதேயெனினும், இதனை வைணவ வடிவம் என்றும் அனுகீதை மற்றும் பகவத்கீதையின் இடைப்பட்ட காலத்திலேயே வாசுதேவ கிருட்டிணன் விட்டுணுவுடன் ஒன்றுபடுத்தப்பட்டது என்பதும் வைணவ வழிபாட்டு மரபாகும்.

அரிவமிசம், வாயு மற்றும் பாகவத புராணங்களில் ஆயர் பாடியில் கம்சன் மற்றும் ஏனைய அசுரர்களை அழிக்க கிருட்டிணன் தோன்றிவந்த வடிவம் எடுத்தான் எனக்குறிப்பிட்டுள்ளதிலிருந்து இம் மரபு ஏற்கனவே வழக்கிலிருந்ததையும், விருசினி இனத்தின் தலைவனான வாசுதேவனை இவ்வாறு ஆயர்பாடிக் கிருட்டிணனுடன் இணைத்து வந்ததனையும் அறியலாம்.

பகவத் கீதையில் கோவிந்தன் என்ற பெயரும் கிருட்டிணனைக் குறிப்பதாக உள்ளது கோகுலத்தில் வாழ்ந்த சிறுவயது கிருட்டிணன் ஆவினங்களுடன் கொண்டிருந்த தொடர்பால் அப்பெயர் வழங்கப் பட்டிருக்கலாம். ஆனால் மகாபாரதம் ஆதிபருவத்தில் கோவிந்தன் என்னும் பெயர் அவன் பன்றி வடிவில் நீரில் அமிழ்ந்த உலகத்தை வெளிக் கொணர்ந்ததனால் ஏற்பட்டது என்றும், சாந்தி பருவத்தில் ''நான் கோவிந்தன் என்று அழைக்கப்படுவது முன்னொரு சமயத்தில் இழக்கப்பட்ட உலகை வெளிக்கொணர்ந்ததாலேயேயாகும் என்று வாசுதேவன் கூறுவதாகவும் உள்ளது. கோவிந்தன் என்ற பெயர் பசுவினத்தைக் கண்டதால் இந்திரன் கோவிந்து என வழங்கப்பட் டான் என இருக்கு வேதத்தில் குறிப்பிட்டதன் மருவு எனலாம். இக் கோவிந்து வாசுதேவ கிருட்டிணனின் உயர்ந்த நிலையில் கோவிந்தன் என வழங்கப்பட்டிருக்கலாம் என்று கருதுவது சிறப்பானதாகும்.

கோகுலகிருட்டிணனின் சிறுபிள்ளை விளையாட்டிற்குச் சான் றாக விளங்கும் அரிவமிசம் என்ற நூல் கி.பி.மூன்றாம் நூற்றாண்டைச் சார்ந்தது எனலாம். ஏனெனில் கிருட்டிணனின் வளர்ப்புத் தந்தை யான நந்தனின் மரபினர் என்று கருதப்படும் அபிரகுலத்து ஈசுவர சேனன் என்னும் மன்னனின் கல்வெட்டு நாசிக்கில் உள்ளது. அது கி.பி. மூன்றாம் நூற்றாண்டின் இறுதிக் காலத்தது. கத்தியவாடில் உள்ள குந்தா என்னுமிடத்துக் கல்வெட்டொன்று அபிரா எனப்படும் இருத்ரபூபதி என்னும் படைத் தலைவனைக் குறிப்பிடுகின்றது அதன் காலம் கி பி. நூற்றுஎண்பது என்று குறிப்பிடப்பட்டுள்ளது. இதிலிருந்து அபிரர்குலத்தினர் கி பி. முதல் நூற்றாண்டிலிருந்து மூன்றாம் நூற்றாண்டுவரை செல்வாக்குப் பெற்றிருந்தனர் எனலாம் இவர்களே கிருட்டிணன் பிறப்பு, அவனது வளர்ப்புத் தந்தையின் அறிவு, கிருட்டிணன் இளமைக்கால வீரச்செயல்கள் பற்றிய கதைகளை வளர்த்தனர் எனலாம். பின்னர் இக்கோபால கிருட்டிணன் வாசுதேவ கிருட்டிணனுடன் ஒன்று படுத்தப்பட்டிருக்கலாம்.

இவ்வாறு வேதக்கடவுளான விட்டுணுவும், உலகம், மெய்ப் பொருள் கடவுளான நாராயணனும், வரலாற்றுக்குட்பட்ட வாசு தேவனும், பின்னர் வந்த கோபால கிருட்டிணனும் ஒன்றாக்கப்பட்டு இன்றைய வைணவ வழிபாட்டு மரபின் இறைவனாகக் கருதப்படு கின்றது என்பதனை இதுவரை சொல்லப்பட்ட செய்திகளிலிருந்து அறியலாம்.

## 4 பாஞ்சராத்திர வழிபாட்டு மரபு

பாஞ்சராத்திர வழிபாட்டு மரபு பாஞ்சராத்திர இலக்கியங்களில் காணப்படுவதாகும். இவ்விலக்கியங்கள் விட்டுணுவின் தனிப்பட்ட மேலாண்மையை நிலைநாட்டுவதுடன் அவனுக்கு மட்டுமே பத்தி செலுத்த வேண்டும் என்று உறுதியுடன் கூறுகின்றன. பாஞ்சராத்திரம் என்னும் சொல் மிகப் பழமையானது. சதா பரத பிராம்மணத்தில் முதன் முதலில் இச்சொல் குறிப்பிடப்பட்டுள்ளது. அதில் பாஞ்சராத்திரம் எனப்படும் புருடமேத வேள்வியைச் செய்வதன் மூலம் நாராயணன் அனைத்தையும் கடந்தும், அனைத்துமாக இருக்கவும் விரும்பினான் என்று சொல்லப்பட்டுள்ளது. இவ்வாறு புருடமேத வேள்வியின் பெயரடைச் சொல்லாகப் பயன்படுத்தப்பட்ட பாஞ்சராத்திரம் பின்னர் தனிச் சொல்லானது. இதன் பொருள் ஐந்து இரவுகளில் அக்கினிசுதோமம், உத்தியம், அதிராத்ரம், உத்தியம், அக்கினிசுதோமம் என்ற வரிசைப்படி செய்து முடிக்க வேண்டிய வேள்வியாகும். இவற்றின் கால அளவுகள் முதலிலிருந்து மூன்றாவதுவரை உயர்ந்து செல்வதாகும். இவற்றுள் முதலாவதும், இரண்டாவதும் இருமுறை செய்ய வேண்டியுள்ளதால் இதனை உபயதோ-சோதி எனவும், உபயதா-உத்தியம் எனவும் வழங்குவர் கால அளவுகளின் மாறுபாட்டினைக் கருதி யவமாத்தியம் எனவும் வழங்குவர். இதன் பொருள் வால்கோதுமை (யவை)யின் நடுப்பாகம் பெருத்தும் ஏனைய பாகங்கள் சிறுத்தும் வருவதைப் போன்றதாகும். பாஞ்சராத்திரம் அல்லது புருடமேத வேள்வி புருடசூக்தத்தினை ஓதிக்கொண்டே செய்யப்படுவதாகும். இவ்வேள்வியில் உயிர்ப்பலி இன்றி தூய்மையான வெண்ணெய் பயன்படுத்தப்படும்.

பாஞ்சராத்திரம் எனும் சொல் பின்வரும் வகைகளிலும் பொருள் கொள்ளப்படுகின்றது. 1. பாஞ்சராத்திரம் என்பது, இதன் முன்னிலையில் சாங்கியம், யோகம், பௌத்தம், சமணம், காபாலம் போன்றவற்றின் இலக்கியங்கள் ஒளி இழப்பன என்பதாகும் 2 எவ்வாறு இரவு சூரியனின் தோற்றத்தினால் முடிவிற்குக் கொண்டு வரப்படுகின்றதோ அவ்வாறே இவ்விலக்கியத்தின் முன் ஏனையவை முடிவைப் பெறும். 3. இராத்ரம் என்ற சொல் அறிவு என்றும் பொருள்படும். பாஞ்சராத்திரம் என்பது ஐவகைப்பட்ட அறிவைக் கருதுகின்ற இலக்கியமாகும். 4 இராத்திரம் என்பது அறிவின்மையையும், பசனம் என்பது அழிவையும் குறிக்கும். எனவே பாஞ்சராத்திரம் அறியாமையை அழிக்கின்ற ஒன்றாகும்.

5. இறைவனின் கடந்த, உள்ளுறை, வெளிப்பாட்டு, தோன்றிவந்த படிம வடிவங்களைப் பற்றிப் பேசுகின்ற இலக்கியமாகும். 6. பாஞ்சராத்திர இலக்கியம் இறைவனை உணர்வதன் மூலம் ஐந்து புலனுறுப்புக்களின் செயல்களை அழிக்கலாம் என்று கூறுவதாகும். 7. பாஞ்சராத்திரம் என்பது இறைவனாகிய நாராயணனால் ஐந்து இரவுகளில் முறையே அனந்தன், கருடன், விசுவக்சேனன், பிரம்மா, இருத்திரன் ஆகியோர்க்கு அளிக்கப்பட்ட உரைகளாகும். 8. பாஞ்சராத்திரம் என்பது இறைவனுடைய ஐந்து ஆயுதங்களாக விளங்கும் சாண்டில்யன், மௌன்யாயணன் ஔபாகயணன், கௌசிகன், பரத்வாசன் என்போர்க்கு இறைவனால் தனித்தனியே கற்பிக்கப்பட்ட இலக்கியமாகும்.

பாஞ்சராத்திரம் வேத அடிப்படையில் வந்ததாயினும், ஏகாயன வேதம் எனும் பெயர் பெற்று விளங்குகிறது ஏனெனில் இதில் இறைவன் பத்தர் அனைவருக்கும் ஒரே தங்குமிடம் என்று கூறப்படுகின்றது. சாண்டில்ய முனிவர் இதனைச் சங்கர்சணனிடம் துவாபர காலத்தின் முடிவிலும் கலியின் தொடக்கத்திலும் கற்றுப் பின்னர் சுமந்து, பிருகு, சைமினி, ஔபாகயணர், மௌன்யாமணன் ஆகியோருக்குக் கற்பித்ததாகவும் கூறுவர்.

பாஞ்சராத்திரம், மெய்ப்பொருளியல் கோட்பாடுகள், சிந்தனை, கோயிற்கட்டடக்கலை, படிமக்கலை, இம்மரபின் வழிபாட்டு முறைகள் போன்றவற்றை உள்ளடக்கியது. இறைவனின் அறுவகைப் பண்பு நலன்களையும், கடந்த, உள்ளுறை நிலைகளையும், நால்வகை வெளிப்பாட்டு வடிவ நிலைகளையும், அதிலிருந்து வரும் பன்னிரண்டு வெளிப்பாட்டு வடிவ நிலைகளையும், பத்து தோன்றி வந்த வடிவநிலைகளையும், அதன் படிம வடிவங்களையும் பற்றி விரிவாகப் பேசுகின்றது. மேலும் பல முறைகளில் வகுக்கப்பட்டப் போற்றிகளின் வழி, வழிபடுபவரின் அறிவர் நிலைகளையும், இறைவனின் திருவடியையடைய அன்புவழிச் சேவையே உயர்ந்தநெறி என்பதனைப் பற்றியும் பேசுகின்றது.

பாகவத வழிபாட்டு மரபிற்கும் பாஞ்சராத்திர வழிபாட்டு மரபிற்குமிடையே சில வேறுபாடுகளும் காணப்படுகின்றன. பாகவத மரபு பிராம்மண இலக்கியங்களில் கூறப்பட்டுள்ள சமுதாய ஒழுங்கு முறைகளை நம்பிக்கையுடன் பின்பற்றுகின்றது; பாஞ்சராத்திரம் அதில் ஈடுபாடு எதுவும் கொள்வதில்லை. பாஞ்சராத்திரம் பெண்

களுக்கும் பத்தி நெறியில் ஈடுபாடுள்ளதை ஏற்கின்றது. தந்திர நடத்தைகளைப் பாஞ்சராத்திரம் மேற்கொள்வதால் வேதச் சார்பற்றது என்றும் இது வழங்கப்படும்.

பாஞ்சராத்திர இலக்கியங்களை மகாபாரதம் மகாஉபநிடதம் என்று அழைக்கின்றது. பலவகையான இலக்கியங்கள் வைணவ மரபில் இதனை ஒட்டி எழுதப்பட்டு அவைகளை இயற்றியவர்களின் பெயர்களில் வழங்கி வருகின்றன. எடுத்துக்காட்டாக நாரத பாஞ்சராத்திர இலக்கியம் பிரம்ம, சிவ, கௌமார, வசிட்ட, கபில கௌதம, நாரத . பாஞ்சராத்திரங்கள் என்ற ஏழினைக் குறிப்பிடுகின்றன. அக்கினிபுராணம் இம்மாதிரியான இருபத்து ஐந்து பெயர்களைக் குறிப்பிடுகின்றது.

பாஞ்சராத்திர இலக்கியங்கள் வைணவ ஆகமங்கள் என்றழைக்கப்படுகின்றன. நூற்றியெட்டு பாஞ்சராத்திர தொகுதிகள் அடிப்படையானவையாகும். ஆயினும் இருநூற்றுப் பதினெட்டு சம்கிதைகள் உண்டென்றும் கூறுவர். புராணங்களைப் போன்றே பாஞ்சராத்திர ஆகமங்களையும் சாத்துவீகமானவை, இராசசமானவை, தாமசமானவை என்று பிரிப்பதுண்டு. பாஞ்சராத்திர ஆகமங்களில் செயாக்கிய, சாத்வத, பௌஷ்கர சம்கிதைகள் மிகச் சிறந்தவை என்பர். ஈசுவாசம்கிதை பத்மசம்கிதை, பரமேசுவர சம்கிதை என்பவை முப்பெரும் பிரிவுகளைச் சார்ந்தவை ஒவ்வொரு கோயிலிலும் ஏதாவதொரு சம்கிதை முறைப்படி வழிபாடுகள் நடத்தப்படுகின்றன. சான்றாகக் காஞ்சியில் சயாக்கியமும். சிரீரங்கத்தில் பரமேசுவரமும் கடைப்பிடிக்கப்படுகின்றன. பொதுவான ஆகமங்களைப் போன்றே இவற்றிலும் சரியை, கிரியை, யோகம், ஞானம் ஆகிய பகுதிகள் உள்ளன.

பாஞ்சராத்திர ஆகமங்களைப் போன்று நூற்றிஎட்டு சம்கிதைகள் கொண்ட வைகானச ஆகமங்கள் என்ற பிரிவும் வைணவ மரபில் உண்டு. வைகானச ஆகம முறைப்படியே திருவேங்கட மலையில் வழிபாடுகள் நடத்தப்படுகின்றன. ஆனால் திருச்சானூர் அலர்மேல் மங்கை திருக்கோயிலில் பாஞ்சராத்திர ஆகம முறைப்படி வழிபாடுகள் நடத்தப்படுகின்றன.

ஆகமங்களின் ஏற்புடைமையை இராமானுசரின் பாட்டனார் ஆன ஆளவந்தார் தனது ஆகமம் பிரமாணியம் என்ற நூலில் விவரித்துள்ளார். வேங்கடநாதரின் பாஞ்சராத்திர ரட்சை என்னும் நூல்

ஆகமங்கள் வேதங்களுக்குப் புறம்பானவையல்ல; வேதங்களின் அடிப் படையில் அமைந்தவையே என்பதனையும், அவற்றின் ஏற்புடைமை யையும் விளக்க எழுதப்பட்டதாகும். பொதுவாக வைணவர்கள் ஆகமங்களை ஏற்புடைத்ததாகவும் தூய்மையானதாகவும் கருது கின்றனர் பாஞ்சராத்திர வழிபாட்டு மரபும் வைணவ மரபை வளர்ப் பதில் பெரும்பங்கு கொண்டதாகும். இறை வெளிப்பாட்டு வடிவங் களைப் பற்றிய செய்தியே இவற்றின் சிறப்பெனலாம்

## 5. தமிழ் இலக்கியங்களில் காணப்படும் வைணவக் கருத்துக்கள்

வைணவத்தின் முழு முதற்பொருளான விட்டுணு தமிழில் திருமால் என்னும், மாயோன் என்றும் வழங்கப்படுகின்றான். வட மொழி இலக்கியங்களைப் போன்றே தமிழிலும் வைணவத்திற்குச் சிறந்த இலக்கியங்கள் உள்ளன. எனவே வைணவ மெய்ப்பொருளி யலை வேதங்களின் இருவகைக் கோட்பாடுகள் என்ற பொருளில் உபயவேதாந்தம் என வழங்குவர். வேத உபநிடதங்கள் எவ்வாறு மிகப் பழமையான நூல்களென வடமொழியில் கருதப்படுகின்றனவோ, அவ்வாறே தொல்காப்பியமும் சங்க இலக்கியங்களும் பழமையான தமிழ் இலக்கியங்களாகக் கருதப்படுகின்றன. இவைகளிலும் வைண வக் கருத்துக்கள் காணப்படுகின்றன.

உயர்ந்த தமிழ் இலக்கண நூலான தொல்காப்பியத்தை இயற்றிய தொல்காப்பியர் அகத்தியரின் பன்னிரெண்டு மாணவர் களில் ஒருவரெனக் கருதப்படுபவர். பழந்தமிழர்கள் நிலத்தை குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல், எனும் நான்கு பகுதிகளாகப் பிரித்தனர். ஒவ்வொரு பகுதிக்கும் ஒரு இறைவனைக் கற்பித்தனர் அவ்வகையில் முல்லைக்குரிய இறைவனாகத் திருமாலாகிய மாயோன் கருதப்பட்டான். திருமால் முதன் முதலில் கருதப்படுவதால் இவ்விறைவனுக்கும் அதன் மரபிற்கும் அக்காலத்திலிருந்த செல் வாக்கை உணர்த்துகின்றது.

தொல்காப்பியம் பொருளதிகாரத்தின் புறத்திணையியல் ஐந் தாவது சூத்திரம் "மாயோன் மேய மன்பெருஞ் சிறப்பின் தாவில் விழுப்புகழ்ப் பூவை நிலையும்" என்று குறிப்பிடுவதில் மாயோனாகிய இறைவன் உலகைக் காப்பது போன்று மன்னனும் தன்மக்களைக் காக்கிறான் - என்று கூறப்படுகிறது. இதிலிருந்து மன்னனை மாயோ னுடன் ஒப்பிட்டுப் பேசுதல் அன்றைய பண்பாடாக விளங்கியதை

அறியலாம். பொருளதிகாரம் மரபியல் எழுபதாம் சூத்திரம் "நூலே கரகம் முக்கோல் மனையே ஆயுங்காலை அந்தணர்க்குரிய" என்பதில் அக்காலத்திய வைணவத் துறவியர் தம்முடன் வைத்திருந்த மனையும், நீர்ப் பாத்திரமும், முக்கோலும் குறிப்பிடப்படுகிறது. முக்கோல் சைவர்க்குரியது என்பர் சிலர். ஆனால் அமரும் பலகை வைணவர்க்குரியதாகையால், இப்பாடல் வைணவக் கருத்தையே சுட்டுவதெனலாம். வைணவத் துறவியர் தீர்த்தர் என்றும் முக்கோல் பகவர் என்றும் அழைக்கப்பட்டனர் என்பதனையும் இது குறிக்கின்றது இத்தொல்காப்பியக் குறிப்புக்கள் அதன் காலத்திலேயே வைணவ மரபு விளங்கி வந்ததைத் தெளிவாக்குகின்றது.

பழந்தமிழ் இலக்கியங்களான பத்துப்பாட்டும், எட்டுத்தொகையும் சங்க காலத்தையும், பதினெண்கீழ்க் கணக்கு சங்கம் மருவிய காலத்தையும் சார்ந்தவையாகும். எட்டுத் தொகையில் ஒன்றான பரிபாடல் இசைக்கு ஏற்றவாறு அமைக்கப்பட்டுள்ளதால் பரிபாட்டமுதம் என அழைக்கப்படுகிறது. இதன்கண் எழுபது பாடல்கள் இருந்ததெனக் கூறுவர். ஆனால் தற்சமயம் கிடைத்திருப்பது இருபத்து இரண்டு பாடல்களேயாம் அவற்றுள் ஏழுபாடல்கள் விட்டுணுவைக் குறிப்பனவாகும். கடுவன் இளவெயினனார் இயற்றியுள்ள மூன்றாம் பாடலில் பாஞ்சராத்திரத்தில் குறிப்பிட்ட இறைவனின் நால்வகை வெளிப்பாடுகளான வாசுதேவன், சங்கர்சணன், பிரதியும்னன், அநிருத்தனன் ஆகியவை "செங்கட்காரி கருங்கண் வெள்ளை பொன்கட் பச்சைப் பைங்கன் மால்" எனக் குறிப்பிடப்படுகின்றன. கண்ணனின் இளம்பருவ நிகழ்ச்சிகளையும், நரசிம்மன், வராகம் போன்ற தோன்றி வந்த வடிவங்களையும், விட்டுணுவின் இருப்பிடமான வைகுந்தத்தைப் பற்றியும் இரண்டாவது, நான்காவது, பதிமூன்றாவது பாடல்கள் குறிப்பிடுகின்றன. முதல் பாடல் மன்மதன், பிரம்மா ஆகியோரின் தந்தையாக விட்டுணு குறிப்பிடப்படுவதுடன், ஐந்து முகங்களையுடைய சிவனை விட்டுணுவுடன் ஒன்றாக்கி, விட்டுணுவை முழுமுதற் கடவுளாகப் பேசுகின்றது. பதினைந்தாம் பாடல் திருமாலிருஞ் சோலையைக் குறிப்பிடுவதுடன் அங்கிருந்த கோயிலில் கிருட்டிணன், பலதேவன் உருவச் சிலைகள் இருந்தன என்றும் பேசுகின்றது. பரி பாடல்கள் இவ்வாறு வைணவ வழிபாட்டு மரபினையும் பாஞ்சராத்திர வழிபாட்டு முறைகளையும் குறிப்பிடுவதிலிருந்து கிருத்துவத்தின் தொடக்க காலத்திலேயே வைணவம் தமிழகத்தில் வழக்கிலிருந்ததை அறியலாம்.

கலித்தொகை (வைணவத் துறவியரைப் பற்றிக்கூறும் செய்தி களை

எறித் தகு கதிர் தாங்கியேந்திய குடைநிழல்
உறித் தாழ்த்த கரமு முரை சான்ற முக் கோலும்
நெறிபடச் சுவலரை வேறோரா நெஞ்சத்துக்
குறிப்பேவல் செய்ய மாலைக் கொளை நடையந்தணிர்!
(கலித்—8 என்றும்),

" செக்கர் கொள் பொழுதினான் ...
முக்கோல் கொளந்தனர் முதுமொழி நினைவார் போல்"
(கலித்—129) என்றும்,

மேலும் திருமால் பொன் சக்கரமான புகழாயுதத்தை உடையவன் மார்பில் திருவின் அடையாளம், நீலநிறம் ஆகியவற்றைப் பெற்றவன் (கலி. 104) கம்சன் ஏவிய குதிரையை வாயைப் பிளந்து கொன்றவன் திருமால், அரவின்மீது பள்ளி கொள்பவன் (105) என்றும் கூறுவதி லிருந்து உணரலாம்.

புறநானூறு கிருட்டிணைன், பலதேவன் ஆகியோரின் பண்புகளை "ஏற்றவலனுயரிய கவரிமருள் விரிசடையோன்" எனக்குறிப்பிடு கின்றது. பெரும்பானாற்றுப்படை திருமால் தன் பாம்பணையின்மீது படுத்துக் கிடந்த நிலையினை

" நீருகுலைக் காந்தனஞ் சிலம்பிற் களினுபழந் தாங்கும்
பாம்பனைப் பள்ளியமர்ந் தோனங்கள்" என்று குறிப்பிடு கின்றது.

திருக்குறளில் இடம் பெற்றுள்ள

" மடியிலா மன்னவன் எய்தும் அடியளந்தான்
தாஅயதெல்லாம் ஒருங்கு". 610

" தாம் வீழ்வார் மென்றோன் துயிலின் இனிது கொல்
தாமரைக் கண்ணான் உலகு" (1103) என்ற குறள் திரு மாலையே குறிப்பனவாகும்.

தமிழ் இலக்குயங்களில் மட்டுமின்றி சமண பௌத்த இலக்கி யங்களான சிலப்பதிகாரம், மணிமேகலையிலும் திருமாலைப் பற்றிய

குறிப்புகள் காணப்படுகின்றன. சிலப்பதிகாரம் நாட்டில் விளங்கிய பலவகைக் கோயில்களைக் குறிப்பிடும்பொழுது கிருட்டிணனுக்கும் பலதேவனுக்கும் கோயில்கள் இருந்தன என்பதை

" வால்வளை மேனி வாலியோன் கோயிலும் " எனக் குறிப்பிடுகின்றது.

மேலும் திருவேங்கடத்துப் பெருமாளையும், திருவரங்கத்துப் பெருமாளையும், திருமாலிருஞ்சோலைப் பெருமாளையும் பின்வரும் பாடல் குறிப்பிடுகின்றது.

" நீலமே நெடும் பொற்குன்றத்தில்
திருவமர் மார்பன் கிடந்த வண்ணமும் "
" வீங்கு நீரருவி வேங்கடமென்றும்
செங்கணெடி யோனின்ற வண்ணமும் "
புவ்வத் தாமரை புரையுங்கண்ணன்
வெளவற் காரிருள் மயங்கு மணி மேனியன்
எவ்வ ரிலுலகத்துந் தோன்றியவ் வரின்
மன்பது மனுக்கள் துன்பங்களைவோன்.

ஆய்ச்சியர் குரவையில் பசுக்களின் துன்பத்தை நீக்க வேண்டி கிருட்டிணனை ஆய்ச்சியர் குலப் பெண்கள் பின்வருமாறு வேண்டுவதாக சிலப்பதிகாரம் குறிப்பிடுகின்றது.

" சோ அரணும் போர் மடியத் தொல் இலங்கைக் கட்டழித்த
சேவகன் சீர் கேளாத செவி என்ன செவியே ! "
திருமாலின் சீர் கேளாத செவி என்ன செவியே' எனவும்
" படர்ந்து ஆரணம் முழங்கப் பஞ்சவர்க்குத்
தூது நடந்தானை ஏத்தாத நாவென்ன நாவே '
நாராயணா என்னா நாவென்ன நாவே ! "

மணிமேகலையிலும் நாராயணன் பற்றிய குறிப்பொன்று காணப்படுகின்றது.

" மாவணி வண்ணனுந்தம்முனும் பிஞ்ஞையும்
ஆடிய குரவையிஃதாமென நோக்கியும் "
" காதல் கொண்டு கடல் வணன் புராண
மோதினன் நாரணன் காப்பென்றுரைத்தான். (27-29)

மேற்கூறியவற்றிலிருந்து வைணவ வழிபாட்டு மரபு சங்ககாலத்திற்கு முன்பிருந்தே தமிழகத்தில் வழக்கத்தில் இருந்ததை அறியலாம். இம்மரபு பின்னர் மிகப்பெரிய அளவில் ஆழ்வார்களின் காலத்தில் பரவியது.

## 6 ஆழ்வார்களும் பத்தி இயக்கமும்

துறவு என்பது பாரத நாட்டின் முழுமையாக விளங்குகின்ற ஒரு நிலையாகும். சிந்துச்சமவெளி நாகரீக காலத்திலேயே சிவன் துறவு நிலையில் உள்ளதாக ஒரு சின்னம் காணப்படுகிறது. வேதங்களை வழிவழியாகக் காப்பாற்றியவர்களும், உபநிடதங்களைக் கற்பித்தவர்களும், வேதாந்தத்திற்கு விளக்கவுரை நல்கியவர்களும், பௌத்தர்களும், சமணர்களும், ஆழ்வார்களும், நாயன்மார்களும், 19, 20ம் நூற்றாண்டுகளில் வாழ்ந்த சமூகச் சீர்திருத்தவாதிகளான இராமகிருட்டினர், இராமதாசர், வித்யாரண்யர், மகாத்மாகாந்தி ஆகிய அனைவரும் கூட துறவிகளாகவோ அல்லது துறவு மனப்பான்மை கொண்டவர்களாகவோ விளங்கியவர்களேயாவர்.

துறவுக்கு எவ்வகையான பிரிவும் தடையாக நின்றதில்லை. துறவு நிலை கொண்டவர்கள் தம் உணர்வையும் இவ்வுலகத்தையும் தூய்மையாக்குவதற்கு மனித சமுதாயத்தின்பாற்பட்ட பற்றறுத்துச் சிறந்த செயல்களைச் செய்பவர்களெனவும் குறுகிய மனப்பான்மையை விட்டொழித்தவர்களெனவும் நாரதபத்தி சூத்திரம் குறிப்பிடுகின்றது.

சாதாரண மனிதன், சமய மரபுகள் கதைகளில் அடங்கியதாகக் கருதுகின்றான். இதற்கு நாராயணனின் இம் மண்ணுலகத் தோற்றக் (அவதாரம்) கதைகள் எடுத்துக்காட்டாக விளங்குகின்றன. மக்களிடமுள்ள அன்பின் பொருட்டு இறைவன் தன்னருளால் தீமையை நீக்கி நன்மையைக் காக்கவும், மனிதர்களை மென்மேலும் அன்பில் திளைக்க வைக்கவும் இம் மண்ணுலகில் தோன்றுகின்றான் என்று கூறுவர். அவ் வகையில் தோன்றியவர்களே ஆழ்வார்கள் எனக் கருதப்படுகின்றனர்.

ஆழ்வார்கள் தமது அன்பினால் இறைநுகர்வுகளை நேரடியாகப் பெற்று அதனை உலகுக்கு அளித்தவர்கள். குறிப்பிட்ட ஒரு சமய மரபின்பால் பற்றுக்கொண்டவர்களாதலால் சமயாச்சாரியர் என்று அழைக்கப்படுகின்றனர். அவர்களது நோக்கம் உணர்ச்சி

களின் அடிப்படையில் இறைவனிடம் அன்பு செலுத்துவதாகும். எனவே இவ்விறையன்பர்கள் அன்பு அல்லது சேவை (பத்தி) வழியையே இறைவனையடையச் சிறந்ததாகக் கொள்கின்றனர். அன்பு வழி இறைவனுக்கும் அவனது அடியவர்களுக்கும் தொண்டு செய்வதில் அடங்குவதாகும். ஆழ்வார்களுக்கு அன்பே இறைவன், அவர்களிடம் இறையன்பு முனைந்து நிற்கின்றது. ஆழ்வார்கள் என்னும் சொல் எம்பெருமானின் பண்பு நலன்களில் ஆழ்ந்து நிற்போர் எனப் பொருள் படுவதாகும்.

வைணவ மரபு இறைவனின் அருட்கடலில் அழுந்தித்திளைத்த பன்னிரண்டு ஆழ்வார்களைக் குறிப்பிடுகின்றது. அவர்கள் முறையே 1. பொய்கையாழ்வார், 2. பேயாழ்வார், 3 பூதத்தாழ்வார், 4. திருமழிசையாழ்வார், 5. நம்மாழ்வார், 6. மதுரகவியாழ்வார், 7. குலசேகராழ்வார், 8. பெரியாழ்வார், 9. ஆண்டாள், 10. தொண்டரடிப்பொடியாழ்வார், 11. திருப்பாணாழ்வார், 12 திருமங்கையாழ்வார் எனப்படுபவர்கள் ஆவர். ஆழ்வார்களைப் பற்றி பாகவத புராணம் நாராயணன் மீது அன்பு கொண்ட துறவிகள் கலியுகத்தில் காவேரி, தாமிரபரணி, பாலாறு போன்ற நதிக்கரைகளில் தோன்றுவார்கள் எனக் குறிப்பிட்டுள்ளது. இவர்களது காலம் கி.பி. இரண்டாம் நூற்றாண்டு முதல் ஒன்பதாம் நூற்றாண்டு வரை என்று வரலாற்றாசிரியர் குறிப்பிடுவர்.

பொதுவாக ஆழ்வார்கள் அனைத்து வகை உலகின்பங்களின் நிலையற்ற தன்மையையும், தன் உண்மைநிலை வெளிப்பாட்டில் அடையப்பெறும் நிலைத்த மகிழ்ச்சியையும், இறைவனுடன் கூடி இருத்தலினால் உலகத்துன்பங்கள் யாவும் மறையும் என்பதனையும், அன்புவழி மரபானது அனைவருக்கும் உரியது என்பதனையும் உறுதியாக நம்பியவர்கள் எனலாம்.

இறைவன் அழகால் கவரப்பெற்ற இவ்வாழ்வார்கள், பேசியது ஒரு பொருளே என்பதை விளக்குவதற்காக. இவர்கள் ஒரே குரலுடையவர்கள் எனவும் கூறுவர். மேலும் இவர்கள் இவ்வுலகத்தில் வந்து தோன்றுவதற்கு முன்பே இறையருள் பெற்றவர்கள் என்பதனைக் 'கருவரங்கத்துட் கிடந்து கைதொழுதேன்' எனக் கூறுவதால் அறியலாம். இவர்கள் தன்னிலும் இவ்வுலகப் பொருட்கள் அனைத்திலும் நாராயணனைக் கண்டவர்கள். தம் தமிழ்ப் பாக்களால் அவனது எண்ணத்திலே தோன்றி வாழ்ந்து முடிபவர்கள். உயிர் இவ்வுடலைத்

தன்னிருப்பிடமாகக் கொண்டது போன்று நாராயணன் இவ்வுலகைத் தன் இருப்பிடமாகக் கொண்டுள்ளான். தன்முனைப்பு, உடைமை ஆகியவற்றை அழித்து இறைவனிடம் அன்பு செலுத்தி அவனருளை வேண்டி அவனிடம் அடைக்கலம் புகுந்தால் அனைவரும் இறை நிலையைஅடையலாம். அவன் அருளுக்கு நன்றியாகநாம் அவனிடம் அன்பு செலுத்தவேண்டும் என்பதே இவர்களது கொள்கையாகும்.

ஆழ்வார்களின் இயக்கம் பத்தி இயக்கம் எனப்படுகின்றது. அனைத்து வைணவ இலக்கியங்களிலும் பலவாறாகக் குறிப்பிடப் படும் இறைவன் நாராயணனே என்றும், அவனே அடைதற்கெளிய வன் என்றும், அவனை அடைய எளிதான வழி பத்தியே என்றும் கருதுவதே பத்தி இயக்கத்தின் அடிப்படைக் கருத்துக்களாகும். ஆழ்வார்களின் பத்தி இயக்கம் தொடக்கத்தில் காஞ்சியைத் தலை நகராகக் கொண்ட தொண்டை மண்டலத்தில் தோன்றி தென் பாண்டிநாடு வரை பரவியது. பின் வடநாட்டிற்கும் சென்றது. கலைச் சுவையும் பத்திச் சுவையும் கொழிக்கும் ஆழ்வார்களின் திருப்பாசுரங்கள் காவேரி, பாலாறு, தாமிரபரணியாறுகளின் புது வெள்ளமெனப் புறப்பட்டுத் தலைமுறை தலைமுறையாக மக்களின உயிர்வேட்கையைப் போக்கி வருகின்றன.

ஆழ்வார்களின் பத்தி இயக்க வரலாறும் வைணவ வழிபாட்டு மரபின் வளர்ச்சியும், இவர்களின் இறை நுகர்வுகளிலும் அதன்வழி வெளிப்பட்ட அருட்பாடல்களிலும் அடங்கியுள்ளதெனலாம். பன்னிரு ஆழ்வார்களின் படைப்பான நாலாயிரத்திவ்ய பிரபந்தம் பத்தி இயக் கத்தின் முழுமையானதொரு வெளிப்பாடேயாகும். எனவே இவ் வாழ்வார்களின் இறைநுகர்ச்சிகளைத் தெரிந்து கொள்வது பத்தி இயக்கத்தைத் தெரிந்து கொள்வதாகும். அவர்களின் படைப்புக்கள் அவர்கள் வைணவத்திற்காற்றிய தொண்டுகளாகும் இவ்விறை நுகர்ச்சிகளே இராமானுசர் பரப்பிய விசிட்டாத்வைத மெய்ப்பொருளி யலின் முழுவடிவமாக அமைந்ததெனலாம்.

*முதலாழ்வார்கள்-பொய்கையாழ்வார், பூதத்தாழ்வார், பேயாழ் வார் :*

பொய்கையாழ்வார், பூதத்தாழ்வார், பேயாழ்வார் என்னும் மூவரையும் முதலாழ்வார்கள் என்பர். இவர்களை இறைவனோடு தொடர்புள்ள பொருள்களின் பகுதியாகக் கருதுவர். இவர்கள் பிறப் பிற்கு மக்களினப் பெற்றோர்களாகக் கூறுவதில்லை.

பொய்கையாழ்வார் சான்றோர்களைப்பெற்றெடுத்த தொண்டை வள நாட்டில் காஞ்சிமாநகரில் வேகவதியாற்றங்கரையிலுள்ள திரு வெஃகா என்னும் திருத்தலத்தில் ஒரு பொற்றாமரைப் பொய்கையில் பூத்ததொரு நற்றாமரையில் ஐப்பசித் திங்கள் திருவோண நட்சத் திரத்தில் வெளிப்பட்டவர் என்பர். திருமாலின் வளைநரலான பாஞ்ச சன்னியத்தின் குறியீடாக இவர் கருதப்படுகின்றார். பொய்கையில் தோன்றியதால் பொய்கையாழ்வார் என்றும் பெயர் பெற்ற இவ் வாழ்வார் இயல்பிலேயே உலகியல் நாட்டமற்றுத் திருமாலாகிய நாராயணனிடம் பேரன்பு கொண்டு வாழ்ந்தார்.

பூதத்தாழ்வார் தொண்டை நாட்டின் சிறந்த துறைமுகமான திருக்கடல்மல்லையில் ஒரு குருக்கத்திமலரில் ஐப்பசித் திங்கள் அவிட்ட நட்சத்திரத்தன்று வெளிப்பட்டவர். வடமொழியில் பூ என்ற வினையடிக்கு இருத்தல் என்று பொருள் ; எம்பெருமானைப் பாடியே இருத்தலைப் பெற்று இருந்தவர் ஆதலால் பூதத்தாழ்வார் எனும் பெயர் பெற்றார். திருமால் எழுதியுள்ள ஐந்து படைகளில் 'கௌமோதகி' என்றழைக்கப்படும் கதையின் குறியீடாக இவரைக் கருதுவர்.

பேயாழ்வார் தொண்டை நாட்டின் புகழ்பெற்ற ஊரான திரு மயிலையில் ஒரு கிணற்றில் உண்டான அல்லிப் பூவில் ஐப்பசித் திங்கள் சதய நட்சத்திரத்தன்று தோன்றியவர். எம்பெருமான் மீது கொண்ட அளவற்ற பத்தி காரணமாக எப்பொழுதும் அழுதும், சிரித் தும், ஆடியும், பாடியும், தொழுதும், அலறியும் பொழுது போக்கிக் கொண்டிருந்து பேய் போலத் திரிந்தமையால் பேயாழ்வார் எனப் பட்டார். இவர் திருமால் ஏந்தியுள்ள 'நாந்தகம்' எனப்படும் வாளின் குறியீடாக இவரைக் கருதுவர்.

இவ்வாறு அடுத்தடுத்த நாட்களில் பிறந்த இவர்கள் பகவா னிடம் அளவிறந்த பக்தியுடன் அவனைக் காணவேண்டி ஊர் ஊராகத் திரிந்து கொண்டு இருக்கையில், எம் பெருமான் இவர்கள் மூவரை யும் ஒன்று சேர்த்து ஆட்கொள்ள வேண்டுமெனக் கருதி அதற்குரிய வாய்ப்பை உண்டாக்கினான். ஒரு நாள் இம் மூவரும் ஒருவரை யொருவர் அறியாது திருக்கோவலூர் எனும் ஊரில் மழையின் காரண மாக மிருகண்டு முனிவரின் குடிலை ஒவ்வொருவராக அடைந்து அக் குடிலின் இடைக்கழியில் தங்கினர். அவ்விடைகழி ஒருவர் படுக்கவும் இருவர் இருக்கவும், மூவர் நிற்கவும் வசதி கொண்டது. முதலாழ்

வார் மூவரும் அங்குச் சென்றடைந்த பின் நின்று கொண்டே எம் பெருமானின் பெருமையைப் பேசியும் கேட்டும் களித்திருந்தனர். அப்பொழுது திருமால் தனது திருவருளை அவர்கள் மீது பொழிய அவர்கள் அறியாவண்ணம் அவ்விடைகழி நுழைந்தார். மூவரே நிற்கக் கூடிய இடத்தில் ஏற்பட்ட புதிய நெருக்கத்தின் காரணத்தை இருட்டின் மிகுதியால் புலப்படாமையால் அவ்விருளைப் போக்கப் பொய்கை-யாழ்வார் இந்த உலகத்தையே அகலாகவும், கடலையே அதிலிடும் நெய்யாகவும், சூரியனையே விளக்கின் சுடராகவும் வைத்து நூறு பாசுரங்களைப் பாடி எம்பெருமானைத் துதித்தார். இப்பாசுரங்களே நாலாயிரத்திவ்ய பிரபந்தத்தின் முதல் திருவந்தாதியாக விளங்கு கின்றது.

பூதத்தாழ்வார் தனக்கு எம்பெருமானிடமிருந்த அன்பையே அகலாகவும், ஆர்வத்தையே நெய்யாகவும், தன்னுடைய சிந்தை யையே திரியாகவும் வைத்து ஞான விளக்கேற்றி நூறு பாசுரங் களைப் பாடி எம்பெருமானைத் துதித்தார். இப்பாசுரங்கள் இரண் டாம் திருவந்தாதி என அழைக்கப்படுகின்றது.

இவ்விருவர் ஏற்றிய விளக்கொளியில் பேயாழ்வார் எம்பெரு மானைக் கண்டு "திருக்கண்டேன் பொன்மேனி கண்டேன்" என்று தொடங்கி நூறு பாசுரங்களால் எம்பெருமானை வழிபட்டார். இவை மூன்றாம் திருவந்தாதியாக நாலாயிரத் திவ்யபிரபந்தத்தில் வைக்கப்பட்டுள்ளது. பின்னர் இவ்வாழ்வார்கள் மூவரும் பற்பல திருத்தலங்களுக்கும் சென்று எம்பெருமானைப் பாடிப்பரவி முடிவில் திருவல்லிக்கேணியில் நெடுங்காலம் வாழ்ந்து வைணவத்தைப் பரப் பினர்.

*திருமழிசையாழ்வார் :*

மகிசாரம் என்னுமிடத்தில் தவம்புரிந்து கொண்டிருந்த பார்க் கவ மகாமுனிவருக்கும் அவரது தவத்தைக் கலைக்க வந்த கனகாங்கி என்ற தேவமாதிற்கும் தைமாதம் மகநட்சித்திரத்தன்று திருமழிசை யில் தோன்றியவர் இவ்வாழ்வார். தோன்றிய போது வெறும் பிண்டம் என்ற அளவில் இருந்ததால் அத்தேவமாது அருகிலிருந்த பிரம்பத் தூற்றில் எறிந்து செல்ல, பிரம்பறுக்க வந்த வேளாளன் ஒருவன் இதனை எடுத்து வளர்த்தார்.

இளவயதிலேயே ஞானத்தை அடைந்த ஆழ்வார் சமணம், பௌத்தம் போன்ற சமயங்களில் போந்து பலநூல்களை இயற்றினார். சைவவழிபாட்டு மரபில் சிவவாக்கியர் என்ற பெயரில் பல நூல்களை இயற்றியதுடன் சைவராகவே வாழ்ந்து வந்தார். பின்னர் பேயாழ்வாரால் திருத்தப்பட்டு வைணவராகி தூயபத்தியுடன் எப்போதும் திருமாலையே சிந்தை செய்து கொண்டிருந்தார். ஒரு சமயம் திருமால் சிந்தையுடன் தம் கந்தைத் துணிகளைத் தைத்துக் கொண்டிருந்த போது அவ்வழி வந்த சிவபெருமானிடம் பலவற்றை அருளுமாறு கேட்க அவர் அவற்றிலெல்லாம் தனக்கு அதிகாரமில்லை என்று கூறவும், இறுதியில் இவ்ஊசி செல்லும் வழியில் நூலும் செல்வதற்கு வரமருளக் கேட்க. சிவபெருமான் தன் நெற்றிக் கண்ணைத் திறந்து நெருப்பை உமிழ்ந்தார். ஆழ்வாரும் தம் திருவடியின் பெருவிரலிலுள்ளதொரு கண்ணைத் திறந்துவிட சிவபெருமானது நெருப்பையும் அது தகித்தது. அதனால் பரமசிவன் மகிழ்ந்து இவரது நாராயண பத்தியைப் போற்றி 'பத்திசாரர்' என்ற திருநாமம் இட்டார்.

திருமழிசை ஆழ்வார் பின்னர் காஞ்சித்திருவெக்காவை அடைந்து அங்கு எழுந்தருளியிருந்த பெருமாளிடத்தில் ஈடுபட்டு அங்கேயே தங்கலாயினார். இவரது அருளால் பிறந்த கணிகண்ணன் என்ற பெயருடைய இவரது மாணாக்கரும் இவருடனேயே தங்கிப் பணிவிடைகள் புரிந்து வந்தார் கணிகண்ணனது கவிபாடும் ஆற்றலைக் கேள்விப்பட்ட அவ்வூர் அரசன் தன்னைப் பற்றிக் கவி பாடும் படி வேண்ட கணிகண்ணன் 'மானுடம் பாடேன்' என்று கூற, சீற்றம் கொண்ட மன்னன் கணிகண்ணனை நாடு கடத்தினான். கணிகண்ணனைத் தொடர்ந்து திருமழிசை ஆழ்வாரும் புறப்பட்டதுடன் பள்ளி கொண்ட பெருமாளை நோக்கி, ''கணிகண்ணன் போகின்றான், துணிவுடைய செந்நாப் புலவனும் செல்கின்றேன் மணிவண்ணா! நீயுமுந்தன் பைந்நாகப் பாயைச் சுருட்டிக் கொள்'' என்று கூற பெருமாளும் புறப்படுகின்றான் மன்னன் தன் தவறுணர்ந்து அனைவரையும் திரும்பி வருமாறு வேண்ட, ஆழ்வாரும் பெருமாளைப் பார்த்து, ''நீயும் உன்தன் பைந்நாகப் பாய் படுத்துக் கொள்'' என்று கூறுகிறார் இவ்வாறு திருமழிசை ஆழ்வார் சொன்னபடி எல்லாம் பெருமாள் செய்ததனால் ''சொன்னவண்ணம் செய்த பெருமாள்'' என்று அழைக்கப்படுகின்றார்.

பின்னர் திருமழிசை ஆழ்வார் திருக்குடந்தைக்குச் செல்லும் வழியிலிருந்த பெரும்புலியூர் என்னுமிடத்தில் வேதமோதிக் கொண்

டிருந்த சில அந்தணர்கள் இவரை இகழ, திருமாலோடு தமக்குள்ள நெருக்கத்தைக் காட்டியருளினார். திருக்குடந்தையில் கிடந்த நிலையிலிருந்த பெருமாளை நோக்கி, "எழுந்திருந்து பேசு" என்று வேண்ட எம்பெருமானும் ஆழ்வார் மேலுள்ள அன்பால் தன் நிலையிலிருந்து சற்றே எழுந்திருக்க முயல ஆழ்வாரும் அதற்கு மகிழ்ந்து 'வாழி கேசனே' என்று வாழ்த்தினார் இன்றும் திருக்குடந்தையில் பெருமாள் சற்றே எழுந்த திருக்கோலத்தில் (உத்தானசாயி) இருப்பதைக் காணலாம். ஆழ்வார் இங்கிருந்தபோது நான்முகன் திருவந்தாதி, திருச்சந்த விருத்தம், ஆகிய இரு பிரபந்தங்களை அருளிச் செய்தார்

*நம்மாழ்வார், மதுரகவியாழ்வார் :*

நம்மாழ்வார் நெல்லை மாவட்டத்தில் திருக்குருகூர் என்று அழைக்கப்படும் ஆழ்வார் திருநகரியில் வைகாசித் திங்கள் விசாக நட்சத்திரத்தன்று தோன்றியவர். இவரைத் திருமாலின் சேனை முதலியாரின் குறியீடென்று கருதுவர். இவரது பெற்றோரான காரியயாரும், உடைய நங்கையாரும் இவருக்கு மாறன் எனப் பெயரிட்டனர். பிறந்தது முதல் உலகியல் செயலற்று இருந்த இவரைப் பிறந்த பன்னிரெண்டாம் நாளில் அவ்வூர் இறைவன் திருமுன்பு உள்ள புளியமரத்தடியில் விட்டு விட்டனர் பதினாறாவது வயது வரை தன்னுடைய மூச்சையே சத்தாக உண்டு வாழ்ந்து இறைவனையே நினைத்திருந்த மாறன், சதகோபன் என்ற பெயரினையும் பெற்றார்.

அந்நிலையில் வடக்கே புனிதயாத்திரை மேற்கொண்டிருந்த மதுரகவியாழ்வார் தெற்கிலிருந்து ஒரு பேரொளி புறப்பட்டு வருதலைக் கண்டார். அவ்வொளியின் வழி சென்று ஆழ்வார் திருநகரியில் நம்மாழ்வாரைக் கண்டு அவர் பக்கம் ஒரு சிறுகல்லை எடுத்துப் போட்டு ஒலி எழுப்பினார். நம்மாழ்வாரும் அவ்வொலி கேட்டு முதன் முறையாகக் கண்விழித்துப் பார்த்தார். கண்விழித்த நம்மாழ்வாரிடம் 'செத்ததன் வயிற்றில் சிறியது பிறந்தால் எத்தைத் தின்று எங்கே கிடக்கும்' என்று மதுரகவி வினவ, 'அத்தைத் தின்று அங்கே கிடக்கும்' என நம்மாழ்வார் பதில் கூறினார். அப்பதில் மதுர கவிகளுக்குப் பெருமகிழ்ச்சியைத் தந்தது. அவரையே ஆசானாக ஏற்றுத் தொண்டு செய்தார். நம்மாழ்வார் முப்பத்தைந்து ஆண்டுகள் வாழ்ந்து திருநாடு அடைந்தார்.

ஆழ்வார்களுள் நம்மாழ்வாரே மிகவும் சிறப்பாகப் பாராட்டப் படுபவர். ஏனைய ஆழ்வார்களை 'உடல்' என்றும், பிரபந்தர் என்றும் கூறுவர் நம்மாழ்வாரை 'உயிர்' என்றும், பிரபந்தக் கூடசுதர்' (முதல்வர்) எனவும் கூறுவர் வைணவத்திற்கு நம்மாழ்வாரே பரமாச்சாரியார் 'முதல் தாய்' என வழங்குவர் நம்மாழ்வார் அருளிச் செய்த நூல்கள் திருவிருத்தம், திருவாசிரியம், பெரிய திருவந்தாதி, திருவாய்மொழி எனபவைகளாகும். இவை முறையே இருக்கு வேதம், எசுர் வேதம், அதர்வன வேதம், சாம வேதம் ஆகியவற்றின் 'சாரம்' என்பர்; நம்மாழ்வாருக்கு இதனால் 'வேதம் தமிழ் செய்த மாறன்' என்ற பெயரும் வழங்கப்படுகின்றது. நம்மாழ்வாரை ''அருமறை துணிந்த பொருள் முடிவை இன்சொல் அமுதொழுகிய தமிழினில் விளம்பியருளிய சடகோபன்'' எனப் பிள்ளைப் பெருமாளயங்கார் பாடுவர். இவரது திருவாய் மொழியை திராவிட உபநிடதம் என்பார் வேதாந்த தேசிகர்.

மதுரகவியாழ்வார் ஆழ்வார் திருநகரியின் அருகேயுள்ள திருகோளூரில், சித்திரைத் திங்களில் சித்திரை நாளில் பிறந்தார். நம்மாழ்வாரிடம் வைணவ நெறியினைக் கற்று அவர் திருநாடு சென்றடைந்த பின் அவருடைய திருவுருவத்தைப் பிரதிட்டை செய்து வழிபட்டு வந்தார் இவர் தனது ஆசாணாகிய நம்மாழ்வாரைப் பாடியதே' கண்ணினுண் சிறுத்தாம்பு' என்னும் நூலாகும் இது பதினோறு பாடல்களைக் கொண்டது. மதுரகவி ஆழ்வார் விசுவக்சேனரின் கீழ் பணிபுரியவரான குமுத கணேசனின் தோன்றியந்த வடிவமென்பர்.

குலசேகராழ்வார் :

சேர அரசரான இவர் மாசித் திங்கள் புணர்வசு நட்சத்திரத்தன்று தோன்றியவர். செந்தமிழிழும் வடமொழியிலும் கவிபாடுவதில் சிறந்து விளங்கியவர். திருமாலின் பால் மாறாத அன்புடையராயினும் இராம காதையைக் கேட்பதில் பெருவிருப்புடையவர். ஒரு போது இராமகாதையைக் கேட்டுக் கொண்டிருந்த நிலையில் இராமன் தனியொருவனாக பதினான்காயிரம் அரக்கர்களுடன் போரிட வேண்டிய நிலையைக் கேட்டு இராமன் உதவிக்கு தன் படைகளை அனுப்பத் தயார் செய்தார் என்று இவரைப்பற்றிக் குறிப்பிடுவர். இவர் பாடிய நூல் பெருமாள் திருமொழியாகும். நூற்றுஐந்து பாடல்களைக் கொண்ட இதில் இராமகாதையை ஒரு பதிகத்தும், தயரதன் புலம்பலை ஒரு பதிகத்திலும் பாடியுள்ளார். இவரது வடமொழி நூலான முகுந்தமாலை பத்தியைப் பற்றிய முழுமையான கவிதைத் தொகுதியாகும்.

*பெரியாழ்வார் :*

சிரீவில்லிபுத்தூரில் திருமாலின் ஊர்தியாகிய கருடனின் தோன்றிவந்த வடிவாக ஆனித்திங்கள் சுவாதி நட்சத்திரத்தன்று சோழியப் பிராமணர் ஒருவருக்கு மகனாகப் பிறந்தவரே விட்டுணு சித்தர் ஆவார் திருநந்தவனம் அமைத்து மாலை தொடுத்து ஆலிலை மீது கிடந்த கிருட்டிணனுக்குச் சூட்டுவதையே தம் இறைபணியாகக் கொண்டு வாழ்ந்தவர் ஒரு சமயம் பாண்டிய மன்னன் அவையில் அறிஞர் முன்னிலையில் உண்மைப் பொருளை உறுதி செய்து பொற் கிழி பெற்றார் என்றும், இதனை சிரீவில்லிபுத்தூர் வடபெருங்கோயிலில் எழுந்தருளியுள்ள திருமகள் கேழ்வனுக்கே ஆக்கினார் என்றும் இவரைப் பற்றிக் கூறுவர் இவருக்குப் பாண்டியமன்னர் வழங்கிய பெயரே பட்டர்பிரான் என்பதாகும். மேலும் வல்லபதேவன் எனும் அப்பாண்டிய மன்னனை வைணவ மரபில் இணைத்தவரும் இவரே யாவார். இறைவனைக் குழந்தையாகவும், தன்னைத் தாயாகவும் கருதி திருப்பல்லாண்டு பாடி கண்ணனைத் தூங்க வைத்தவர். இவர் இயற்றிய திருப்பல்லாண்டும், பெரியாழ்வார் திருமொழியும் பாகவ தத்தை இயற்றிய சுகரின் மொழியை ஒத்துள்ளது என்பர். பிள்ளைத் தமிழ் இலக்கியத்திற்கு இவரது நூலே முன்னோடியாகும் பெருமாளைப் பல்லாண்டு பாடியமையால் பெரியாழ்வார் எனப்பெயர் பெற்றார்.

*ஆண்டாள் :*

முதலாழ்வார் மூவரைப் போன்று இவரும் தாய் வயிற்றில் பிறந்தவரல்ல. பெரியாழ்வார், ஆடித்திங்கள் பூரநட்சத்திரத்தன்று தோன்றிய கோதை என்னும் இவரை ஒரு திருத்துமாய்ச் செடியின் அடியில் கண்டெடுத்ததாகக் கூறுவர் தான் கண்ணனின் உடைமை என்ற உணர்வு அவரிடம் எப்போதும் இருந்ததால் பெரியாழ்வார் பெருமாளுக்கென்று கட்டி வைக்கும் மாலையைத் தான் அணிந்து, தான் பெருமாளுக்கு ஏற்றவர்தானா எனப்பார்த்துக் கொள்வதுண்டு. இதனை அறியாத பெரியாழ்வாரும் சூடிக்கொடுத்த இம்மாலையைப் பெருமாளுக்குச் சாத்துவார். ஒரு நாள் இதனை அறிந்த பெரியாழ் வார் மகள் அணிந்த மாலையைப் பெருமாளுக்குச் சாத்துவது முறை யன்று எனக்கருதி அதனைச் சார்த்தவில்லை. ஆனால் பெருமாள் பெரியாழ்வாரின் கனவில் தோன்றி "கோதை சூடிய மாலையே தான் உகப்பது" என அருளினார். இதனாலேயே கோதைக்கு சூடிக்

கொடுத்த சுடர்க்கொடி என்ற பெயரும், பெரியாழ்வார் கோதையை நோக்கி 'என்னை ஆண்டாளே' என்று கூறியதால் ஆண்டாள் என்ற பெயரும் ஏற்பட்டன.

திருமணவயதில் கோதையிடம் பெரியாழ்வார் இறைவனை எவ்வடிவத்தில் மணம்புரிய விழைகின்றாய் எனக் கேட்க, ஆண்டாள் விட்டுணுவின் உறைவிடங்களை விவரிக்கச் சொல்ல, பெரியாழ்வாரும் அவ்வாறே உரைக்கத் தொடங்கி திருவரங்கநாதனைக் குறிப்பிட்ட வுடன், கோதை அவருக்கு மணவாட்டியாக விரும்பியதோடன்றி இறுதியில் அவருடனே இரண்டறக் கலந்துவிட்டாள் என்பர். பெரு மாளை அடைவதற்கென்று நோன்பிருந்து அவர் பாடிய பாடல்களே திருப்பாவையும், நாச்சியார் திருமொழியும் ஆகும்.

*தொண்டரடிப் பொடியாழ்வார் :*

சோழநாட்டுத் திருமாந்தன் குடியில் வாழ்ந்த சோழியப் பிராம்மணரான வேதவிசாரதருக்குத் துளசிமாலையின் தோன்றிவந்த வடிவமாக மார்கழித் திங்கள் கேட்டை நாளில் பிறந்தவர் விப்பிர நாராயணன். திருவரங்கத்தில் திருநந்தவனம் அமைத்து மலர்த் தொண்டு செய்து வந்த இவர் தேவதாசி எனப்படும் நாட்டிய மங்கையின் வயப்பட்டுப் பின் திருவரங்க நாதனால் ஆட்கொள்ளப் பட்டார். தொண்டர்களிடம் கொண்ட பேரன்பால் தம்மையும் தொண்டரடிப்பொடி எனப் பிறர் வழங்குமாறு வாழ்ந்தார். திரு மாலையும், திருப்பள்ளியெழுச்சியும் இவர் இயற்றிய நூல்களாகும். யோக நித்திரையில் ஆழ்ந்துள்ள திருவரங்கநாதனைப் பத்தர் குர லுக்குச் செவி சாய்க்க வேண்டிக் கோரி இயற்றியதே திருப்பள்ளி யெழுச்சியாகும்.

*திருப்பாணாழ்வார் :*

சோழ நாட்டு உறையூரில், குழந்தையில்லாத பாணர் ஒரு வருக்கு கார்த்திகைத் திங்கள் உரோகிணியில் நெல்வயலில் கிடைக் கப் பெற்றவரே இவ்வாழ்வார். தமது தாழ்ந்த குலத்தையெண்ணி காவிரிக்கரையின் தென்பகுதியில் நின்றவாறு திருவரங்கத்தை நோக்கி பாடித் தொழுது வந்ததால் இவரைப் பாண்பெருமாள் என்பர். இறைவன் இவர் பெருமையை உணர்த்த பிராமணரான லோக சாரங்க முனிவரை ஏவிப் பாண்பெருமாளைத் தோளில் சுமந்து

வரப் பணித்தான். அவரும் அவ்வாறே திருமுன்பு அழைத்துவர, அவ்வாழ்வார் அடிமுதல் முடிவரைப் பெருமாளை உணர்ந்து 'அமலனாதிப்பிரான்' என்று தொடங்கும் பிரபந்தத்தை இயற்றினார். முனிவர் இவரைத் தோளில் சுமந்ததால் இவர் முனிவாகனர் எனவும் அழைக்கப்பட்டார். 'வேர் குடுபவன் மண்பற்றுக்கழற்றாதாப் போலே' அத்திருமேனியோடே அங்கீகரித்தருள, ஆழ்வாரும் அனை வரும் காண அரங்கன் அடியிணையில் சென்று சேர்ந்தார் என்பர்

*திருமங்கையாழ்வார் :*

சோழ நாட்டில் சீர்காழிக்கருகில் உள்ள திருவாழி திருநகரம் என்று அழைக்கப்படும் திருக்குறையலூரில் 'ஆலி நாடர்' என்ற தந்தைக்கும் 'வல்லித்திரு' என்ற தாய்க்கும் திருமாலின் வில்லாகிய சார்ங்கம் என்பதன் தோன்றி வந்த வடிவமாக கார்த்திகைத் திங்கள் கார்த்திகை நாளில் பிறந்தவரே நீலன் அல்லது கலியன் என்னும் இவ்வாழ்வார். இவர் திருவாழி நாட்டின் சிற்றரசாக திருமங்கை என்னும் பட்டம் பெற்றுச் சோழர் படைத்தலைமையும் மேற்கொண்டு வாழ்ந்தார். இவர் குமுதவல்லி என்னும் பெண் மீது காதல் வயப் பட்டார் குமுதவல்லி உண்மையான வைணவனுக்கே தான் வாழ்க கைப் படுவேன் என்று கூறவும் விட்டுணுவின் பன்னிரெண்டு திருக் குறிப்புகள் கலியன் உடம்பில் தோன்றியதென்பர். கலியன் சிறப் பாகக் கலிபாடவல்ல புலவர் ஒருவரை வாதில் வென்று நாற்கவிப் பெருமாள் என்னும் பட்டத்தைப் பெற்றதாகவும் குறிப்பிடுவர் திரு மாலிடம் கொண்ட பத்தித் திறத்துக்குச் சான்றாகத் திருமங்கை மன் னன் சோழ அரசனுக்குச் செலுத்த வேண்டிய திறைப் பொருளை இறைவனே வேகவதியாற்றங்கரையினின்றும் வெளிப்படுத்திக்கொடுத் தான் என்பர்.

திருமால் அடியார்களின் திருத்தொண்டில் தம் செல்வத்தை யெல்லாம் செலவிட்டு, இறுதியில் களவிலும் வழிப்பறித் தொழிலிலும் ஈடு பட்டார் என்றும். இத் தொழிலில் மூண்டு நிற்கும் போதே இறைவனால் ஆட்கொள்ளப்பெற்றார் என்றும் இவரைப் பற்றிக் கூறுவர். இறைவன் மணவாளக் கோலத்திலும், தேவி மணப்பெண் கோலத்திலும், பேரளவில் நகைகள் அணிந்து வழிச் செல்வதை அறியாது அவர்கள் நகையினையும் அடியார் பணிக்காக வழிப்பறி செய்ய இறைவன் திருவிளையாடலால் அந்நகைகள் யாராலும் தூக்க வியலாமற் போகவே, இவ்வாறு நீ செய்த மந்திரத்தை எனக்குக்

கூறு' என வற்புறுத்தி திருவெட்டெழுத்து உபதேசம் பெற்றதாகக் கூறுவர் இவ்வாழ்வார திருவரங்கம் பெரிய கோவிலுக்குச் சுற்றுத் திருமதில் எடுத்ததாகவும், நம்மாழ்வார் திருவடியடைந்தபின், அவருக்குத் திருவத்தியயன விழாச் செய்தார் என்றும் கூறுவர். இவர் பாடிய ஆறு பிரபந்தங்களையும் 'மாறன் பணித்த தமிழ்மறை நான்கிற்கும் ஆறங்கமாகப் பாடினார்' என்பர்.

பன்னிரு ஆழ்வார்களும் இயற்றிய நூல்களை ஒன்று சேர்த்து நாலாயிரத்திவ்ய பிரபந்தம் என்பர். திருமால் திருக்கோவில்களில் விழாக்களின் போது தமிழ்ப் பிரபந்தத்தை இறைவன் முன்னும் வடமொழி வேதத்தை இறைவனின் பின்னும் ஓதிச் செல்வதிலிருந்து பிரபந்தங்களின் சிறப்பை அறியலாம். தமிழ் கூறு நல்லுலகத்தில் வைணவத்தை வளர்த்ததில் ஆழ்வார்களின் பங்கு அளவிடற்கரியது. அதே போன்று அவர்தம் பிரபந்தங்கள் வைணவ வழிபாட்டு மரபின் அனைத்துக் கொள்கைகளையும் உணர்ச்சி வழி விளக்கி நிற்பவை எனலாம்.

இறைவனிடம் வாழ்க்கைத் துயர்களை நீக்கக் கோரும் எளிய விண்ணப்பங்களாகவே ஆழ்வார்களின் திருப்பாசுரங்கள் அமைந்துள்ளன. அன்புடன் இறைவனை வழிபடுவதே துயர் நீக்கத்திற்கு ஒரே வழி எனவும், அவ்வழி அனைவருக்கும் பொதுவானது என்பதையும் இப்பாசுரங்கள் விளக்குகின்றன. தமிழை வேண்டுதல் மொழியாக்கியதானது சாதாரண மக்களுக்கும் இதனை உரியதாகச் செய்ததாகும். இறைவனுடன் உயிர் கூடியிருக்கும் ஒரு நிலையை வேண்டுவதாகவும் இப்பாடல்கள் அமைந்துள்ளன. இறைவனின் இயல்பான கருணையே அனைத்திற்கும் காரணமென ஆழ்வார்கள் நம்பியிருந்ததையும் இப்பாடல்கள் தெரிவிக்கின்றன. 'நீயின்றி நானில்லை', 'நானின்றி நீயில்லை' என்ற ஆழ்வார்களின் உணர்வு விளக்கமாகவும் இவை விளங்குகின்றன.

நேர்மையான வாழ்க்கை, உண்மையான சிந்தனையைப் போன்று எட்டெழுத்தின் தொடர்ந்த உச்சரிப்பும் பயனளிக்கவல்லது என்பதனையும், அன்பிற்கும் நன்னடத்தைக்கும் உள்ள தொடர்பினையும், பாவங்களிலிருந்து நீங்குதல் அல்ல வாழ்வுச் சிக்கல்; வாழ்வே சிக்கலானது என்பதனையும், அறஎண்ணங்கள், அறநடத்தைகள் போன்றவைகள் அடிப்படைகளல்ல, உணர்ச்சி வழியான அன்பு வழியே அடிப்படை என்பன போன்ற செய்திகளையும் ஆழ்வார்களின் பாடல்கள் தெரிவிக்கின்றன.

ஆழ்வார்களின் அமுதமொழிகளில் பாகவத புராணம் சுட்டும் ஒன்பது வகையான பத்தியின் முறைகளும், பத்தியின் அமைதி, அடிமை, நட்பு, பிரேமை, வாத்சல்ய நிலைகளும் சிறப்புடன் விளங்குகின்றன. இறைவனுடன் கூடியிருத்தலுக்கு அவனிடம் புகலடைதலே சிறந்த வழியாகும் என்பதும், ''இறைவனது வரம்பற்ற கருணை விரைவிலோ, சிறிது காலம் தாழ்த்தியோ கிடைக்கலாம்; அதனைப் பெறுதற்குத் தயாராக இருத்தலே நமது கடமையாகும்'' என்ற செய்திகளையும் ஆழ்வார்களின் பாடல்கள் கொண்டுள்ளன. இறைவனது வெளிப்பாட்டு உருவ நிலைகளும், தோன்றிவந்த வடிவ நிலைகளும், ஏனைய நிலைகளும் கூட ஆழ்வார்களின் பாசுரங்கள் தெளிவாக விளக்குவதுடன் படிம வடிவங்களில் தெய்வத்தன்மையை விளங்கவைக்கும் முறைகளையும் கூறிச் செல்கின்றன. இறைவன் முன்பு தன் பணிவான நிலையைக் குறிப்பிடுவதற்குத் தம்மை அடியவர் என்று கூறிக்கொள்ளும் பண்பையும் இவை சுட்டுகின்றன.

ஆழ்வார்கள் தங்களது பாடல்களில், பத்தியோடு தமிழையும் வளர்த்த திறத்தைக் காணலாம். ஒரு கோதைக்கு அரங்கன் தொடர்பாக ஏற்பட்ட ஆழ்ந்த அன்பு பின்னர் மீராவின் வீணை தொடுக்கும் இசையாக மாறியது. தொண்டரடிப் பொடியாழ்வாரின் இறைநுகர்வே துளசிதாசருக்கும் ஏற்பட்டது. ஆழ்வார்கள் விவரிக்கும் ஆயர்மடத்தை நப்பின்னையே சைதன்யரின் இராதையாக உருவெடுத்தாள். இவ்வாறு ஆழ்வார்கள் ஊன்றிய பத்திவிதை, இராமானுசர், வேதாந்த தேசிகர் காலத்தில் பெருமரமாகத் தழைத்து வளர்ந்தது. இவர்கள் காலத்தில் இம்மரபிற்கும் பேரதிர்ச்சி ஏற்பட்டாலும், வைணவ மரபு இன்னும் உறுதியாகவே நிற்கின்றது. விசயநகர மன்னர்கள் அரண்போல் இதனைக் காத்தனர். கிருட்டிண தேவராயர் பாடிய 'ஆமுக்தமால்யதம்' என்ற இணையற்ற தெலுங்குப் பிரபந்தம் சூடிக்கொடுத்த சுடர்க்கொடி அரங்கன் மீது கொண்ட காதலைத்தான் கூறுகிறது.

## 7. சந்தானாச்சாரியர்கள்

சமயாச்சாரியர்களாகிய ஆழ்வார்கள் நாராயணபத்தியிலும் அன்பிலும் திளைத்தவர்களெனில் சந்தானாச்சாரியர்களாகிய மெய்ப்பொருளியலார் பரசமயகருத்துக்களை மறுத்து, தங்கள் கொள்கைகளையும் கோட்பாடுகளையும் நிலைநாட்டியவர்எனலாம். இவர்கள் ஆழ்வார்களின் உணர்ச்சிகளை அறிவுவழியில் விளக்கியவர்கள். அறிவின்வழி

இறைவனைத் தேடியவர்கள். ஆழ்வார்களைப் போன்றே இவர்களிடமும் அன்பு மிக்கிருப்பினும் அறிவு முனைந்து நிற்கப்பெற்றவர்கள். மறைநூல்களை ஆய்வுசெய்து சமயச்சொற்போர் நிகழ்த்தி ஆழ்வார்களின் உணர்வுகளை மெய்ப்பொருள் உண்மைகளாக்கியவர்களாதலின், இவர்களின் வழி அறிவு வழி எனப்படுகிறது.

ஆசாரியர்களின் குருபரம்பரையை விளக்கும்போது எம்பெருமானையே முதல் ஆசாரியனாகக் கொண்டாலும், வரலாற்று நிலையில் நம்மாழ்வாரையே ஆசாரியர்களுக்கு முதல்வராக வைணவர் குறிப்பிடுவர் இவரை அடுத்து நாதமுனிகளைக் குறிப்பிடுவர். குருபரம்பரையில் பல ஆசாரியர்கள் குறிப்பிடப்பட்டிருப்பினும் பின்வரும் ஆசாரியர்களே இன்றியமையாதவர் எனக்கருதப்படுகின்றனர்.

*நாதமுனி :*

வீரநாராயணபுரம் சொட்டைக்குலத்தைச் சார்ந்த ஈசுவர முனிகளுக்கு மகனாகக் காட்டு மன்னார் கோயிலில் ஆனித்திங்கள் அனுச நட்சத்திரத்தன்று பிறந்தவர் நாதமுனிகள். முனிவர் எனக் கருதப் படினும் இல்லற வாழ்வில் இருந்தவரேயாவர். தம் ஊர்த் திருக்கோயிலில் அன்பர் இருவர் திருவாய் மொழிப் பாடல்களைப் பாடக்கேட்டு, ஆழ்வார் திருநகரி சென்று இறையருளால் யோக நெறியின் வழி நம்மாழ்வாரிடம் இருந்து நேரில் பிரபந்தங்களைப் பெற்றவர் இவர் எனக்கூறுவதுண்டு. நாதமுனி பிரபந்தங்களுக்கு இசை அமைத்ததுடன் அவற்றை நான்கு பகுதிகளாகப் பிரித்தார். முதல் பகுதியில் பெரியாழ்வார், ஆண்டாள், குலசேகராழ்வார், திருமழிசையாழ்வார், தொண்டரடிப் பொடியாழ்வார், மதுரகவியாழ்வார் ஆகியோரது திருப்பாசுரங்களையும், இரண்டாம் பகுதியில் திருமங்கையாழ்வாரின் திருப்பாசுரங்களையும் மூன்றாம் பகுதியில் நம்மாழ்வாரின் திருவாய்மொழியையும், நான்காம் பகுதியில் பொய்கை, பூதம், பேய் ஆழ்வார்களின் அந்தாதிகளையும், திருமழிசையாழ்வாரின் ஒரு அந்தாதியையும், நம்மாழ்வாரின் மூன்று பாடல்களையும், திருமங்கை யாழ்வாரின் மூன்று பாடல்களையும் வைத்து, அவற்றை நால்வகை தமிழ் வேதங்களாக வகுத்து கோயில் வழிபாட்டில் இணைந்த ஒன்றாகவும், இறைவெளிப்பாட்டின் எளிமையை விளங்குவதாகவும் அமைத்தார். இவற்றுள் முதல் இரண்டு பகுதிகள் எட்டெழுத்தின் பெருமையையும், மூன்றாவது பகுதி பகவான் கிருட்டிணர் கீதையில் காட்டிய அடைக்கலத்தின் பெருமையை உணர்த்தும் சரமசுலோகத்தையும், நான்காம் பகுதி துவய மந்திரத்தின் பொருளையும் விளக்குவதாக குறிப்பிடுவர்.

நாதமுனிகளுக்கு எட்டு மாணாக்கர் இருந்தனரெனவும், அவர்களுக்கு யோகத்தைப் பயிற்றுவித்ததுடன் வைணவத்தையும், பிரபந்தத்தையும் பரப்பும் படியும் கூறினார் என்றும் சொல்வர். இவரது காலம் கி. பி. 824-920 ஆகும். இவர் இயற்றிய நூல்கள் நியாய தத்துவம், யோக இரகசியம் என்பனவாகும்.

*ஆளவந்தார் :*

எமுனாச்சாரியர் என்றும் அழைக்கப்படும் இவர் நாதமுனியின் பேரர் ஆவார். இளமைப் பருவத்தில் சோழ மன்னரின் அவையிலிருந்த ஆக்கியாழ்வான் என்பவரைச் சொல்லாடலில் வென்றார் என்றும் இவரைக் குறிப்பிடுவர். இவர் தமது ஆசிரியரான இராமமிசுரர் என்பவரின் விருப்பத்திற்கிணங்கத் துறவறத்தை மேற்கொண்டு வாழ்ந்தார் திருவரங்கத்தை நிலவுலகின் வைகுந்தம் எனக் கூறியவர். இவரே இராமானுசரை ஆசாரிய நிலைக்குத் தேர்ந்தெடுத்தவர். இறுதிக்காலத்தில் இவருக்கு மூன்று நிறைவேறாத விருப்பங்கள் இருந்தன என்பர் அவை 1) தெளிவும் எளியதுமான ஒரு உரை பிரம்ம சூத்திரத்திற்கு இயற்றப்பட வேண்டும். 2) பராசரர், சதகோபர் ஆகிய பெயர்களைத் தகுந்த இருவருக்குச் சூட்ட வேண்டும். 3) பத்தி வழிபாட்டு மரபைப் பரப்ப வேண்டும் என்பனவாகும் இராமானுசர் இவ்விருப்பங்களை நிறைவேற்றுவதாக வாக்களித்த பின்னரே இவரது உயிர் பிரிந்ததென்பர். ஆனித்திங்கள் உத்திராடத்தை இவரது திருநாளாக வைணவர்கள் கொண்டாடுவர். இவர் எழுதிய நூல்களாவன சித்தித்திரயம், ஆகமப் பிரமாணியம், கீதார்த்த சங்கிரகம், மகாபுருட நிருணயம், சதுசுலோகி, தோத்திர இரத்தினம்.

சித்தித் திரயம் உணர்வு, தனியன், இறைவன் ஆகியவைகளைப் பற்றிக் கருதுவதாகும். கீதார்த்த சங்கிரகம் பிரகிருதி, புருடன், உறுதிப்பொருள் ஆகியவற்றின் இயல்புகளையும், உறுதிப்பொருளான வீடு பேற்றினை அடைய பத்தி, பிரபத்தி ஆகிய நெறிகளின் இன்றியமையாத் தன்மையையும் விளக்குகிறது. ஆகமப் பிரமாணியம், அத்வைதக் கூற்றான சாத்வதம், பௌசுகர சம்கிதைகளில் விவரிக்கப்பட்டுள்ள பாஞ்சராத்திர வழிபாட்டு மரபு வேதங்களின் சான்றினைப் பெற்றதில்லையாதலால், அது வேத வேதாங்கங்களுக்கு எதிரானவை என்ற முந்தைய கருத்தை மறுத்து, பாஞ்சராத்திர வழிபாட்டு மரபு இறைவனாகிய நாராயணனின் கூற்று. அது பாதராயணர் ஏற்றுக் கொண்ட வேதங்களின் அடிப்படைகளை மகாபாரதத்தில் விளக்கி

யுள்ளவாரே தன்னுள் கொண்டுள்ளது என்று கூறுவதாகும். சமயத்தின் இறைவனாகிய பகவானின் இயல்வரையறையும், வாசுதேவனாகிய பிரம்மனின் இயல்வரையறையும், ஒன்றே எனக் கூறுகின்றது. பிரம்மனைப் போற்றுதலாக ஒவ்வொரு செயலும் விளக்கப்படுவதானது சாத்வத நடத்தைக் கொள்கையை நடைமுறை வாழ்க்கையாக்கப்பட்ட வேதாந்தம் எனக் கூறலாம் என்கின்றது வாசுதேவனின் வடிவங்களனைத்தையும் அவனுடைய ''தோன்றிவந்த வடிவங்''களேயன்றி 'வெளிப்பாட்டு வடிவங்களல்ல' என்றும், உயிரின் நிலைத்த தன்மையையும் இந்நூல் தெரிவிக்கின்றது. எசுர் வேதத்திலேயே இந்த ஏகாயன மரபு குறிப்பிடப்பட்டுள்ளதென்றும், அபிகமனம், உபாதானம், இச்சை, சுவாத்தியாயம், யோகம் முதலான ஐவகை வேள்விகள் உண்மையில் தன் முனைப்பை அழித்து இறைவனிடம் தன்னை ஒப்படைத்தலையே குறிப்பனவென்றும் கூறும் வைணவ ஆகமங்களை பிரமாணங்களாக ஏற்கப்பட வேண்டியதன் இன்றியமையாத நிலையை விளக்குகின்றது. இறைவன், சிரீ இலக்குமி ஆகியோரிடம் ஆளவந்தாருக்கிருந்த ஈடு பாட்டினை விளக்குவது தோத்திர இரத்தினமும் சதுசுலோகியுமாகும். மகாபுருட நிர்ணயம் விட்டுணுவின் மேலாந் தன்மையை நிலை நாட்டுவதாகும்.

*இராமானுசர் :*

சிரீபெரும்புதூரில் ஆதிகேசவப் பெருமாளுக்கும் காந்திமதியம்மைக்கும் கி.பி. 1017ம் ஆண்டு சித்திரைத் திங்கள் திருவாதிரை நட்சத்திரத்தில் பிறந்தவர் இராமானுசர். இலக்குவனின் பெயரான இராமானுசர் என்னும் பெயரை இவருக்குச் சூட்டியவர் ஆளவந்தாருடைய மாணவரான பெரியநம்பியாவார். இராமானுசர் தமது பதினேழாம் வயதில் திருமணம் செய்து கொண்டார். இவரது முதல் ஆசிரியரான யாதவப்பிரகாசரிடம் கருத்து வேறுபாடு கொண்டு எமுனாச்சாரியாரின் ஐந்து மாணாக்கர்களில் ஒருவரான கோத்திப் பூரணரின் இறைவுணர்வால் கவரப்பட்டு அவரை ஆசிரியராக ஏற்றார். அவரிடத்து இரகசிய மந்திரங்களின் பொருளையும், திருமலையாண்டார், ஆளவந்தாராழ்வார் ஆகியோரிடம் திருவாய்மொழியையும், திருமாலை நம்பியிடம் இராமாயணத்தையும் கற்றார்.

இராமானுசருக்கு அந்நாளில் வழங்கிவந்த குல இனவேறுபாடுகள் சற்றும் பிடிக்கவில்லை. அவர் கருத்துப்படி எந்த வகுப்பினரும் வைணவராகலாம்; அப்போது அவர்கள் பண்டைக் குலத்தைவிட்டுத்

தொண்டர் குலத்தவர் ஆகின்றார் என்ற உறுதியுடன் திருமாலடி யாரின் எச்சிலைக்கூட உண்ண விரும்பியவர் இராமானுசர். இச் சிந்னையின் விளைவாகப் பண்டைய சாதீய உணர்வில் திளைத்து நின்ற மனைவியையும் துறந்து யதீராசனாக ஆனார் என்பர். இவருக்குத் துவய மந்திரத்தைக் கற்பித்து மதுராந்தகத்தில் துறவறத்தை வழங்கியவர் பெரிய நம்பியாவார்.

ஆளவந்தாரின் விருப்பப்படி திருவரங்க ஆச்சாரியத் தலைமை ஏற்று அதனைத் திருத்தியமைந்து வழிபாடுகளுக்கும் ஏற்பாடு செய் தார். இவரது திருத்தங்களை விரும்பாத சிலர் இவரை நஞ்சூட்டிக் கொல்லவும் முயன்றனர். ஆளவந்தாருக்களித்த வாக்குறுதிப்படி இவர் பிரம்ம சூத்திரத்திற்கு உரை எழுதியதுடன் திருக்குருகைப் பிரான் பிள்ளையைக் கொண்டு திருவாய்மொழிக்கு 'ஆறாயிரப்படி' எழுதுவித்தார். தம் மாணாக்கரான பராபரபட்டரைக் கொண்டு திருமாலின் ஆயிரந்திருநாமங்களுக்கு உரை எழுதவைத்து வெளியிட் டார். வைணவர்களிடம் கொண்ட பேரன்பின் விளைவாக இவர் திருக்கோட்டி நம்பிகளிடமிருந்து பெற்ற உபதேசத்தை அனைவருக்கும் சொல்வதால் தமக்குப் பெருந்தீங்கு நேரிடும் என்று தெரிந்தும், கோபு ரத்தின் மீதேறி நின்று பலரும் அறிய அதனைக் கூறினார். தீண்டா தாரைத் திருக்குலத்தவர் ஆக்குவதில் பெருமுயற்சி மேற்கொண்டார். அவர்களிடம் உபதேசமும் பெற்றதுடன், சீடராகவும் ஏற்றுக்கொண் டார் இராமானுசர். தனது இறுதிக் காலத்தில் அரசாங்கத்தின் துன்புறுத்தலால் மைசூரின் மேலகோட்டைப் பகுதியில் பன்னிரண் டாண்டுகள் வாழ்ந்தார். அதுசமயம் விட்டலதேவரை வைணவராக மாற்றினார். பின்னர் திருவரங்கம் திரும்பி ஆசாரியராக விளங்கி கி.பி. 1127-ல் பெருமாள் திருவடி சேர்ந்தார்.

இராமானுசருக்கு முன்பே வைணவ மரபுக்கு இறையியலான மெய்ப்பொருள் விளக்கங்கள் இருந்தனவெனினும் அதனை முழுமை யாக்கியவரும், வைணவ வழிபாட்டு மரபைச் சிறந்த முறையில் பரப்பியவரும் இவரேயாவர். இதனாலேயே வைணவ மெய்ப்பொரு ளியலுக்கு இராமானுச சித்தாந்தம் என்ற பெயரும் வழங்கி வரு கின்றது. இவருடைய மாணாக்கர்களுக்கும், பின்பற்றுவோர்களுக் குக் 'உடையவராகவும்', மெய்ப்பொருளியலாருக்கு பாடியகாரர் அல்லது உரைகாரர் ஆகவும் இன்றும் விளங்குகின்றார். துறவிகளில்

முதன்மையானவராகக் கருதுவதால் 'யதிராசராக' விளங்குகிறார். இவரது கையில் தான் வைணக் கருத்துக்கள் முழுமையான தத்துவ வடிவம் பெற்றன எனலாம்.

இவர் எழுதிய நூல்கள் வேதாந்த சாரம், வேதாந்த தீபம், சிரீபாடியம், கீதாபாடியம், கத்யதிரயம் (சரணாகதி, திருவரங்கம், வைகுண்டம்), பகவத்தாரான கிரமம், வேதார்த்த சங்கிரகம் என்பவையாகும். இவற்றுள் முதல் மூன்றும் பிரம்மசூத்திரத்தின் உரைகளாகும். கத்திய திரயம் சரணகதித்தத்துவம், திருவரங்கம், வைகுண்டம் ஆகியவற்றின் பெருமையைப் பேசுவதாகும். பகவத்தாரான கிரமம் வழிபாட்டு முறைகளை விவரிப்பதாகும். வேதார்த்த சங்கிரகம் வைணவமரபு மெய்ப்பொருளியலை அனைத்து வைணவத் தலையாய இலக்கியங்களின் அடிப்படையில் விளக்கி எழுதப்பட்ட தனி நூலாகும். இவருடைய சிரீவைணவ மெய்ப்பொருளியல் கௌதமபுத்தரை இதயமாகவும். சங்கரரைத் தலையாகவும், மத்திய ஆசியச் சமயங்களின் கருத்துக்களை உடலாகவும் கொண்டு விளங்குவதெனக் கூறுவர்.

இராமானுசரின் காலத்திற்குப்பின் வைணவம் வடகலை தென கலை என இரு பிரிவுகளாகப் பிரிந்தது. இராமானுசரின் வழித தோன்றல்களாக இருவகை ஆசாரிய பரம்பரைகளும் இவற்றுக்கு இருக்கின்றன. இப்பிரிவின் காரணங்களாக மொழி, முத்தி, பிரபத்தி போன்றவையும் திருமகளான இலக்குமியைப் பற்றிய கருத்தும் அமைந்தன. வடகலையினர் வடமொழி இலக்கியங்களான வேத உபநிடதங்கள், கீதை ஆகியவற்றின் வழி நடந்தாலே முத்தி கிடைக்கும் எனக்கருதினர். தென்கலையினர் தமிழ் பிரபந்தங்களை கடைப்பிடித்தாலே வீடுபேறு கிடைக்கும் என்றனர். வடகலையினா பிரபத்தியில் தன்முயற்சி தேவை எனவும், தென்கலையினர் அது தேவையற்றது எனவும் கூறுவர். இவர்கள் தங்கள் கருத்தினை "குரங்கும் அதன் குட்டியும்" "பூனையும் அதன் குட்டியும்" ஆகியவற்றின் நடத்தைகளின் மூலம் விளக்கினர். இலக்குமியானவள் விட்டுணுவிடமிருந்து பிரிக்கப்படமுடியாதவள் என்றும் முத்தியை அளிக்கவல்லவள் என்றும் வடகலையினர் கருத, தென்கலையினர் இலக்குமியை மானிடநிலைக்குட்படுத்தி அவள் உதவி கொண்டு வீடுபேறு அடையலாம் என்றும் கருதினர், வடகலையின் சிறந்த ஆசாரியராக வேதாந்த தேசிகரையும், தென்கலையின் சிறந்த ஆசாரியராக பிள்ளை லோகாச்சாரியாரையும், மணவாள மாமுனிகள் ஆகியோரையும் குறிப்பிடுவர்.

*வேதாந்த தேசிகர் :*

இவர் காஞ்சிபுரத்தை அடுத்துள்ள "தூப்புல்" என்னும் இடத்தில் அனந்தசூரிக்கும், தோத்தாத்திரி அம்மையாருக்கும் புரட்டாசித்திங்கள் திருவோண நட்சத்திரத்தன்று விட்டுணுவின் கண்டையின் தோன்றி வந்த வடிவமாமப் பிறந்தவர். இவரது இயற்பெயர் வேங்கடநாதன் என்பது ஆகும். திருமங்கை என்பது இவரது துணைவியின் பெயர்.

இளவயதிலேய தனது தாய்மாமனான "கிடாம்பி அப்புள்ளா ரிடம்" சகல கலைகளையும், கருட மந்திர உபதேசமும் கற்றார். தென்னாற்காடுமாவட்டத் திருவயந்திபுரத்திலுள்ள அயக்கிரிவனை வணங்கி அருள்பெற்றதை "வெள்ளைப்பரிமுகர் தேசிகராய் விரகால் அடியோம் உள்ளத்து எழுதியது ஓலையிட்டனம்யாம்" எனத்தேசிகரே குறிப்பிடுவதிலிருந்தும், கருடாழ்வானை வணங்க, "கருடன்அயக்கிரீல ரோடு நேரில் தோன்றித் தேசிகருக்கு மந்திரோபதேசம் செய்வித்துத் தம்மைப் பற்றியும் பாடும்படி ஆணையிடட்டுச் சென்றதைதயும் கருட பஞசாகத்தின் முடிவில் தேசிகரே குறிப்பிடுவதிலிருந்து அறியலாம்.

தேசிகர் தமிழ்ப் பிரபந்தங்கள் வடமொழி வேதம் போன்ற பெருமை உடையவனனே என்று நிலை நாட்டியதைக் கண்டு உகந்து திருவரங்கப் பெருமாளே இவருக்கு "உபய வேதாந்தாசாரியர்" என்ற பெயரை அளித்ததாகவும கூறுவர்.

ஒருமுறை நாடாத்தூர் அம்மாள் பாஞ்சராத்திரத்தை விளக்கிக் கொண்டிருந்த போது வேங்கட நாதரைக் கண்ட உடன் தான் சொல்லி வந்த செய்தி மறந்துவிட இவர் அதனை எடுத்துக் கொடுத் ததனால், சர்வதந்திர சுதந்திரன் என்ற பெயரையும் பெற்றார். கி பி. 1310-ல் மாலிக்கபூர் தென்னாட்டின்மீது படையெடுத்த பொழுது சீரீபாடியத்தின் சிறந்த உரைவிளக்கமான சுதர்சனப்பட்டரின் சுருத பிரகாசித்தையும், அவரது இரு குமாரர்களையும் வேதாந்த தேசிகர் காப்பாற்றினார் என்றும் குறிப்பிடுவர். இராமானுசரின் கொள்கையை நிலைநாட்டுவதையே தோக்கமாகக் கொண்ட இவரை சரணாகதி யினைத் தனிப்பட்ட வீடு பேற்று வழியாக நிறுவியவர் என்றும், திருவுடன் கூடிய திருமாலே பரம்பொருள் என எடுத்துக்காட்டியவர் என்றும், உபயவேதாந்த ஒற்றுமையை உணர்த்தியவர் என்றும் குறிப் பிடுவர், தேசிகன் என்ற பெயர் பொதுவாக ஆசாரியனைக் குறிப் பிட்டாலும் வைணவ உலகில் இவரையே சிறப்பாகக் குறிக்கும். இவரது காலம் கி.பி. 1268-1369 என்பர்.

இவர் இயற்றிய நூல்கள்-இரகசிய திரயசாரம், நியாய பரிசுத்தி சேசுவரமீமாம்சை, பரமத பாடியம், தத்துவ முத்த கலிபம், சர்வார்த்த சித்தி, நியாய சித்தாந்த ஞானம், வைராக்கிய பஞ்சகம், பாஞ்சராத்திர ரச்சை, திராவிட வேத உபநிடதம், தோத்திரங்களான தசசதகம், கோபாவிம்சதி போன்றவையாகும். இவரது கொள்கைகளை முழு வதும் பின்பற்றுவோர் வடகலை வைணவர் எனப்படுகின்றனர்

*பிள்ளை லோகாச்சாரியார் :*

இவர் வேதாந்த தேசிகரின் சமகாலத்தவர். இவரை தென் கலையின் காரண கர்த்தர் என்பர். இவர் ஆழ்வார் திருநகரியில் பிறந் தவர். இவருக்குப் பின் தென்கலையை எம்பார் என்ற ஆசாரிய பரம்பரையினர் விளக்கி வந்தனர். இவரது நூல்களுள் சிறப்பானவை சிரீவசனபூசனம், முமுச்சுப்படி, தத்துவத்திரயம், அர்த்த பஞ்சகம், நவரத்தினமாலை என்பன.

சிரீவசன பூசனம் நான்கு பகுதிகளைக் கொண்டுள்ளது முதல் பகுதி திருமகளையும், திருமாளின் ஐவகை நிலைகளையும் விளக்கு கின்றது. இரண்டாவது பகுதி இறை அருளையும், மூன்றாவது பகுதி இறை அடியவர்களின் இறைவாழ்க்கையும், நான்காவது பகுதி இறை அருளைவிட எவ்வாறு ஆசாரிய அபிமானம் விரும்பத்தக்கது என்பதனையும் விளக்குகிறது.

*மணவாளமாமுனிகள் :*

வைணவர்களின் தென்கலைப் பிரிவினர் நம்மாழ்வார். இராமா னுசர், மணவாளமாமுனிகள் ஆகிய மூவரையும் ஓங்காரத்திற்கு ஒப்பானவர்கள் என்றும் அதில் 'அகரம்' நம்மாழ்வாரையும், 'உகரம்' உடையவரான இராமானுசரையும். 'மகரம்' மணவாளமாமுனி களையும் குறிக்கும் என்று கருதுவர்.

மணவாளமாமுனிகள் ஆழ்வார் திருநகரியில் திருநாவீறுடைய பிரான் தாசரண்ணர் என்பவருக்கு ஐப்பசித்திங்கள் மூலநட்சத்திரத் தன்று மகனாகப் பிறந்தார். பல்கலைகளையும் கற்றுத் தேர்ந்த இவர் பிள்ளை லோகாச்சாரியர் மாணாக்கரான திருவாய்மொழிப் பிள்ளை யிடம் இரகசியப் பொருள்களையும் சம்பிரதாயப் பொருள்களையும் கேட்டறிந்தார் என்பர். மணவாளமாமுனிகள் என பொதுவாக இவரைக் குறிப்பிட்டாலும் "சீயர்" என தனியே குறிப்பிடும் சொல் இவரையே சுட்டுவதாகும்.

தென்கலையினர் தங்களின் தினசரிக் கடைப்பிடிகளின் பொழுது 'ஆழ்வார் திருவடிகளே சரணம்' எம்பெருமானார் திருவடிகளே சரணம்! சீயர் திருவடிகளே சரணம்! எனக்கூறுவது அவர்களுக்கு இவர்மீது உள்ள மதிப்பை உணர்த்தும் இவர் இயற்றிய நூல்கள் ஆசாரிய இருதயம், ஆர்த்திப்பிரபஞ்சம், எதிராச விம்சதி, உபதேச இரத்தின மாலை என்பனவாகும்.

இவ்வாசாரியர்களைத் தவிர்த்து நாலாயிரத்திற்கு உரையாக அமைந்துள்ள ஆறாயிரப்படி, ஒன்பதினாயிரப்படி, பன்னீராயிரப்படி இருபத்தி நாலாயிரப்படி. முப்பத்தாறாயிரப்படி எனவிரிந்து செல்லும் ஈடுகளை எழுதிய திருக்குருகைப் பிரான் பிள்ளான், நஞ்சீயர், வாதி கேசரி, அழகிய மணவாள சீயர், பெரியவாச்சான் பிள்ளை, வடக்குத் திருவீதிப்பிள்ளை ஆகிய ஆச்சாரியார்களும் வைணவ வழிபாட்டு மரபினை சிறந்துவிளங்கச் செய்தவர்கள் எனலாம்.

## வடகலை, தென்கலை வேறுபாடுகள் :

வடகலைக்கும், தென்கலைக்கும் உள்ள வேறுபாடுகளைப் பின்வரும் பதினெட்டு வகைகளில் குறிப்பிடுவர்.

| | தென்கலை | வடகலை |
|---|---|---|
| 1. | இறையருள் தானே பெருக்கெடுப்பதாகும். | இறையருள் பெருக்கெடுப்பது உயிரை ஓரளவு சார்ந்ததாகும். |
| 2. | இறையருளினால் இறைவனும் உயிரும் பயனடைகின்றன. இறையருளில் பல நிலைகளும் உள்ளன. | இறையருளினால் பயனடைவது உயிர்மட்டுமே ஆகும். இறை அருளில் ஒரே நிலை மட்டும் ண்டு. |
| 3. | இறைவனை அணுகுவதற்கு கடமை, பத்தி, பிரபத்தி, ஆசாரிய அபிமானம் ஆகிய அனைத்தும் தேவையாகும். | இறைவனை அணுக பத்தியும் பிரபத்தியும் போதுமானவை ஆகும். |
| 4. | இலக்குமியும் உயிரைப் போன்றவளே. | இலக்குமி இறைவனைப் போன்றவள். |

| | | |
|---|---|---|
| 5. | இலக்குமி உயிர்க்கு வீடு பேறு நல்க வேண்டி இறைவனிடம் பரிந்துரைப்பவள். | இலக்குமி தானே வீடுபேற்றை அளிக்கவல்லவள். |
| 6. | இறை அன்பு பத்தனின் தவறுகளைத் திருத்துவது | இறை அன்பு பத்தனின் தவறுகளை ஒதுக்குகின்றது. |
| 7. | இறைவனின் தயவு உயிர் துன்புறுவதைக் கண்டு தானும் துன்புறுவதாகும். | இறைவனின் தயவு உயிரின் துன்பத்தை நீக்குவது. |
| 8 | பிரபத்தி பத்தனின் இறை உயிர் பற்றிய அறிவில் அடங்குவது. | பிரபத்தி உயிர் தன்னை இறைவனிடம் ஒப்படைப்பது ஆகும் |
| 9. | பிரபத்தி நெறி நிற்கும் பிரபன்ன நிலை பிரபந்தங்களை மட்டும் கற்றுத் தெரிவது | பிரபத்தி நெறி நிற்கும் பிரபன்ன நிலை வேறுவழி எதுவும் இன்றி இறைவனைப் புகலடைவது. |
| 10. | பிரபன்னர்கள் உலகியல் கடமைகளைச் செய்ய வேண்டியது இல்லை. | பிரபன்னர் உலகியல் கடமைகளைச் செய்ய வேண்டும். |
| 11. | பிரபத்தியுடன் அறிவு,வினை நெறிகள் முரண்பட்டவை அல்ல. | பிரபத்தி நெறிக்கு ஏனையவை முரண்பட்டவையாகும். |
| 12. | உலக நலன்பொருட்டு கடமைகளைச் செய்வது பிரபன்னரின் விருப்பத்தின் பாற்பட்டது ஆகும். | உலக நலன் பொருட்டு செய்யப்படும் கடமைகள் கூட இறைவனை மகிழ்விப்பதற்கு இன்றியமையாதனவாகும். |
| 13. | பிரபத்தியின் கூறுகள் அனைத்தும் கடைப்பிடிக்காமல் இருக்கலாம். | பிரபத்திக் கூறுகள் அனைத்தும் கடைப்பிடித்தல் கடமையாகும். |
| 14. | வீடு பேற்றிற்கு இறைவனே காரணம். | வீடு பேற்றிற்கு பிரபத்தியே காரணம். |

| | |
|---|---|
| 15. பிரபன்னன் தமது தீய செயல்களுக்குக் கழுவாய் தேடுவது பயன் அற்றது. | கழுவாய் தேடுவது இன்றியாமை யாதது. |
| 16 திருக்குலத்தாரும் அந்தணர் களுக்கு இணையானவர் களே. | திருக்குலத்தார் தமக்குரிய மதிப்பை மட்டுமே பெறுபவர். |
| 17. இறைஉயிர் தொடர்பு அக வயமானது. | இறைஉயிர் தொடர்பு புறவய மானது. |
| 18 வீடுபேறு அடைந்தோர் நிலைத்திருப்பவர். | வீடுபேறு அடைந்தோர் வைகுந் தந்தைச் சென்றடைபவர். |

இப்பதினொன் வேறுபாடுகளைப் பிறவகைகளிலும் கூறுவது உண்டு. வடகலையினரும், தென்கலையினரும் இவ்வாறு தத்தம் கொள்கைகளில் வேறுபட்டிருப்பினும் வேதாந்த தேசிகருடைய உரையை இருவகையினரும் பிறசமய மரபினர் வைணவத்தைத் தாழ்த்தும் காலை வாதிட்டு வெல்வதற்காக ஏற்றுக் கொள்வர் வடகலையினர் அகோபில மடத்தின் மூலமும் தென்கலையினர் சியர் மடத்தின் மூலமும், இன்றளவும் திருமால்நெறியைக் காத்தும் பரப்பியும் வருகின்றனர்.

## 8. வைணவக் கடைப்பிடிகள்

பகவானோடு நெருங்கிய தொடர்பு கொண்ட வைணவம், அவனைப் போன்றே அழிவில்லாதது. திருநாடுகள், அருளிச் செயல்கள், தோத்திரங்கள், ஆராவமுதமாக விளங்கும் ஆசாரியர்களின் விரிவுரைகள் ஆகிய செல்வங்களைக் கொண்டதும், நாதமுனிகள், இராமானுசர், மனவாள மாமுனிகள் போன்ற மகாசாரியர்களால் கண்ணிமைபோல் வளர்க்கப்பட்டதும், தற்போதைய பெரியோர்களால் வரம்புக்குட்பட்டு வளர்த்துக் காப்பாற்றப்பட்டு விளங்குவதுமான வைணவம் தனக்கென்று சில கடைப்பிடிகளையும் கொண்டுள்ளது.

வைணவன் எனப்படுபவன் ''எந்நாள் எம்பெருமான் உன்றனடிக் கடியோம் என்றெழுதப்பட்ட அந்நாலே அடியோங்கள் அடிக்குழல் வீடு பெற்று உயர்ந்த நாள்'' என்றும், ''ஒழிவில் காலமெல்லாம் உடனாய் மன்னி வழுவிலா அடிமை செய்ய வேண்டும் நான்'' என்றும் உண்மையிலேயே கருதிப் பகவானை என்றும் புகலிடமாகக்

கொண்டு, அவனிடம் தன்னை முழுமையாக ஒப்படைத்திருப்பவனைக் குறிக்கும். இத்தகைய வைணவன் ஒருவன் மேற்கொள்ள வேண்டிய கடைப்பிடிகளாகப் பின் வருவனவற்றைக் குறிப்பிடுகின்றனர்.

1. தாபம் : விட்டுணுவின் அடையாளங்களாகிய திருவளை நராலையும், திருவட்டத் திகிரியையும் (சங்கு, சக்கரம்) தோள்களில் முத்திரையிட்டுக் கொள்ளுதலைத் தாபம் என்கின்றனர். ஒவ்வொரு வைணவனும் இவ்வடையாளங்களைத் தன் தோள்களில் முத்திரை யிட்டுக் கொண்டால் தான் ஏனைய கடைப்பிடிகளை மேற்கொள்ள லாம்.

2. புண்டரம் : திருமண் காப்பையும், திருசூரணத்தையும் கொண்டு உடலில் பன்னிரு இடங்களில் நாமன் இட்டுக் கொள்ளு தலே புண்டரம் எனப்படும். ஒவ்வொரு நாமமும் பகவானின் ஒரு பெயரைக் குறிக்குமென்பர். நாமம் இட்டுக்கொள்ளும் இடங்களும், அவை குறிக்கும் பகவானின் திருப்பெயர்களும் முறையே நெற்றி-கேசவன், கொப்பூழ்-நாராயணன், மார்பு-மாதவன், கழுத்து-கோவிந் தன், வலது வயிறு-விட்டுணு, வலதுதோள்-மதுசூதனன், வலது கழுத்து-திரிவிக்கிரமன், இடது வயிறு-வாமனன், இடது தோள்-சிரீதரன், இடது கழுத்து-இருடிகேசன், கீழ்முதுகு-பத்மநாபன், பிடரி-தாமோதரன் என்பனவாகும்.

3. நாமம்-விட்டுணுவின் அடியவன் என்பதை வெளிப்படுத்திக் கொள்ள அவனது ஆயிரம் திருப்பெயர்களில் ஒன்றினையும், அடிமை என்பதனைக் குறிக்கும் தாசன் என்பதுடன் சேர்த்துத் தன்னைக் குறிப் பிடுதலே நாமம் ஆகும்.

4. மந்திரம்-வைணவம் எழுபத்தி நான்கு பேர்களைச் சிம்மாசி கள் என்று போற்றுகின்றது. இவர்கள் ஆசாரியப் பரம்பரையில் வந்த துறவிகள். இவர்களிடமோ இவர்களின் வழித் தோன்றல் களிடமோ ஒரு வைணவன் தீக்கையும் மந்திரமும் பெறுதல மந்திரம் என்பதாகும். வைணவத்தில் ஒரு ஆசாரியன் ஒருவனுக்கு மட்டுமே தீக்கையளிக்க வேண்டும் என்றுள்ளது வைணவத்தில் மந்திரம் என்று குறிப்பிடப்படுவது மூன்று இரகசியங்களான மூலமந்திரம், துவயம், சரமசுலோகம் எனப்படுபவையாகும். மூலமந்திரமாவது எட்டெழுத் துக்களைக் கொண்ட ''ஓம் நமோ நாராயணாய'' என்பதாகும். இதன் பொருள் பரம்பொருளாகிய நாராயணனை வணங்குகிறேன் என்ப

தாகும். ஆயிரம் நாமங்கள் கொண்டவனே எம்பெருமாள் எனினும் வைணவர்கள் ''நாராயணன் எனும் திருநாமமே இம்மை நலனும் மறுமை நலனும் தரவல்லது'' என்று கருதுகின்றனர். இத்திருப் பெயரின் சிறப்பினைத் திருமங்கையாழ்வார் பின்வருமாறு பாடு கின்றார்.

'' நலம்தரும் செல்வம் தரும் அடியார் படுதுயராயினவெல்லாம்
நிலம் தரம் செய்யும் நீள்விசும் பருளும் அருளொடு பெருநில மளிக்கும்
வலம் தரும் மற்றும் தந்திடும் பெற்றதாயினும் ஆயினசெய்யும்
நலம் தரும் சொல்லை நான கண்டு கொண்டேன் நாராயணா வென்னும் நாமம்''

உயிர்கள் பிறப்பிலேயே இறைவனுக்கு வாழ்க்கைப்பட்டு அவனால் அணியப்பட்ட மங்கலநாணாகிய திருமந்திரத் தொடர்பினை உடையன. அவை திருமந்திரத்தின் பொருளை உணர்ந்த மாத்திரத் தில் நாயகிகளாகத் தம்மை உணரும். இவ்வன்பு வாழ்க்கையின் களவுக்கூறு இம்மண்ணுலக வாழ்க்கையிலும் (லீலா விபூதியிலும்), கற்புக்கூறு விண்ணுலக வாழ்விலும் (நித்திய விபூபதியிலும்) நிகழு மெனக் கருதுவர் வைணவர்.

இத்திருமந்திரமாகிய திருவெட்டெழுத்தினை வேதமந்திரமாகக் கூறும் மரபும் வைணவரிடத்தில் காணப்படுகின்றது. திருவெட் டெழுத்தினை நால்வேதக் கடலமுது என்று குறிப்பிடுவதிலிருந்தும், இருக்கார் மொழி என்னும் சொற்களின் மூலம் வேதங்களின் அடிப் படையாகக் குறிப்பிடுவதிலிருந்தும் இதன் சிறப்பினை உணரலாம். நாராயணன் என்ற திருப்பெயருடன் வாசுதேவன் என்ற திருநாமத் தையும் வைணவர் சிறப்பாகக் குறிப்பிடுவர். பன்னிரு நாமங்களை யும் (புண்டரத்தில் குறிப்பிடப்பட்ட) விதந்தோதுதலும் உண்டு.

நாராயணனாகிய திருமந்திரப் பொருளின் எல்லை நிலங் களாகவே நூற்றெட்டுத் திருப்பதிகளைக் கருதுவர் வைணவர். அடியவர்கள் இவ்வுடலுடன் மகிழும்படிக்கு பாங்காக எம்பெருமான் தன்னுடைய தலைமையும், எளிமையும் விளங்க எழுந்தருளியுள்ள இடங்களே இத்திவ்வியதேசங்கள் என்பதால் அவை திருமந்திரஎல்லை நிலங்கள் எனப்படுகின்றன.

துவயமந்திரமெனப்படுவது மூலமந்திரத்தின் உட்கிடையாகும். அதன்பொருள் ''நாராயணனின் திருவடிகளில் நான் அடைக்கலம் புகுகின்றேன்; நாராயணனை வணங்குகின்றேன்'' என்பதாகும். இது சிரீஇலக்குமியின் வழியாகக் கிடைப்பதுவேவீடு பேறு ; உயிர் தனது முழுதளவான துணையற்ற நிலையினை உணர்ந்து நாராயணனைத் தவிர்த்து வேறெந்த தெய்வத்திடமும் புல்லை நாடாது அவனிடமே புலலைடைவதைக் குறிக்கும்

சரமசுலோகம் என்பது பகவத் கீதையில் கிருட்டிணன் அர்ச் சுனனுக்கு இறுதியாக வழங்கிய அறிவுரையாகும். இறைவனிடம் அடைக்கலம் புகும் முறையைக் கூறுவதாகும் இது. "எல்லா அறங் களையும் வாசனையற விடுத்து என்னையே சரணடைக; நான் உன்னைப் பாவங்கள் அனைத்தினின்றும் விடுவிப்பேன்; துயருறாதே முக்குணமயமாயும், தெய்வீகமாயுமுள்ள எனது இம்மாயை தாண்டற் கரியதாம். என்னையே சரணாகப் பெற்றவனே அதனைத் தாண்டு வான்''. இச்சரமசுலோகம் உயிரின் வீடு பேற்றிற்கு ஒரே வழி அடைக்கலன் புகுவதே என்பதை வெளிப்படையாகக் குறிப்பிடுவ துடன், ஏனைய நெறிகளான புறவழிபாடுகள், தூய்மையான செயல் கள், சமய இலக்கியங்களைக் கற்றல், சிந்தித்தல் போன்றவை அனைத்தும் சரணாகதி என்னும் இறுதியான செயலுக்குத் துணை நிற்பனவேயாகும் என்பதனைச் சுட்டுகின்றது.

5. இச்யை (யாகம்) என்பது பகவானை வழிபடும் முறை யினை ஆசாரியன் வாயிலாகக் கேட்டு அறிதல் ஆகும்.

இவ்வைந்து கடைப்பிடிகளைச் பஞ்ச சங்காரம் எனவும், பஞ்ச சமசரயணம் எனவும் குறிப்பிடுவர். இவற்றுடன் ஒரு வைணவன் நாள்தோறும் செய்யவேண்டிய செயல்களாகப் பின்வருவனவற்றை வைணவம் குறிப்பிடுகின்றது அவை : 1. அபிகமனம்-மனம், வாக்கு, மெய் ஆகியவை இறைவனிடம் நிலைபெற உடல் உள்ளத் தூய்மைகளைக் கடைப்பிடிப்பதுடன், இறைவனது கோயில்களுக்குச் சென்று வழிபடுதல், 2. உபாதானம் உடலைப் பேணுமளவும், வழிபடுதற்குரிய பொருள்களைச் சேகரிக்கும் முயற்சி மேற்கொள்ளுதல், 3. ஈசுவரத்தியானம்-இறைவனைத் தொழுதல், 4 சுவாத்தியாயம் வேதசாத்திரங்களைப் பத்தியுடன் ஆராய்தல், 5 யோகம்-இறை வனை எப்பொழுதும் சிந்தித்திருத்தல் என்பனவாகும்.

**வைணவ வழிபாட்டு முறை :**

தூய்மையான பண்பு நலன்களின் வடிவமாகத் திருக்கோயில் களில் எழுந்தருளியிருக்கும் தெய்வத்திருமேனிகளைத் திருமாலாகக கண்டு வழிபடுதலை வைணவர்கள் திருவாராதனம் என்பர். இறைவனை நமக்களித்த பொறிபுலன்களைக் கொண்டு அவனோடு தொடர்பு கொள்ளுதலை ஆராதனம் எனலாம் கண்கள் அவன் பேரழகில் ஈடுபட, காதுகள் அவன் புகழைக் கேட்க, வாய் அவன் புகழ்பாட, கைகள் அவனுக்குத் திருத்தொண்டு செய்ய, மனம், உயிர் அவனிடம் ஒடுங்குவதையே வழிபாடு எனகின்றனர்

வைணவத்தில் வழிபாடு அனைவருக்கும் பொதுவானது. இவ் வழிபாடு இல்லங்களில் நிகழ்த்தப் பெறுமாயின் அதனை ''சுவார்த்த வழிபாடென்றும், திருக்கோயில்களில் உலக நலன் கருதிச் செய்யப் படின் அதனைப் பரார்த்த வழிபாடென்றும் வழங்குவர் வழிபாட்டின் பொழுது வழிபாட்டுருவத்தின் வழிப் பரம்பொருளோடு தொடர்பு கொள்கிறோம். வழிபாட்டுருவம் இறைவன் தனதருளால் தூயவடி வங்களில் தனது முழுமைத் தன்மையை இழக்காமல் எழுந்தருளி யிருக்கின்ற நிலையாகும். அடியவர்கள் இட்ட தெய்வமாக எவ்வடிவில் வழிபட்டாலும் திருமால் அருள் செய்வான் என்பதனைப் பொய்கை யாழ்வாரின்' தமருவந்தது எவ்வுருவம் அவ்வுருவம் தானே தமரு கந்தது' என்னும் பாடலின் மூலம் அறியலாம். இவ்வாறு இட்ட தெய்வங்கள் பலவாகக் கூறப்படினும் இல்லங்களில் சாளக் கிராமத் தையும் (நேபாளத்தில் தோன்றிக் காசிக்கருகே கங்கையிற் கலக்கும் கண்டகி ஆற்றின் வழிவரும் கல்லை எடுத்து அதனைத் திருமால் வடிவமாகக் கொண்டு வழிபடுதல்) திருகோவில்களில் நின்ற திருக் கோலத்தையும் (திருவேங்கடம்), இருந்த திருக்கோலத்தையும் (திரு உப்பிலியப்பன் கோவில்), கிடந்த திருக்கோலத்தையும் (திருவரங்கம்) நடந்த திருக்கோலத்தையும் (திருக்கோவல் திரிவிக்கிரமன் கோயில்) வைணவர்கள் சிறப்பாக வழிபடுகின்றனர்.

திருவாராதனமாகிய வழிபாடு காலையில் தூய்மைப் பணிகளை முடித்தபின் திருத்துழாய் சேகரிப்பதில் தொடங்குகின்றது நான்கு இலைகளும் நடுவில் தளிருமுள்ள துளசியினையே திருத்துழாய் என் பர். திருத்துழாய் சேகரித்தலைத் திருத்துழாய் எழுந்தருளச் செய்தல் என்பர். திருத்துழாய் திருவாராதனத்துக்குச் சிறந்த வழியாகும். ஏனெனில் ''திருமாலிடம் தன்னை இழந்த உயிரின் அன்பாகிய

நோய்க்குத் திருத்துழாயே மருந்தாகும்" என்பது இதன் பொருளாகும். இதற்குப் பின் திருக்கோயிலாகிய கோயிலாழ்வாரின் திருக்காப்பாகிய கோயிற்கதவைத் திறப்பதற்குமுன் அவனைச் சேவிப்பர். இறைவனை வணங்குதலை வைணவர் "சேவித்தல்" என்றும், பெரியோரை வணங்குதலைத் "தண்டம் சமர்ப்பித்தல்" என்றும் கூறுவர். வணங்குவது என்பது வைணவர்களைப் பொறுத்தமட்டில் எட்டு உறுப்புக்கள்-குவிக்கப்பட்ட கைகள், புசங்கள், முழந்தாழ்கள், பாதங்கள் நெற்றி—தரையில் பதியுமாறு வீழ்ந்து வணங்குவதையே குறிப்பிடும். இதனை அட்டாங்க வணக்கம் என்பர். பெண்கள் பஞ்சாங்க வணக்கம் செய்வர்.

துவாரபாலர்களிடம் அனுமதி பெற்று திருக்காப்பு நீக்கிக் கைகளை மூன்று முறை தட்டிப் பெருமாளை எழுந்தருளச் செய்து, வேதப் பிரபந்த அருளிச் செயல்களைக் கூறி, பஞ்சாங்க வணக்கம், மூலமந்திரச் சிந்தனை, மூச்சுப் பயிற்சி ஆகியவற்றைச் செய்து பின்னர் பூதசுத்தி செய்வர் பூதங்களாகிய பருப்பொருள்களைத் தூய்மை செய்தல் என்பது இதன் பொருள். பஞ்யபூதங்கள், தன் மாத்திரைகள், மனம்புலப்பொறிகள், அகங்காரம், புத்தி ஆகிய ஐந்தினைத் தூய்மை செய்து உயிர் இறைவனை வழிபடத் தகுதி உடையதாக்குதலாகிய இதனைப் 'பஞ்சசுத்தி' அல்லது "ஐவகைத் தூய்மை" எனவும் குறிப்பிடுவர். இறைவன் உறைவதற்குரிய தகுதியை உடல் பெறுவதால் "நியாசம்" என்றும் இதனைக் கூறுவர். இவ்வாறு இறைவனை மனத்திலிருத்தி வழிபாடு செய்தலால் "மானசீக ஆராதனம்" என்றும் இதனைச் சொல்லலாம்

திருவாராதன நிகழ்ச்சிகளை வைணவம் ஆறு பிரிவுகளாக விளக்குன்றது 1 மந்திராசாணம்-வழிபாட்டினை ஏற்பதற்கு இறைவனை எழுந்தருளச் செய்ய இருக்கையளித்தல் என்பது இதன் பொருள் இறைவளை வழிபாட்டினை ஏற்க அழைப்பதாகும். 2. ஸ்நானாசனம் – திருமஞ்சனமாகிய அபிடேகம் செய்வதற்கு இருக்கையளித்தல் 3. அலங்காராசனம் – இறைவனை அலங்கரிப்பதற்கு இருக்கை அளித்தல் என்பது அலங்காரம் செய்ததற்குரிய பலர்மாலைகள், வாசனைப் பொருட்கள் அளித்தலையும் குறிக்கும். 4 போசனாசனம் - இறைவன் திருவமுது ஏற்க இருக்கை அளித்தல் வைணவ மரபிற்கேற்றவாறு உணவுப் பண்டங்களான அக்கார அடிசில், தயிரமுது போன்ற அனைத்தையும் இறைவனுக்கு அளித்தல் என்பது இதன் பொருள். 5. புனர் மந்திராசனம் - மீண்டும் இறைவனை

வழிபாட்டினை ஏற்க எழுந்தருளச் செய்ய இருக்கை அளித்தல் என்று பொருள் பழம் அடைக்காய் சுருளமுது செய்வித்தல் என்பர். 6 பரியங்காசனம் – இறைவன் பள்ளி கொள்ளக் கட்டில் அளித்தல், கோயில் திருக்காப்பிடுதல் முதலியவற்றைக் குறிப்பிடும்.

திருவாராதனத்தில் பின்வரும் பதினாறு வகை கிரியைககள் இடம் பெறுகின்றன

1. ஆவாகனம் — திருவாராதனைக்கு அளிக்கப்பட்டுள்ள இருக்கையில் வைக்கப்பட்டுள்ள திருமேனியில எழுந்தருளுமாறு இறைவனை வேண்டுதல்

2. ஸ்தாபனம் — திருவாரதனைக்கு எழுந்தருளுவிக்கப்பட்ட இறைவனை அவ்விடத்திலேயே நிலைபெறு மாறு வேண்டுதல்.

3. சன்னிதானம் — அத்திருமேனியில் இறைவன் எழுந்தருளி நிலை பெற்றதாகக் கருதுதல.

4. சன்னிரோதனம் — இறைவனை அத்திருமேனியில் கட்டுப்படுத் துதல்.

5. தேனுமுத்திரை — பசுவின் மடியைப் போன்று கைகளை முத் திரையிடுவது. தெய்வத்தேன் இத்திருமேனி யில் பொருந்துவதாகக் கருதி, திருவாரா தனைத் திருமேனி தெய்வப் பொருளான தைக் குறிக்கும்.

இவ்வைந்து கிரியைகளும் திருவாராதனைக்கு எழுந்தருள இறைவனை வேண்டுதலில் செய்யப்படுவனவாகும். இதனால் அனைத்திலும் பரவியும் கடந்தும் உள்ள இறைவனை ஒரு திருமேனியில் எழுந்தருளச் செய்தலால் அவனை எல்லைக்குட்படுத்துவதாகாது. இறைவன் பத்தனின் வேண்டுதலுக்கிணங்கி அவ்வாறு தோன்றுகின்றான். என்பதே இதன் பொருளாகும்.

6. பாத்யம் — இறைவன் திருவடிகளைப் தூய்மை செய்தல் பொருட்டு தீர்த்தம் அளித்தலாகும்.

7. ஆசமனீயம் — வலது உள்ளங்கையினால் மூன்றுமுறை உதடுகளால் தீர்த்தம் அருந்துதல் இதனை இறைவன் திருமுகத்திற்கு நேராகச் செய்தல் வேண்டும். இறைவனின் வடிவையும், உதடு களையும் சுத்தம் செய்தலை இது குறிக்கும்.

8 அர்க்கியம் — இறைவனுக்குத் தீர்த்தம் அளித்தலைக் குறித் தாலும் திருவாராதனையின் பொழுது தீர்த் தம் எந்த நிலையில் அளிக்கப்படுகின்றதோ அதற்கேற்றவாறு பொருள கொள்ளட்படும். சான்றாக இறைவனை வரவேற்க அளிக்கப் படும் தீர்த்தம் சுவாகத அர்க்கியம் எனப் பெயர் பெறும்.

9. ஸ்நபனம் — இறைவனைத் திருமஞ்சனம் செய்விக்க அளிக்கப்படும் தீர்த்தமாகும்.

10 பானீயம் — இறைவனுக்குத் திருவமுது சென்ய்வித்தலி பின்பு அருந்துவதற்குநீரைக்கொடுத்தலாகும்

இவ்வைந்து வகையான தீர்த்தங்களுக்கும் வைணவத்திருக் கோயில்களில் தனித்தனிப் பாத்திரங்கள் பஞ்சபாத்திரங்கள் என்ற பெயரிலும், இவற்றிற்காக வேண்டிய நீரை வைத்திருக்கும் பெரிய பாத்திரம் சுத்தோதனம் என்ற பெயரிலும் வைக்கப்பட்டிருக்கும்.

11. புட்பதானம் என்பது இறைவனது திருவடிகளில் மலர் களை அளித்தல் என்பதாகும். இதனை அருச்சனை என்றும் கூறுவர்.

12 தூபம் என்பது இறைவனுக்கு நல்ல மணம் பொருந்திய பொருள்களைக் கொண்டு நறும்புகை வளர்த்து அதனை அளித்தலைக் குறிக்கும் :

13. தீபம் என்பது கற்பூர வழிபாட்டினைச் செய்தலாகும்.

14. நைவேத்தியம் என்பது இறைவனுக்குத் திருவமுது படைத் தலாகும்.

15. அவகண்டனம் என்பது இறைவன் திருமுன் மணியினால் ஆராதனையின் பொழுது ஓசை எழுப்புதலைக் குறிக்கும்.

16. சபசமர்ப்பணம் என்பதன் பொருள இறைவன் திருமுன் அவனது திருப்பெயர்களைச் சிந்தித்தல் எனப்படும்.

இப்பதினாறு கிரியைகளும் அவற்றிற்குரிய மந்திரங்களைச் சொல்லுதலுடனும், உடலுறுப்புக்களினால் உரிய முத்திரைகளைக் காண்பித்தலுடனும், சிந்தனையை அக்கிரியையின் பால் செலுத்தித் திருவாராதனை நிகழ்த்தப்பட வேண்டும். இவை தவிர்த்து இறைவனை அலங்கரித்தலும். அதன்பின் இறைவன் திருமுன் கண்ணாடி, அவனது திருச்சின்னங்களைச் சார்த்துதலும், வெண்சாமரம் வீசுதலும், திருவமுது இட்டபின் தாம்பூலம் அளித்தலும் போன்றவைகளும் ஆராதனையில் இடம் பெறும். அவை இறைவனை உபசரித்தல் என்று குறிப்பிடுவர்

திருவாராதனையில் மந்திரங்களை உச்சரித்தல் ஒவ்வொரு நிலையிலும் உண்டு மந்திரத்தின் ஒவ்வொரு எழுத்தும் 1) விட்டுணுவின் திருப்பெயர்களால் வெளிப்படுத்தப்படும் பரு, நுண்ணிய, உயர்ந்த வைணவ வடிவங்களையும், 2 பல்வேறு இருத்திரர்களில் ஏதாவதொன்றின் பெயர் கொண்ட ஒரு இருத்திர வடிவத்தையும், 3. விட்டுணுவின் ஆற்றலான திருமகளின் ஆபரணம், உறுப்பூக்கள், பக்க உறுப்புக்கள் ஏதாவதொன்றின் பெயர் கொண்ட ஒரு சக்தி வடிவத்தையும் உடையது என்கின்றது அகிர்புதினிய சம்கிதை. எடுத்துக்காட்டாக 'க' என்னும் எழுத்து வைணவத்தில் கமலம், கராளம், உயர்ந்த இயற்கை என்ற மூன்று வைணவ இறைவடிவங்களையும், கரோதீசன் எனப்படும் இருத்திர வடிவத்தினையும், இறைவியின் வலதுகைப் பெருவிரலையும் குறிக்கும் என்பதைச் சொல்லாம். இதன் நோக்கம் மந்திரங்களின் மறைபொருளைக் காப்பதும் அதனைக் கருதிப் பார்ப்பதில் துணை புரிவதுமாகும். மந்திரங்களைப் போன்றே எந்திரங்களும் வழிபாட்டில் இடம் பெறுவனவாகும. "சுதர்சன சக்கரம்" வைணவத்தின் சிறந்த எந்திரமாகக் கருதப்படுகின்றது

திருவாராதனை ஆண் பெண் இருபாலார்க்கும் பொதுவெனினும், இறைவனைத் தொட்டு ஆராதனை செய்வதற்குத் தீக்கை பெற்றிருத்தல் இன்றியமையாததாகும். அனைவரும் சுவார்த்த வழிபாட்டில் ஈடுபடலாமெனினும் பரார்த்த வழிபாடு செய்வதற்குச் சுக்கில எசுர்வேதத்தைச் சார்ந்தவராயும், தீக்கை பெற்றவராயும் உள்ள அந்தணரே தகுதியுடைவர் என வைணவம் கருதுகின்றது

வைணவம் வழிபாட்டில் எளிமையையும், தூய அன்பினையும் வலியுறுத்துகின்றது. இதனைக் கீதாநாயகன் கூற்றாகச் சொல்வதெனில் "என்னைப் பத்தியோடு வழிபடுபவர்கள், என்னில்

கலந்து போவார்கள்; நானும் அவர்களில் கலந்து போவேன். எனக்கு வேண்டுவது ஓர் இலை; பூ; பழம் என்பனவே'' என்பதைக் குறிப்பிடலாம். இருப்பினும் ஆகம விதிகளின்படி திருக்கோயில்களில் வழிபாடு நடத்தப்படுகின்றது. வைணவர்களின் சிறந்த திருக்கோவிலான திருவரங்கத்தில் பாஞ்சராத்திர ஆகம அடிப்படையிலும், திருவெள்ளியன்குடி போன்ற திருப்பதிகளில் வைகானச ஆகம அடிப்படையிலும் வழிபாடுகள் நடைபெறுகின்றன. திருவேங்கடமலைப் பெருமாளுக்கு வைகானச அடிப்படையிலும், திருச்சானூர் தேவிக்குப் பாஞ்சராத்திர அடிப்படையிலும் வழிபாடுகள் நடத்தப்படுகின்றன.

வைகானசம் ''விகனசு'' என்ற பெரியாரால் நிறுவப்பட்டதாகும் மரீசி, பிருகு. அத்திரி, காசியபர் போன்றவர்கள் இதனை விளக்கியவர்கள் என்பர். பாஞ்சராத்திரம் பகவானால் அருளப்பட்டது. வைகானசத்தை 'மாந்திரிகம்' என்றும், பாஞ்சராத்திரத்தைத் தாந்திரிகம் என்றும் கூறுவர். வைகானசம் கிருசய கல்ப சூத்திரங்களிலுள்ள கடைப்பிடிகளை வற்புறுத்தி, உபநயனம் செய்து கொள்ளும் இரு பிறப்பாளரே இவ் வழிபாட்டினைச் செய்வதற்கு உரியவர் என்று கூறும். பாஞ்சராத்திரம் ஐந்து கடைப்பிடிகளை வற்புறுத்தி இவ்வழிபாட்டினை அனைவருக்கும் உரித்தாக்குவதாகும். மேலும் வைகானசத்தைச் சூரியனுடன் தொடர்புபடுத்திச்' சௌரம்' எனவும். பாஞ்சராத்திரத்தை அக்கினியுடன் தொடர்பு படுத்தி 'ஆக்னேயம்' எனவும் வழங்குவர் எனினும் வைகானசரும் பஞ்சாக்கினி கல்ப வழிபாட்டினராகவே விளங்குகின்றனர்.

இவ்விருவகையான வழிபாடுகளும் மலைநாட்டுத் திருப்பதிகளில் பின்பற்றப்படுவதாகத் தெரியவில்லை. (சான்று-திருவித்துவக்கோடு) இங்கு சந்தனமும் துளசியும் வழங்கப்படுகின்றனவேயன்றி, தீர்த்தம் வழங்கப்படுவதில்லை. சடாரி தலைவைத்தலும் இல்லை. வழிபாட்டை நிகழ்த்துவோரும் போற்றிமார்களேயன்றி மறையோரல்லர் இவ்வகைக் கோவில்களைத் திருமால் கோயில்கள் என வழங்கலாமேயன்றி வைணவக் கோயில்களென்று கூறுதல் இயலாது.

வைணவத் திருக்கோயில்களில் இறைவனின் மூவகைக் கோலங்களில் ஏதேனும் ஒன்று முதன்மைத் திருக் கோலமாகக் கருவறையில் தேவியுடனேயே நிறுவப்பட்டிருக்கும் சில கோவில்களில் ஒரே கருவறையிலும், சிலவற்றில் வெவ்வேறு சன்னதிகளிலும், அருகருகே தனிக் கோயில்களில் நிறுவப்பட்டிருப்பினும் வைணவ வழிபாட்டு

மரபு பெருமாளையும் தேவியையும் இணைந்த நிலையிலேயே வழி படக் கூறுவதாகும். வைணவக கோவில்களில் சுற்றுத் தெய்வங் களாக விசுவக்சேனர், கருடன், சிரீபூதன், நியக்சர், பலிபீடம் என் னும் பஞ்ச பரிவாரங்கள் அமைந்திருப்பது இன்றியமையாதது என வைணவம் கருதுகின்றது. இவற்றிற்கு மேல் இந்திரன், உலகபாலர் சூரியன், திருவளைநரால், திருவட்டத்திகிரி போன்றவற்றின் திருக் கோலங்களும், சிலவற்றில் சிவன், துர்க்கை, நவக்கிரகங்கள் போன்ற வையும், வைணவ முனிவர்கள், ஆழ்வார்கள், ஆசாரியர்கள் போன் றோரின் திருக்கோலங்களையும் பிரதிட்டை செய்யப்பட்டிருப்பதைக் காணலாம்.

வைணவம் திருக்கோயில்களை ஆழ்வார்களால் மங்களாசாசனம் செய்யப்பட்டவை என்றும் ஆசாரியர்களால் புனிதமாக்கப்பட்ட (53) கோவில்களை அபிமான தலங்கள் என்றும் பாகுபடுத்துகின்றது பிள்ளைப் பெருமாள் பாடிய 'திருப்பதி அந்தாதி' ஆழ்வார்களால் பாடப்பெற்ற 108 திருப்பதிகளைக் குறிப்பிடுகின்றது. இவற்றைச் சோழ நாட்டுத் திருப்பதிகள் 40, பாண்டி நாட்டுத் திருப்பதிகள் 18, மலைநாட்டுத் திருப்பதிகள் 13, நடு நாட்டுத் திருப்பதிகள் 12, திரு நாட்டுத் திருப்பதி 1 எனப்பிரிப்பர். இவற்றுள் தொண்ணூற்றெட் டுத் திருப்பதிகள் தென்னிந்தியாவைச் சேர்ந்தவையாகும்.

இவற்றுள் (எட்டினை) முத்தி தரும் திருப்பதிகளாகத் திருவ ரங்கம், திருவேங்கடம், சிரீமுட்ணம், வானமாமலை, சாளக்கிராமம், புட்கரம், பத்திரிகாசிரமம், நேமிசாரணியம் ஆகிய எட்டுத் திருப்பதி களைச் சிறப்பித்துக் கூறுவர் வைணவர். ஏனெனில் திருவெட்டெழுத் தின் ஒவ்வொரு எழுத்தும் இப்பகுதிகளிலுள்ள ஒவ்வொரு வடிவத்தை உணர்த்துகின்றன. திருக்கண்ணபுரத்துப் பெருமாள் எட்டெழுத்தின் முடிவானவன் என்பர். எனவே முத்தி தருவதில் 'முதன்மையானது திருக்கண்ணபுரம் எனச்சிலர் கருதினாலும், கோயில் என்றாலே திரு வரங்கத்தையே குறிக்குமென்பர் வைணவர். இதுவே பெரிய கோவில், மண்ணுலக வைகுந்தம். ஏழு பிரகாரங்களுடன் 'உத்தமோத்தமமான கோவில்' எனச்சிறப்புப் பெறுவது

திருக்கோயில் வழிபாடு இறுதியில் தீர்த்தம், திருத்துழாய் வழங்குதலுடனும், சடாரி தலைத்து ஆசி வழங்குதலுடனும் நிறை பெறும். சடாரி இறைவனின் பாதணியாகும் இதனைச் சடகோபர் எனவும் கொள்வர். சடாரி தலைவைத்தல் என்பது எம்பெருமானின்

திருவடிகளில் நம் தலையைச் சார்த்துதலைக் குறிப்பதாகும். சடத்துக்கு, அதாவது அறிவின்மைக்குப் பகையாக சதகோபராகிய நம்மாழ்வார் விளங்கியதாலேயே 'சடாரி என்று வழங்கப்படுகின்றது.

வைணவர்கள் நாட்களில் சனிக்கிழமையினையும், நட்சத்திரங்களில் திருவோணம், உரோகினி ஆகியவற்றையும், திதிகளில், ஏகாதசி துவாதசி, அட்டமி, நவமிகளையும் விரத, உண்ணாநோன்பு நாட்களாகக் கொள்கின்றனர். ஏகாதசி திதி மாதமிருமுறைவரினும் வைணவ ஏகாதசி அன்றே உண்ணாநோன்யிருப்பர். மார்கழித்திங்கள் வளர்பிறை ஏகாதசியை வைகுண்ட ஏகாதசியாக வைணவர்கள் கொண்டாடுகின்றனர். அன்று துறக்கவாயில் திறக்கும் நாள் எனக் கருதுவதால் அந்நாள் வைகுண்ட ஏகாதசியெனப் பெயர் பெற்றது.

அதே போன்று ஆவணித்திங்கள் தேய்பிறையில் வரும் அட்டமி திதியன்று கண்ணன் பிறந்து கோகுலத்துக்குச் சென்றதால் கோகுலாட்டமி என்றும், இத்துடன் உரோகினி நட்சத்திரம் இணைந்து வரின் அதனை சிரீசெயந்தி என்றும் கொண்டாடுவர். சித்திரை மாதம் வளர்பிறையில் புனர்வசு நட்சத்திரத்துடன் கூடிய நவமியன்று இராமன் பிறந்தான் என்பதால் அந்நாளை முனித்திரய சிரீஇராம நவமி என்று கொண்டாடுவர் வைணதர். இவை தவிர பகவான் அயக்கிரீவன் அவதரித்த ஆவணித்திருவோண நாளையும், சித்திரை அல்லது வைகாசியில் வரும் நரசிங்கப்பெருமாள் தோன்றிய நாளையும் வைணவர்கள் கொண்டாடுவர்.

பொதுவில் இந்துக்கள் கொண்டாடும் சிறப்பான உண்ணா நோன்புகளையும், சிறப்பான விழாக்களையும், புனிதத்தீர்த்தமாடல், புனிதத்தல யாத்திரைகளையும் வைணவர்களின் கடைபிடிகளே எனலாம்

# வைணவ மெய்ப்பொருளியல்

## 9. வைணவ மரபின் மெய்ப்பொருளியல் அல்லது விசிட்டாத்வைதம்

வைணவ மரபின் மெய்ப்பொருளியல் விசிட்டாத்வைதம் என வழங்கப்படுகிறது. இம்மரபின் மெய்ப்பொருளியலை முதன் முதலில் சிறப்பாக எடுத்துரைத்தவர் இராமானுசர் ஆவார். வைணவ மெய்ப் பொருளியலை இராமானுசர் தொகுத்தது பற்றிய வரலாறு பின்வரு மாறு கூறப்படுகிறது. வேதங்களின் இறுதிப் (அந்தம்) பகுதியாகிய உபநிடதங்களுக்கு பாதராயனர் பிரம்மசூத்திரம் என்ற உரையை எழுதினார். அவ்வுரைக்குத் தெளிவான ஒரு உரை எழுதப்படவேண்டும் என எமுனாச்சாரியார் எனும் ஆளவந்தார் விரும்பினார். அவரது விருப்பத்தை நிறைவேற்றும் வகையில் இராமானுசர் விசிட்டாத்வை தத்தை எழுதினார்.

உபநிடதங்கள் நூற்றியெட்டு உள்ளன. அவற்றுள் பதினாறு உபநிடதங்கள் இன்றியமையாதவை எனக்கருதப்படுகின்றன. இப் பதினாறு உபநிடதங்களிலும் அடங்கியுள்ள செய்திகள் ''மகாவாக் கியங்கள்'' எனப்போற்றப்படும் சில வாக்கியங்களிலேயே அமைந் துள்ளன. அவ்வாக்கியங்கள் பரம்பொருளாகிய ''பிரம்மனும் ஆன் மாவும்'' ஒன்றே எனக்கூறும் அபேத சுருதிகளும், பிரம்மன் வேறு ஆன்மா வேறு என உரைக்கும் பேத சுருதிகளும், பிரம்மனுக்கும் ஆன் மாவுக்குமிடையே ஒற்றுமையும் வேற்றுமையும் உண்டு எனக்கூறும், கடகசுருதிகளுமாக அமைந்துள்ளன. அபேத சுருதிகளின் அடிப் படையில் சங்கரர் பிரம்மசூத்திரத்திற்கு எழுதிய உரை 'சங்கரபாடியம்' என்றும் அவரது மெய்ப்பொருளியல் அத்வைதம் எனவும் வழங்கப் படுகின்றன. பேத சுருதிகளின் அடிப்படையில் மத்துவர் பிரம்மசூத் திரத்திற்கு எழுதிய உரை மத்துவபாடியம் எனவும் அவரது மெய்ப் பொருளியல் துவைதம் எனவும் அழைக்கப்படுகின்றன. கடக சுருதி

களின் அடிப்படையில் இராமானுசர் பிரம்மசூத்திரத்திற்கு எழுதிய உரை சிரிபாடியம் என்றும் அவரது மெய்ப்பொருளியல் விசிட்டாத்வைதம் என்றும் வழங்கப்படுகின்றன.

இராமானுசர் தனது விசிட்டாத்வைத மெய்ப்பொருளியலில் பரம்பொருளாகிய நாராயணனுக்கு இலக்குமியின் துணை இன்றியமையாதது எனக்கூறுகின்றார். இவரது உரை சிறந்ததெனக் குறிப்பிடும் ''சிரீ'' என்னும் சிறப்புச் சொல்லை இணைத்துச் சிரீபாடியம் என்று வழங்குவர்.

4. விசிட்டாத்வைதம் என்ற சொல் விசிட்டம், அ, துவைதம் என்னும் மூன்று பகுதிகள் கொண்டது. விசிட்டம் என்பது முழுமை எனப் பொருள்படும். விசிட்டாத்வைதத்தில் பேசப்படுகின்ற உட்பொருள்களான பிரம்மன், சித்து, அசித்து ஆகியவற்றில் உணர்வுப் பொருளாகிய ஆன்மாவும், உணர்வற்றதாகிய அசித்தும் பரம்பொருளாகிய பிரம்மனின் பண்புகளாகக் கருதப்படுகின்றன. சித்து, அசித்து ஆகிய பண்புகள் விசேடணங்கள் என்றும், இப்பண்புகளை உடைய பிரம்மன் ''விசேடியம்'' என்றும் கூறப்படும். பொருளிலிருந்து அதன் பண்புகள் எவ்வாறு பிரிக்கவொண்ணாது இணைந்திருக்கின்றனவோ அவ்வாறே பிரம்மனாகிய விசேடியமும், சித்து, அசித்து ஆகிய விசேடணங்களும் பிரிக்கவொண்ணாதபடி இணைந்து ஒரு முழுமையாக (விசிட்டமாக) இருக்கின்றன. முழுமையான இப்பொருள் அ+துவைதம் என்பவற்றின் பொருளான இரண்டல்லாத முழுமையே விசிட்டாத்வைதம் ஆகும்.

## 10. அறிவாய்வியல் கோட்பாடுகள் ) Epistemology)

மெய்ப்பொருளியல்கள் பொதுவாக அறிவாய்வியல், புலன் கடந்த பொருளியல் எனும் உள்பொருளியல் (Metaphysics) அறவியல் எனும் சாதனையியல் (Ethics) என்னும் மூன்று பிரிவுகளாகப் பேசப்படும். இவற்றுள் அறிவாய்வியல் அறிதலென்ற செயலையும் அதன் விளைவுகளையும், அவற்றுடன் தொடர்பு கொண்டுள்ளவை பற்றியும் ஆராய்கின்றது. உள்பொருளியல் பரம்பொருளையும், ஆன்மாவையும். இயலுலகின் அடிப்படைப் பொருளையும், அதிலிருந்து இயலுலகம் படிப்படியே வெளிப்படுதல் பற்றியும் ஆராய்வதாகும். அறவியல் ஆன்மாவின் தளைக்கு அல்லது கட்டுக்கான காரணத்தையும், அதிலிருந்து ஆன்மா விடுதலை அடைக்கூடிய வழிகளையும், வீடு பேறடைந்த நிலையினையும் ஆராய்கின்றது.

அறிவாய்வியல் அறிவுச் செயலையும், அதன் விளைவாகிய அறிவையும், அ ற்றுடன் தொடர்புள்ளவை பற்றியும் கருதுவதில் அறிவுசார்ந்த செயல்களனைத்தும் பின்வரும் நான்கினைச் சுட்டி நிற்பதை அறியலாம். அவை (1) அறிவான் (Knower) (2) அறியப்படும் பொருள் (Object of knowledge) (3) அறியும் வழிகள் (Means of knowledge) (4) அறிவு (knowledge) என்பனவாகும். இவைகளை முறையே பிரமாதா, பிரமேயம், பிரமாணம், பிரமிதி எனக் குறிப்பிடுவர். இந் நான்கினுள் அறிவானையும், அறியப்படும் பொருள்களையும், உள்பொருளியல் கருதுவதால், அறிவாய்வியலில் இவற்றை ஆராய்வதில்லை. ஆனால் அறிவுச் செயலால் விளைந்த அறிவின் ஏற்புடைத் தன்மையையும், ஏற்பின்மையையும் உண்மை மற்றும் பிழை பற்றிய கோட்பாடுகளாகக் (Theories of truth and error) கருதுகிறோம்.

பொதுவாக வேதாந்திகள் உள்பொருளியல் அறிவு (தத்துவ ஞானம), மனிதன் அடைய தேண்டிய உறுதிப் பொருள்கள் பற்றிய அறிவு (புருசார்த்தம்) மற்றும் அவைகளை அடையும் வழிகளைப் பற்றிய அறிவு (இதஞானம்) ஆகியவற்றையே சிறந்த அறிவாகக் கொள்வர். விசிட்டாத்வைதம் அறிவைப் பற்றி ஒரு புதுவகையான விளக்கத்தை அளிக்கின்றது. ஆன்மா உணர்வு (Consciousness) அல்லது அறிவு வடிவானது என்பர். இந்நிலையில் அறிவு ஒரு பொருளாகக் கருதப்படுகின்றது அதே சமயம் உணர்வு அல்லது அறிவு ஆன்மாவின் ஒரு பண்பாகவும் இருக்கின்றது. இவ்வாறு உணர்வு பொருளாகவும், அதன் பண்பாகவும் இருக்கின்ற நிலையில், பொருளானது ஆன்மாவையும், பண்பானது அதன் அறிவையும் குறிப்பிடுகின்றது. (Consciousners as substance is the – "SELF"; Consciouers as its quality is knowledge.) பண்பாகிய அறிவைத் தர்மபூதஞானம் (DHARMA BHUTAJNANA) என விசிட்டாவைதம் வழங்குகிறது தர்மம் என்பது பண்பாகும்; பூதம் என்பது வடிவாகும்; ஞானம் என்பது அறிவாகும். எனவே பண்பு வடிவான அறிவே "தர்மபூதஞானமாகும்".

தர்மபூதஞானம் அல்லது பண்பாகிய அறிவு, அப்பண்பினையுடைய பொருளாகிய ஆன்மாவைச் சுட்டி நிற்பதால் ஆன்மாவும் அதன் அறிவும் தனித்தனியானவையென்றாலும் பிரிக்கவொண்ணாதபடி இணைந்து நிற்பவை. எவ்வாறெனில் அறிவு ஆன்மாவின் ஒரு உடைமையாகும். இரண்டுமே உணர்வுகளினினும் வெவ்வேறா

னவை. இது ஒளி என்பது எரிகின்ற பிழம்பையும் அது பரப்புகின்ற வெளிச்சத்தையும் குறிப்பிடுவதைப் போன்றது. ஆன்மா தன்னை உணரும்; அறிவு தன்னை உணராது; அறிவு அறியப்படும் பொருளாகவும் எவ்விடத்தும் பரவியிரும்பதாலும் அது நிலையானது. இறைவன், இறைவி, நித்தியசூரிகள், முத்தி சூரிகள் ஆகியோரிடத்தில் அறிவு தூய்மையான நிலையிலும், தளையுண்ட ஆன்மாக்களிடம் அறிவின்மை (அவித்தை) சூழ்ந்திருப்பதால் அறிவு குறைவுடையதாகவும், இல்லாததைப் போன்றும் இருக்கின்றது. அறிவு ஏற்படுகின்றது மற்றும் அழிகின்றது என்று குறிப்பிடப்படுவது அவித்தையினாலும், வினையினாலும் அறிவு விரிந்து சுருங்குவதைக் குறிக்கும்.

தர்மபூதஞானம், மணிப்பிரபை போன்று தனது ஒளியைப் பொருள்களின் மீது செலுத்தி அவற்றை வெளிப்படுத்துகின்றது. அறியப்படும் பொருள்களை விசிட்டாத்வைதம் மூவகையாகப் பிரிக்கின்றது. அவை உணர்வுள்ளவை (சேதனம்) உணர்வற்றவை (அசேதனம் அல்லது சடம்) மற்றும் இவ்விரண்டிற்கும் இடைப்பட்டதாகிய அசடம். அறிவு, உணர்வுக்கும் உணர்வற்றதற்கும் இடைப்பட்டதானதால் 'அசடமாகும்'. சடப் பொருள்களைப் போன்றதல்லாது அறிவு, தன்னை வெளிப்படுத்துவதால் சுய ஒளி கொண்டது (சுயப்பிரகாசம்); பொருள்களை வெளிப்படுத்துவதால் புறவொளி கொண்டது (பரப்பிரகாசம்). அறிவிற்கு இத்தன்மைகளினால் மதி, பிரக்ஞை, சம்வித் போன்ற பெயர்களும் வழங்கப்படுகின்றன.

அறிவு தன்னிடத்திலே தொடங்குவதால் தன்னேற்புடைமை கொண்டது. ஏனெனில் அனைத்துப் பொருள்களையும் அறிவால் அறிகின்றோம். எனவே அறிவின்றி இருத்தல் இயலாது அது தன்னையும் பிறவற்றையும் விளக்குவது. அறிவின்றி நாம் எந்தப் பொருளையும் மதிப்பிடமுடியாது. நமது மனநிலைகளையும் புரிந்து கொள்ள முடியாது

அறிவின் வேலையானது இயலுலகின் பொருள்களை விளக்கம் பெறச் செய்வதாகும். பொருள்களையும் அறிவானையும் அறிவு இணைக்கின்றதே தவிர அவற்றை உண்டாக்குவதில்லை. அறிவின் வேலை பொருள்களை விளக்கம் பெறச் செய்தல் மட்டுமேயாகும். அவ்வெளிப்பாடும் மனம், புலன்கள் ஆகியவற்றின் வழியே நடைபெறுகின்றது. இயலுலகில் அறிவுச்செயல், ஆன்மாவில் தொடங்கி மனம் புலன் உறுப்புகளின் வழி பொருள்களைச் சென்றடைந்து

அவைகளை விளக்கம் பெறச் செய்வதாகும். அறிவானுக்கும், அறிவுக்கும் உள்ள தொடர்பு பிரிக்கமுடியாதது ஆனால் பொருள் களுக்கும் அறிவிற்கும் இடையே உள்ள உறவு பிரிக்கப்படக்கூடியது. அறியும் வழிகளான புலக்காட்சி எனும் காட்சியளவை (Perception) கருதுதலளவை (Inference) மற்றும் உரையளவை (Verbal Testimony) ஆகியவை அறிவின் வெவ்வேறு நிலைகள் அல்லது அவத்தைகளாகும்.

*அறியும் வழிகள் :*

விசிட்டாத்வைதம் புலக்காட்சி (Pratyaksa) கருதுதல் (Anumana) மற்றும் உரையளவை (Sabda) ஆகியவற்றை அறியும் வழிகளாகக் குறிப்பிடுகின்றது.

*புலக்காட்சி* : புலன்கள் பொருள்களுடன் நேரடியான தொடர்பு கொள்வதால் உடனடியாகக் கிடைக்கப் பெறும் அறிவே புலக்காட்சி யாகும். புலன் உறுப்புக்கள், புலன்கள் பொருள்களுடன் தொடர்பு கொள்ள உதவுகின்றன. விசிட்டாத்வைதம் புறத்தேயுள்ள ஐம்புலன் களையும், அகத்தேயுள்ள மனப்புலனையும் ஏற்கின்றது புறப்புலன்கள் புற உலகு அறிவைப் பற்றியும், மனப்புலன் நினைவு, கற்பனை ஆகியவற்றையும் அறிய உதவுகின்றன. மனமே தளைக்கும், வீடு பேற்றிற்கும் அடிப்படையாக அமைந்துள்ளது. பிரித்தறிதல் (புத்தி), தான் எனும் எண்ணம் (அகங்காரம்), விருப்பம் (சித்தம்) ஆகியவை மனத்தின் வெவ்வேறு நிலைகளாகும்

அறிவான் புலன்கள் தங்கியுள்ள புலன் உறுப்புக்களைக் கருவி களாகக் கொண்டு அறிவைப் பெறுகின்றான். கட்புலனைத் தவிர்த்து ஏனைய புலன்கள் அவற்றிற்குரிய பொருள்களைத் தம்மை வந்தடை யும் போது மட்டுமே வெளிப்படுத்துகின்றன. ஆனால் கட்புலன் மட்டும் தானே பொருள்களைச் சென்றடைந்து அவற்றை வெளிப் படுத்துகின்றன இவ்வாறு புலன்கள் அவைகளுக்கே உரிய பொருள் களை மட்டும் விளக்கம் பெறச் செய்வதால் அவற்றை 'பிராப்பிய பிர காசகாரிகள்' என விசிட்டாத்வைதம் வழங்குகின்றது. புலன்கள் முதல் நிலையில் உள்ளத்தியல்பாகவும், இரண்டாம் நிலையில் பருப்பொரு ளாகவும் விளங்குகின்றன அனைத்துப் புலன்களும் அணுவளவானவை. ஆன்மாக்களுடன் ஒரு பிறப்பிலிருந்து மற்றொரு பிறப்பிற்குத் தொடர்ந்து செல்பவை. புலன்கள், பொருள்களுடன் கொள்கின்ற தொடர்பை பிரிக்கப்படகூடிய ஒன்று சம்யோகம் எனவும், பொருள்

களுடன் பிரிக்கவொண்ணா நிலையிலுள்ள அவற்றின் பண்புகளுடன் புலன்கள் கொள்ளும் தொடர்பைச் சம்யுக்தாசிரயம் எனவும் இராமானுசர் குறிப்பிடுகின்றார்.

புலக்காட்சி இறைவனின் புலக்காட்சி, யோகிகளின் புலக்காட்சி ஏனைய மக்களின் புலக்காட்சியென மூவகைப்படும். மக்களின் புலக்காட்சி இரண்டு நிலைகளில் நிகழ்கின்றது. அவை வரையறுக் கப்படாத புலக்காட்சி எனும் நிர்விகற்ப காட்சி என்றும், மற்றும் வரையறுக்கப்பட்ட புலக்காட்சி எனும் சவிகற்பக் காட்சி என்றும் கருதப்படும்.

வரையறுக்கப்படாத புலக்காட்சி என்பது ஒரு பொருளை அதனைச் சார்ந்த பழைய நினைவுகளோ உணர்வுகளோயின்றி, அப் பொருளை முதன்முதலாக அது இன்னவகையைச் சார்ந்தது என்ற றியாது அதே சமயம் அதற்குரிய குணங்களுடன் காணும் காட்சி யாகும். பிறர் கூற்றுப்படி அக்காட்சி வரையறுக்கப்பட முடியாத ஒன்றல்ல ஏனெனில் பொருளை அதற்குரிய பண்புகளுடன் முதன் முதலாகக் காணும் காட்சியே வரையறுக்கப்படாத காட்சி என்று கூறப்படுகிறது

வரையறுக்கப்பட்ட காட்சி, காட்சியின் முழுமையையும், தெளி வையும் பொறுத்தது. அறிவு வேறுபடுத்துதல் பிரித்தல், பாகுபடுத் துதல் ஆகிய செய்கைகளைத் தன்னகத்தே கொண்டுள்ளது. ஒரு பொருளைப் பற்றிய பழைய நினைவுகளைக் கொண்டு அது இன்ன வகையைச் சார்ந்தது என்று முடிவு செய்வதே வரையறுக்கப்பட்ட காட்சியாகும். வரையறுக்கப்படாத காட்சியில் முன் பதிவுகளை நினைவு கூர்வதில்லை. வரையறுக்கப்பட்ட காட்சியில் நினைவு கூர்தல் உண்டு.

***உண்மை, பிழை பற்றிய கோட்பாடுகள் :***

விசிட்டாத்வைதம் ஏற்கும் மூவகை அளவைகளான காட்சி, கருதுதல், உரை ஆகியவற்றில், காட்சியளவையில் ஏற்படும் பிழை பற்றியே உண்மை பிழை பற்றிய கோட்பாடுகள் பேசப்படு கின்றன. விசிட்டாத்வைதம் புறவுலகுண்மையை ஏற்கின்றது; பொருள் அனைத்தும் உண்மையில் அறிவதற்குரியவை என்கின்றது. அதன்படி உண்மையில் இருக்கின்றனவை மட்டுமே அறியப்படு கின்றன. உண்மையான பொருளுடன் தொடர்பற்ற அறிவு எதுவும் கிடையாது. வெறும் அறிவு என்பதும் இல்லை. எனவே அறிவின்

உண்மை அல்லது ஏற்புடைமை என்பது ஒரு பொருளை அது இருக்கின்றவாறே அறிவதாகும். பிழைக்காட்சிகள் கூட இதற்கு விதிவிலக்கல்ல. ஒரு பொருளை உண்மை என்று சொல்லும்பொழுது அதனைப்பற்றிய எண்ணமும் அதன் புறநிலை இருப்பும் ஒத்திருக்கின்றன என்பதாகும். எனவே ஒரு பொருளை உண்மையாக அறிவது என்பது அப்பொருளை இருக்கின்றவாறே அறிவதாகும். இதன்படி அனைத்து அறிவும் அது உண்மையான அறிவாக இல்லாவிடினும் உண்மையேயாகும். (All knowledge is mecessarily true, though it may not be true knowledge)

அனைத்து அறிவும் உண்மையாகும் என்று கூறும் பொழுது பிழையறிவும் உண்மை என்பது பெறப்படுகின்றது பிழையறிவு உண்மையான அறிவு இல்லையென்றாலும், பிழை நீங்குகின்ற வரையில் உண்மையேயாகும். பிழையென்பது ஒரு பொருளை வேறு ஒன்றாக (அன்யதம்) அறிவதாகும். இதனைத் திரிபுக்காட்சி (Illusion) என்கிறோம். இதற்கு எடுத்துக்காட்டாகக் கிளிஞ்சலை (Conch-Shell) வெள்ளியாகக் (Silver) காண்பதையும், கயிற்றைப் பாம்பாகக் காண்பதையும் கூறுவர். இவற்றுள் கிளிஞ்சலையும். கயிற்றையும் அவை இருக்கின்றவாறே அறியும்வரைக்கும், அவற்றின் பிழையறிவை உண்மையெனக் கருதிச் செயல்புரிகின்றோம். அவற்றின் உண்மை தெரிந்த பிறகே வெள்ளி, பாம்பு பற்றிய அறிவுகள் பிழையறிவுகளெனத் தெளிகின்றோம்.

திரிபு அல்லது பிழைக்காட்சியில் அறியப்படுகின்ற பொருளின் உண்மைத் தன்மையையே பிழைக் கோட்பாடுகள் (கியாதிவாதம்) கருதுகின்றன. விசிட்டாத்வைதப் பிழைக் கோட்பாடு திரிபுக்காட்சியின் பொருள் உண்மையில் 'உள்ளது' (சத்) என்று கருதுகின்றது. இல்லையெனில் இல்பொருட்களான வானாத்தாமரை போன்றவற்றைத் திரிபுக்காட்சியில் அறிவதாகக் கொள்ள நேரிடும். எனவே கிளிஞ்சலும் அதில் காணப்பட்ட வெள்ளியும் உண்மையில் இருக்கின்ற பொருள்களேயாகும். கிளிஞ்சலில் வெள்ளியின் இருப்பை மூவகைக் கூறுகளின் கூட்டு (திரிவிதகரணம்), ஐந்து நிலைக் கூட்டு (பஞ்சீகரணம்) ஆகிய கொள்கைகளின் அடிப்படையில் விசிட்டாத்வைதம் விளக்குகின்றது. உலகப் பொருட்கள் அனைத்தும் ஒளிக்கூறு (சத்துவம்), செயல்கூறு (இராசசம்), இருள்கூறு (தாமசம்) ஆகியவற்றின் கூட்டினால் ஆனவையாயினும் ஒவ்வொரு பொருளிலும் ஏதேனும் ஒரு கூறு மேலோங்கிய நிலையில் அமைந்து அப்பொருளை இயல்வரையறை செய்யும். இது எல்லாப் பொருளி

லும் ஏனைய பொருள்களின் கூறுகள் உள்ளன என்பதைத் தெரி விக்கின்றது. இக் கருத்தின்படி கிளிஞ்சலில் வெள்ளியின் கூறும் அடங்கியுள்ளது. ஆனால் வெள்ளியின் கூறு சிறிதளவே கிளிஞ்சலில் இருப்பினும் மனம் அதனை மேலோங்கிய கூறாகக் கருதி கிளிஞ் சலைத் தவிர்த்து பிழைக்காட்சியில் வெள்ளியாக அறிகின்றது சிறி தளவாயினும் வெள்ளியின் கூறு கிளிஞ்சலில் உள்ளதால் வெள்ளி உண்மையில் இருக்கின்ற பொருள் என விசிட்டாத்வைதம் தனது மூவகைக் கூறுகளின் கூட்டில் தெரிவிக்கின்றது. இதேபோன்று உலகப் பொருட்களனைத்தும் ஐவகைப் பருப்பொருட்களான (பஞ்ச பூதங்கள்) தீ, வளி, நீர், நிலம், வெளி ஆகியவற்றின் சேர்க்கை யினால் ஆனவையாதலால் ஒவ்வொரு பொருளிலும் பிறவற்றின் கூறுகள் அடங்கியேயுள்ளன எனலாம். திரிபுக் காட்சியில் குறைந்த அளவிலானதை மிகுந்த அளவினதாகக் கண்டு ஒன்றை மற்றொன் றாகக் (அன்யதம்) காணும் நேரத்தில் இரு பொருட்களுமே உண் மையில் இருக்கின்ற பொருள்களாகும். எனவே உண்மையிலுள்ள பொருளே திரிபுக்காட்சியின் பொருளாக அமைகின்றது என்றும், அது உண்மை இருப்புக் கொண்டது என்றும் விசிட்டாத்வைதம் கூறுகின்றது.

திரிபுக்காட்சிப் பொருளின் உண்மை நிலையை, அளவையியல் முறைப்படி விசிட்டாத்வைதம் பின்வருமாறு கூறுகின்றது. உண்மை நிகழ்ச்சிகளுடன் நமது எண்ணம் ஒத்திருப்பதும், அத்தகைய ஒத்த தன்மையைப் பற்றிய நமது நம்பிக்கையுமே அளவையியலின்படி உண்மையாகும். திரிபுக் காட்சியின் பொருளான வெள்ளியும், அத னைப் பற்றிய நமது எண்ணமும் ஒத்துள்ளன என்று நாம் நம்பு கின்றோம். எனவே அத்தகைய எண்ண-உண்மை நிகழ்ச்சி உடன் பாடு உண்மையாகும். இதில் வேறுபாடு தோன்றுவது அதனைப் பயன்படுத்தும் முறையிலேயே அமையும். பயன் வழியில் திரிபுக் காட்சிப்பொருள் தவறெனினும், அளவையியலின்படி அது உண்மை யேயாகும்.

உளவியல் முறையில் கருதினாலும் திரிபுக்காட்சியின் பொருள் (Object of Illusion) உண்மைக்காட்சியின் பொருள் போன்றே உண்மை யில் இருப்பதாகும். கிளிஞ்சலிலுள்ள வெள்ளியின் சிறுகூறு புலன் களைத் தூண்ட, புலனும் அதனை அவ்வாறே பெறுகின்றது. ஆனால் மனம் தனது பழைய நுகர்வு மற்றும் சில நிலைகளினால் கிளிஞ்சலை இயல் வரையறை செய்யும் கூறினைத் தேர்வு செய்யத் தவறி மாறாக

அதிலுள்ள வெள்ளியின் சிறு கூறினைப் பெரிதாகத் தேர்தலினாலேயே பிழை ஏற்படுகிறது. எனவே பிழையானது மனநிலையைப் பொறுத்த தேயன்றிப் பொருளின் உண்மையிருப்பைச் சார்ந்ததல்ல. மேலும் கிளிஞ்சலும் அதன் கண் உள்ள வெள்ளியின் சிறுகூறும் அறிவானுக்குப் புறம்பாக இருப்பவையாதலால், இருப்பின் அடிப்படையிலும் (Ontologically) அவை உண்மை இருப்பைக்கொண்டவை என்கின்றனர் விசிட்டாத்வைதிகள். சில நேரங்களில் உடல் நிலைகளினாலும் திரிபுக் காட்சிகள் தோன்றலாம். எடுத்துக்காட்டாக வெண்மைப் பொருட்கள் மஞ்சள் காமாலை நோயினால் மஞ்சளாகக் காணப் பெறுவதைக் குறிப்பிடலாம்.

திரிபுக்காட்சிப் பொருள்களன்றி கனவு மற்றும் மாயக்காட்சி (Hallucinations)-களின் பொருள்கள் கூட உண்மையில் உள்ளனவாக விசிட்டாத்வைதம் கருதுகின்றது. ஏனெனில் இவைகளின் பொருள் கள் கூடக் காண்பானுக்குப் புறத்தே இருப்பவை. எனினும் அவை புற உலகு இருப்பைக் கொண்டதல்ல கனவு மற்றும் மாயக் காட்சி யின் பொருள்கள் இறைவனால், அவைகளைக் காணும் உயிர்களுக்கு அவற்றின் வினைப் பயன்களுக்கேற்பப் படைக்கப்படுவனவாகும் அவை அக் காட்சி இருக்கும் வரைக்கு மட்டுமே நிலைத்திருக்கும். அக்காட்சிப்பொருள்கள் புற உலகப் பொருள்களைப் போன்று நீண்ட தொரு நிலைப்பை உடையனவல்ல.

விசிட்டாத்வைதிகள் பிழைக் காட்சியின் பொருள் உண்மையில் இருப்பது என்று கூறுவதால் அக் கோட்பாடு சத்கியாதி எனவும், ஒன்றை மற்றொன்றாகக் கருதுவதால் அன்யதக் கியாதி எனவும் இரண்டு பெயர்களைப்பெறுகின்றது.

*கருதுதல் அளவை (அனுமானம்)*

கருதலளவை நினைவை அடிப்படையாகக் கொண்டது; நினைவு புலக்காட்சியை அடிப்படையாகக் கொண்டது; எனவே கருதலளவையும் புலக்காட்சியை அடிப்படையாகக் கொண்டது எனலாம். முன்னரே தெரிந்த சில உண்மைகளின் அடிப்படையில் ஒரு புதிய உண்மையை அறியும் செயலே கருதலளவையாகும். எடுத்துக்காட்டாக மலையில் புகையைக் கண்ட ஒருவன், உடன், புகைக்கும் நெருப்பிற்குமிடையேயுள்ள மாறாத உறவை நினைவு கூர்ந்து அம்மலையிலும் நெருப்பு உள்ளது என்ற புதிய அறிவைக் கருதுதலே கருதலளவையாகும். கருதலளவையின் மூலம் பெறும் அறிவைக் கருத்தறிவு (அனுமிதி) எனலாம்.

விசிட்டாத்வைதிகள் மாறாத உறவானது (வியாப்தி), சார் பற்றதும் (நிருபாதிகம்), பொதுமையானதும் (நியதம்) ஆகும் என்கின்றனர். துணி பொருட்பதத்திற்கும் மத்திமபதத்திற்கும் (நெருப்பு, புகை) இடையேயுள்ள மாறாத உறவினை, தொடர் நிகழ்வுகளை (சகசாரம்) உற்று நோக்குவதாலும், ஒன்றுடன் ஒன்று தொடர்ந்து வருவதனைக் (வியாய்பிசாரம்) கொண்டும் அறியலாம். இம்மாறாத உறவினை அடைவதற்குரிய வழிகளாக உடன் நிகழ்ச்சி முறையையும் (கேவல அன்வயம்), உடன் நிகழ்ச்சி மற்றும் உடன் நிகழ்ச்சியின்மை முறையையும் (அன்வயவியாதிரேகம்) விசிட்டாத் வைதிகள் ஏற்கின்றனர். புகை மற்றும் நெருப்பினைத் தொடர்ந்த நிகழ்ச்சிகளில் காணப்பெற்று அவற்றிற்கிடையே மாறாத உறவினைத் தீர்மானித்தல் முதல் முறையாகும். தொடர் நிகழ்ச்சிகளாலும், தொடர் இன்மைகளாலும் அவைகளுக்கிடையே மாறாத உறவைத் தீர்மானிப்பது இரண்டாவது முறையாகும் விசிட்டாத்வைதிகள் வெறும் இன்மை முறையை (கேவலவியாதிரேகம்) ஏற்றாலும கூட அதனை மாறாத உறவினைப் பெறும் ஒரு வழியாக ஏற்பதில்லை.

விசிட்டாத்வைதிகளும் கருதலளவையைத் தனக்கெனக் கருதுவது (தன் பொருட்டு அனுமானம்) என்றும் பிறருக்காகக் கருதுவது (பிறர் பொருட்டு அனுமானம்)" என்றும் இருவகைப் படுத் துகின்றனர். தனக்கெனக் கருதுவது கருதலளவையின் மரபான முக்கூற்று முடிவு வழிச் செல்வதில்லை. ஆனால் பிறருக்காகக் கருதுவது ஐவகைக் கூற்றுகளாகக் கூறப்படுகின்றது. அவை 1) எடுப்புரை (பிரதிக்ஞை) அம் மலை நெருப்புடைத்து. 2) காரணம் (ஏது) : ஏனெனில் அம்மலை புகையுடைத்து 3) எடுத்துக்காட்டு (உதா ரணம்) எங்கெல்லாம் புகையுண்டோ அங்கெல்லாம் நெருப்புண்டு, அடுப்பில் போன்று 4) பொருத்திப் பார்த்தல் (உபநயம்) அம் மலை புகையுடைத்து அடுப்பினைப் போன்று, 5) முடிப்புரை (நிகமனம) எனவே அம் மலை நெருப்புடைத்து, விசிட்டாத்வைதிகள் இம் முறை களுக்கு அதிக அளவு இன்றியமையாத தன்மையைக்கொடுப்பதில்லை.

முக்கூற்று முடிவில், கருதிப்பார்த்தல் இன்றியமையாததாகும் அது ஏற்புடையதாக விளங்கினால் மட்டுமே கருதுதல் அறிவும் உண்மையானதாக விளங்கும். மலையில் மேகக் கூட்டத்தினைக் கண்டு புகையெக் கருதி அதன் வழி நெருப்பு இருப்பதாகக் கருதினால் அது தவறானதாகும். பொய்யறிவு உண்மையறிவின் தோற்றத்தில்

விளங்குவதைப் போலி (ஏத்துவாபாசம்) அல்லது கருதலளவைப் பிழை என்பர். அப் பிழைகளை விசிட்டாத்வைதிகள் பின்வரும் ஐவகை யினதாகக் கூறுகின்றனர்.

நிறுவப்படாத கருதலளவைப் பிழை (அசித்தம்); இப்பிழை யினையும் மூவகையாகக் குறிப்பிடுவர் (அ) தன் வடிவு நிறுவப்படாத பிழை: பாத்திரம் அறியப்படும் பொருளாகையால் நிலையற்றது; உயிராகிய ஆன்மாவும் அறியப்படுவதால் அதுவும் நிலையற்றது எனக் கூறுவதில் உயிரின் தன்மை (வடிவு), பாத்திரத்தின் தன்மைக்கு எதிரானதால் தன்வடிவு நிறுவப் படாத பிழையாகும். (ஆ) அடிப் படை நிறுவப்படாத கருதலளவைப் பிழை: ஏரியிலுள்ள தாமரை யைப் போன்று வானத்தாமரையும் மணமுள்ளது என்றுரைப்பது வானத்தாமரையின் இருப்புண்மை அடிப்படையைப் புரிந்து கொள் ளாததால் ஏற்படுகின்ற பிழையாகும் (இ) பரவுதல் தன்மை நிறுவப் படாத பிழை: உண்மையானது எனவும் நொடிப்பொழுதானவை என்றுரைப்பதில் உண்மைப் பொருளுக்கும், நொடிப்பொழுதிற்கு மிடையேயுள்ள மாறாத உறவு நிறுவப்படாத பிழையாகும்.

2) முரண் கருதலளவைப் பிழை (விருத்தம): இப்பிழையில் காலத்தைம் போன்றே பருப்பொருளும் உண்டாக்கப்பட்டதால் பருப் பொருளும் நிலையானது என்று கூறுகின்றோம். மத்திமபதமாகிய 'உருவாக்கப்பட்டதற்கும்' துணிபொருட் பதமாகிய 'பருப்பொருளுக் கும்' முரண்பாடு உள்ளதை அறியாததனால் ஏற்படுகின்ற பிழை யாகும் இது.

3) முடிவு செய்ய இயலாத கருதலளவைப் பிழை (அனை காந்திகம்) காலத்தைப் போன்றே ஒலியும் அறியப்படுவதால் ஒலியும் நிலையானது என்று கூறுவதில் அறியப்படும் நிகழ்ச்சி, நிலையான மற்றும் நிலையற்ற பொருள்களுக்கு உரியது, ஆதலால் இதனைக் கொண்டு எதனையும் முடிவு செய்ய இயலாத பிழை ஏற்படுகின்றது.

4) வெற்றுக் கருதலளவைப் பிழை (காலாத்யாயபதிட்டம்): நீரைப் போன்று நெருப்பும் ஒரு பொருளாகையால் அதனைப் போன்றே இதுவும் குளிர்ச்சியானது என்று கருதுவதில் குளிர்ச்சித் தன்மை நெருப்பில் இருக்க முடியாத வெற்றுப் பிழையாகின்றது.

5) எதிர் இணைக் கருதலளவைப் பிழை (பிரகரணசமம்) : ஒரு கருத்திற்கு இணையான எதிர்க்கருத்து இருப்பின் இப் பிழை நேரிடும். இது இறைவன் நிலையான பண்புகள் அற்றவன் ஆகை யால் நிலையற்றவன் என்று கூறுவதைப் போன்றதாகும்

*உரையளவை (சப்தம்)*

விசிட்டாத்வைதத்தின்படி வேதங்கள் உரையளவை எனப்படும். ஏனெனில் அவை தொடக்கமற்றவை; எவராலும் இயற்றப்படாதவை (அபௌருசேயம்). இராமானுசர் "இறைவன் பிரம்மாவிற்கு ஒவ் வொரு கல்ப காலத்தின் தொடக்கத்தில் வேதங்களை அருளினார்" என்று கருதுகின்றார். மேலும் அவர் வேதங்கள் வினைப்பகுதி (கர்மகாண்டம்), அறிவுப் பகுதி (ஞானகாண்டம்) எனும் இரு பகுதி களை உடையனவென்றும், முதற்பகுதியில் போற்றிகள் (மந்திரம்), பொருள் விளக்கக் கூற்றுகள் (அர்த்தவாதம்) மற்றும் கட்டளைக் கூற்றுகள் (விதி) ஆகியவை அடங்கியுள்ளனவென்றும் கருதுகின் றார். இவற்றுள் போற்றிப் பகுதி செய்யப்பட வேண்டிய செயலைச் சுட்டுகின்றது. பொருள் விளக்கப் பகுதி அச் செயலின் தன்மையைப் பற்றி உரைக்கின்றது. கட்டளைப் பகுதி தனியனுக்கோ அல்லது சமுதாயத்திற்கோ நலன் பயக்கக்கூடிய செயலைச் செய்வதில் ஒருவனை வழி நடத்துகின்றது வேதத்தின் அறிவுப்பகுதி இறை வனின் தன்மையைக் கூறுவதாகும்

வேதக்கூற்றுகள் அனைத்தும் சான்றுறுதி கொண்டவை; எனவே நம்புதற்குரியவை ஏனைய மரபு நூல்களும், புராணங் களும், காப்பியங்களும், ஆகமங்களும் உரையளவையென விசிட்டாத் வைதம் ஏற்கின்றது இராமானுசர் தனது சிரீபாசியத்தில் பாஞ்ச ராத்ர, வைகானச ஆகமங்களின் சான்றுறுதித் தன்மையைப் பின் வருமாறு விளக்குகின்றார். காட்சி மற்றும் கருதலளவை, நுகர் விற்கு அப்பாற்பட்ட இறைவன், உயிர் ஆகியவை பற்றிய அறிவை அளிப்பதில்லை. ஆனால் உரையளவை நுகர்விற்கு அப்பாற்பட்ட பொருள்களைப் பற்றிய அறிவையும், வேறு அளவைகளால் மறுக் கப்பட இயலாத அறிவையும், அவ்வறிவின் அகப்பொருத்தம் அறி விற்கு அப்பாற்பட்டதாக இருப்பினும் அறிவிற்கு முரண்படாது அறிவு சுட்டிக்காட்டிய ஒன்றையே தருகின்றது. இத்தகைய மூன்று இயல்புகளும் ஆகமங்கள் தரும் அறிவிற்கு இருப்பதாலும், ஆகமங் கள் வேதங்களை அடிப்படையாகக் கொண்டிருப்பதாலும், இறை

வனை வழிபடும் முறைகளைக் கூறுவதாலும் ஆகமங்களும் சான்றுறுதி கொண்டவையே. ஆகமங்களை அறியும் வழியாக விசிட்டாத்வைதம் ஏற்பதால் 'அதற்கு ஆகமப்பிரமாண்யம்' என்ற பெயரும் வழங்குகிறது

''சாற்றுரைகளும் ஏற்புடைய அறிவைத் தருவன'' என்று இராமானுசர் கருதுகின்றார். ஆனால் அவ்வுரைகளில் அடங்கியுள்ள சொற்கள் எதிர்பார்ப்பு, பொருளொற்றுமை மற்றும் பக்க அண்மை நிலை ஆகிய தகுதிகள் பெற்றிருத்தல் இன்றியமையாததாகும். ஒரு சொல் தனித்து முழுமையாக அறிவைக் கொடுக்காது. எடுத்துக்காட்டாக தாமரை என்ற சொல் முழுமையான அறிவைத் தருவதில்லை. அதேபோன்று நீர் விறகை எரித்தது எனும் தொடரில் பொருட்குற்றம் உள்ளது. இதுவும் ஏற்புடைய அறிவன்று. ஒரு தொடரிலுள்ள சொற்கள் தொடர்ச்சியாகக் கூறப்பட வேண்டும். இடைவெளி விட்டுக் கூறினால் முழுமையான அறிவைத் தராது. எனவே இம்மூன்று குறைகளற்ற உரைகளே ஏற்புடைய சாற்றுரைகளாகக் கொள்ளப்பட வேண்டும் என இராமானுசர் கூறுகின்றார்

இராமானுசர் இறைவனின் இருப்பைக் கூறுவதற்கு உரையளவையைப் பயன்படுத்துகிறார். ஏனெனில் அது ஒன்றே உள்பொருளின் இயல்பைப்பற்றி, பிழைபடாத தீர்மானித்தலைத் தர இயலும் என அவர் கருதுகின்றார். மீமாம்சகர்கள் வேதத்தின் பொருளான பிரம்மனை, அடையப்பெற்ற பொருளாக (சித்தவத்து) ஏற்க முடியாது எனக் கருதுகின்றனர். அவர்களின் கருத்துப்படி சடங்கியல் கட்டளைகளை முழுமையாகப் புரிய வைப்பதே வேதங்களின் நோக்கமாகும் அவை ஒரு பொழுதும் பொருள்களின் உண்மை இயல்பு பற்றிய அறிவைத் தருவதில்லை எனவும், வேதங்களின் இரு நோக்கங்களான செயல் (பிரவிருத்தி), செயலின்மை (நிவிருத்தி) ஆகியவையே மனித வாழ்க்கையுடன் தொடர்பு கொண்டவை எனவும் அவர்கள் கருதுகின்றனர். செயலின் மூலமே ஒன்றை இருப்பிற்குக் கொண்டு வர முடியும் பிரம்மன் அடையப் பெற்ற பொருளாகையால் எச்செயலினாலும் அதனை இருப்பிற்குக் கொன்டு வர இயலாது எனவே மீமாம்சகர்கள் ஒரு முகச் சிந்தனைச் செயலின் பொருளெனப் பரம்பொருளாகிய பிரம்மனை ஏற்கின்றனர்.

ஆனால் இராமானுசரும் சங்கரரைப் போன்றே அடையப்பெற்ற பொருளைப் பற்றிய ஏற்புடைய அறிவையும் உரையளவை தருமெனக்

கருதுகின்றனர். ஏனெனில் ஒரு சொல்லின் பொருளை அது செயலில் ஈடுபடுத்தாவிடினும் புரிந்துகொள்ள முடியும். இராமானுசரும் பிரம்மனை ஒரு முனைப்பான சிந்தனையுடன் இணைக்கின்றார். மேலும் வேதத்தின் அறிவுப்பகுதியின் பொருளான பிரம்மனை ஒரு முனைப்பான சிந்தனைச் செயலின் மூலம் அடைவதற்குரிய மேலான இருப்பாகக் கருதுகின்றார் சங்கரர் அடையப்படவேண்டிய ஒன்றாகப் பிரம்மன் கருதப்பட்டால் அதுவும் நிலையற்றதாகிவிடும் எனக் கூறுகின்றார். ஆனால் இராமானுசர் செயல்களின் முடிவு எப்பொழுதும் நிலையற்றதாகவே இருக்கும் என்பதை ஏற்பதில்லை. ஒருமுகச் சிந்தனையானது தன் முனைப்பான செயல்களை மட்டும் அழிக்குமேயன்றித் தன்முனைப்பற்ற செயல்களை அல்ல ஒருமுகச்சிந்தனை இறைவனின் அருளை வழிபடுபவர் பெறுவதற்குத்துணை புரிகின்றது, மேலும் இறைவன் முழுமையும், கருணையும் கொண்டவராதலால் தன்னை வழிபடுபவரின் மீது நல்லதொரு பரிவைக் காண்பிக்கின்றார். இறைவனைப் பற்றிய அறிவைப்பெறுதற்கு உரையளவையாகிய வேதங்களே ஏற்புடையவை என்பது இராமானுசரின் கருத்தாகும்.

## 11. புலன்கடந்த பொருளியல் அல்லது உள்பொருளியல் கோட்பாடுகள்

விசிட்டாத்வைத மெய்ப்பொருளியலில் இரண்டாவது பகுதியாகிய புலன் கடந்த பொருளியல் அல்லது உள்பொருளியலே (Metaphysics) மிகவும் இன்றியமையாததாகும். ஏனெனில் இப் பகுதியில் தான் விசிட்டாத்வைதம் கருதும் "அறியப்பட வேண்டிய பொருள்கள்" பற்றி பேசப்படுகின்றன. உண்மையில் இருக்கின்ற பொருள்களைப் பற்றிக் கருதுவதால் இப்பகுதிக்கு இருப்பியல் (Ontology) என்ற பெயரும், அவ்வாறு உண்மையில் இருக்கின்ற பொருள்கள் பெறும் பல படிமுறை வளர்ச்சிகளைப் பற்றிக் குறிப்பிடுவதால் அந்நிலைகளைக் குறிக்கும் இருப்பியல் நிலைகள் அல்லது தத்துவங்கள் என்ற பெயரும் வழங்கி வருகின்றன. அறியப்பட வேண்டிய உள்பொருள்களாக விசிட்டாத்வைதம் இறைவன், சித்து (உயிர்), அசித்து (உணர்வல்லாதது) எனும் மூன்றினைப் பற்றிக் கூறுவதால் இவைகளைத் தத்துவத்திரயம் என்பர் இறைவனைப் பற்றிக் கருதும் பகுதி இறையியல் (Theology) எனவும், உணர்வும் பொருளாகிய சித்தைக் கருதும் பகுதி உயிரியல் அல்லது ஆன்மயியல் (Concept of soul) எனவும், உணர்வற்ற பகுதியாகிய அசித்தைக் கருதும் பகுதியில் பரம்பொருளாகிய விட்டுணு வாழும் இடத்தை

அபிராகிருதஉலகம் எனவும், உயிர்கள் வாழுமிடமான உலகைக் கருதும் பகுதி உலகியல் (Cosmology)' எனவும், காலத்தைக் கருதும் பகுதி சத்வசூன்யம் எனவும் வழங்கப்படுகின்றன உலகு அதன் அடிப்படைப் பொருளிலிருந்து படி முறைவளர்ச்சியில் (Evolution) பெறும் இருப்பு நிலைகளைத் தத்துவங்களெனவும், படிமுறை வளர்ச்சியைப் பரிணாமம் எனவும் குறிப்பிடுவதுண்டு. இவற்றுடன் உயிர், தளைக்குட்படுவதில் அசித்தின் பங்கினை, அவித்தை என்ற பகுதியிலும், தத்துவத்திரயங்களான இறைவன், சித்து, அசித்து ஆகியவற்றின் இடை அமைந்த உறவும், உள்பொருளியலில் கருதப் படுகின்றன. அதுவே மெய்ப்பொருளியல் மரபும் ஆகும்.

*அ) இறையியல் கோட்பாடு*

வைணவம் பரம்பொருளை விட்ணு, பகவான் என்ற பெயர் களால் வழங்குகின்றது விட்டுணு என்ற சொல்லில் **விண்** என்ற பகுதி பரம்பொருள், 'அனைத்திலும் பரவி நிற்கிறது' என்ற பொரு ளைத் தரும். அதே போன்று பகவான் என்ற சொல்லின் அடிப் படையான பக என்பது அனைத்து 'நலன்களையும் அளிப்பவன்' என்று பொருள்படும். ஆனால் விசிட்டாத்வைத மெய்ப்பொருளியலில் பரம்பொருள் ஈசுவரன், இறைவன் என்ற சொற்களாலேயே குறிப் பிடப்படும்.

விசிட்டாத்வைதத்தில் இராமானுசர் பரம்பொருளாகிய இறை வன் இப்பிரபஞ்சத்தின் உள் மற்றும் இல் பொருள்களின் உள்ளுணர் வாக இருக்கின்றார் என்று குறிப்பிடுகின்றார். இதில் அடங்கியுள்ள உணர்வுள்ள உயிர்களும், உணர்வற்ற பொருள்களும், பொருளும் அதன்பண்புகளும், நிலைகளும், காப்பான் காக்கப்படுபவை, உடை யவன் உடைமை, நுகர்வான் நுகரப்படுபவை, உயிர் உடல் எனும் நிலைகளில் இறைவனுடன் பிரிக்க வொண்ணாத ஒருமையில் அடங் கியுள்ளவை ஆகும் உயிர் உடல் தொடர்பு போன்றே உயிர்களும் உலகும் இறைவனுடன் தொடர்பு கொண்டுள்ளன. உடலின் இயக் கமும், அதன் இருப்பு அடிப்படையும் எவ்வாறு உயிரைச் சார்ந்து நிற்பதோடன்றி அதன் நோக்கத்திற்காகவே இருக்கிறதோ அது போன்று உயிர்களும் உலகும் தம்முடைய இயக்கங்களும், தம் இருப்பு அடிப்படைகளும் இறைவனிடமிருந்தே பெறுவதோடன்றி இறைவ னின் நோக்கங்களுக்குட்பட்டவையாவும் விளங்குகின்றன. உயிர்களும் உலகும் இறைவனின் உள்வெளி உடல்களாக அமைந்திருப்பவை

யாகும் உயிர்களும் உலகும் இவ்வாறு இறைவனின் பண்புகளாக அமைந்துள்ளன வென்பது அவைகளின் தனி இருப்புக்களையும் தம் பண்புகளையும் மறுப்பது என்று பொருளாகாது உடலானது உயிரின் பண்பாயுள்ளதைப் போன்றே இறைவனின் பண்புகளாக உயிர்களும் உலகும் உள்ளனவென்பதாம். தத்துவத்திரயங்களான இறைவன், உயிர், உலகு ஆகியவை இறையொருமையாக விளங்குகின்றன.

விசிட்டாத்வைதம் இறைவனை வரம்பற்றவன், நிலையானவன், உள்ளுறைபவன், தூய்மையானவன் எனக்கருதுகின்றது. இறைவன் வரம்பிலான் அல்லது எல்லையற்றவன் என்பது அவன் கால இடத்தைக் கடந்து நிற்பதனாலேயேயாகும் இறைவன் அனைத்தையும தழுவு நிற்றலால் இடத்தைக் கடந்தவன்; நிலையானவன் என்பதால் காலத்தையும் கடந்தவன். கால இடநிலைகளைக் கடந்து இருப்பதால் நிலையானவன். அனைத்துப் பொருள்களும் அவனைச் சார்ந்தே பொருள் ஆகக் கொள்ளப்படுவதால் இறைவன் உள்ளுறைபவன். உடன் மாற்றங்கள் எவ்வாறு உயிரைப்பாதிப்பதில்லையோ அவ்வாறே இறைவனின் நிலைகளான உயிர், உலகு ஆகியவற்றின் குறைகள் அவனைப் பாதிப்பதில்லையாதலால் தூய்மையானவன்.

இறைவன் மேலான ஆட்சார்புடையவன் என்பது உயிர்களின் ஆட்சார்பு போன்று குறையுடையதல்ல. இறைவனின் ஆட்சார்பு தன்னுடைய நோக்கங்களை நிறைவேற்றிக் கொள்ளும் ஆற்றலுடைமையாகும் இறைவன் மாறுபாடற்ற, மாறும் தன்மையுடையவன் என்பது அவன் தன்னுள் எவ்விதமாறுதலுமின்றி அனைத்து மாறுதல்களுக்கும் உட்படும் உயிர் உலகு ஆகியவற்றின் இருப்பு அடிப்படையாக விளங்குவதைக் குறிக்கும். இறைவன் நிலை தன் இயல்பில் நிலையானதாக இருப்பினும் தனது பண்புகளான உயிர் சீவனாகவும், உணர்வற்ற அசித் உலகமாகவும் உண்மையில் மாறுபாடு அடைவதற்கு அடிப்படையானதாக இருப்பதனால் பொருள் நிலையில் மாறுபாடற்றதும், பண்பு நிலைகளில அவற்றின் வழியாய் மாறுபட்டும் விளங்குகின்றது

இறைவனின் பண்புகளான உயிரும் அசித்தும் சீவனாகவும் உலகமாகவும் உண்மையான மாற்றம் பெறுவதால் விசிட்டாத்வைதம் இறைவனை பொருட்காரணம், அறிவுக்காரணம் எனக்கருதுகிறது. உலகின் அடிப்படைப்பொருளான அசித்து இறைவனுக்குப் புறம்பாக

இருப்பது எனக்கருதப்படின் உலகப் படைப்பிற்கு படைப்பானாகிய இறைவன் பொருட்காரணத்தை வெளியிலிருந்து பெறவேண்டியிருக்கும் தன்னிலிருந்து வேறு ஒன்றினைச் சார்ந்தே இறைவன் படைக்க இயலும் என்று கருதுவது இறைவன் வரம்புக்குட்டவன் என்ற நிலையைத் தோற்றுவிக்கும். உலகின் உண்மையான பொருட்காரணம் அசித்து எனினும் அது இறைவனின் பிரிக்க வொண்ணாத பண்பாக அமைந்துள்ளதால் இறைனையே பொருட்காரணம் என விசிட்டாத்வைதம் உரைக்கின்றது. பொருட்காரணமாகிய அசித்து உணர்வற்றதாதலின் அதுதானே உலகமாகப்'படி முறைவளர்ச்சி பெற இயலாதது அதனை வளர்ச்சி பெறச் செய்ய ஒரு அறிவுக்காரணம் வேண்டும். உயிர்களும் கூட அறிவுடைய வையாயினும் அவற்றைக் அறிவுக் காரணம் எனக் கருதமுடியாது. ஏனெனில் அசித்து உலகமாகப் படிமுறை வளர்ச்சி பெறுவது குறையறிவு கொண்ட உயிர்களின் பொருட்டேயாகும். எனவே முற்றறிவு கொண்ட இறைவனே அறிவுக் காரணமாதல் வேண்டும். இறைவன் இவ்வாறு வேறுபாடற்ற பொருள், அறிவுக்காரணங்களாக ஒரே சமயத்தில் விளங்குகின்றான். உலகப் படைப்பின் துணைக்காரணமும் இறைவனேயாகும். சித்து அசித்து ஆகியவற்றுடன் இணைந்த இறைவன் பிரபஞ்சத்தின் பொருட்காரணமாகும். நான் பலவாக இருப்பேனாக எனும் இறைவனின் எண்ணம் அறிவுக் காரணம். இறைவனின் முற்றறிவும் எல்லையற்ற ஆற்றலும் உலகப் படைப்பின் துணைக் காரணங்களாம். இறைவனை உலகின் பொருட்காரணமாகக் கருதுவதனால் இறைவன் மாறுதலுக்கு உட்படுகிறான் என்று பொருளல்ல. இறைவனது பொருள்நிலையில் எவ்விதமாறுதலுமின்றி அதன்பண்பு நிலைகளில் மட்டுமே மாறுதல் ஏற்படுகின்றன என்பதாகும். பண்புநிலைகளான உயிர் அசித்து ஆகியவற்றின் மாறுபாடுகளும் பின்வருமாறுள்ளன உயிர் சீவனாக மாற்றம் பெறுகின்றது என்பது உயிர் தன்வடிவில் எவ்விதமாறுதலும் அடையாமல், தனது பண்பாகிய அறிவு மட்டுமே சுருங்கிய நிலையிலிருந்து விரிகின்ற மாற்றம் பெறுகின்றது. இதில்கூட அறிவின் விரிவெல்லை உயிரின் முன்வினைப் பயனால் தீர்மானிக்கப்படுகின்றது ஆனால் அசித்தின் உலகமாகும் பகுதியான பிரகிருதி தன்வடிவில் முழுமையான மாற்றத்தையடைந்து இயலுலகமாகின்றது. பிரகிருதி நுண்ணிய நிலையுடையது; இயலுலகம் பருநிலையானது உலகப்படைப்பின் தொடக்கத்தில் இறைவன் பிரகிருதியை உயிர்களின் வினைகளுக்கேற்ப படிமுறை வளர்ச்சியடையத்தூண்டுகிறது. படைப்பில் இறைவனின் தன் முழுஇயல்பில எவ்வித மாற்றமும் பெறுவதில்லை; உயிர் தன்

வடிவில் மாற்றம் பெறாவிடினும் தன் பண்புநிலையில் மாற்றம் பெறுகின்றது. ஒடுங்கிய நிலையில், சித்தும் அசித்தும் இறைவனில் உள்ளடங்கியிருப்பதால் அவன் கடந்த நிலையில் உள்ளான். படைப்பின் முடிவில் உலகு, சீவர்களில் இறைவன் உள்ளடங்கி உள்ளுறைபவனாகவும் விளங்குகின்றான்.

***இறையியல்புகள் :***

இராமானுசர் இறைவனுக்கு இருவகை இயல்புகள் உண்டென்று கூறுகின்றார். பரம்பொருள் ஒன்றாயினும் ஒரே நேரத்தில் இயல்புகள் அல்லது பண்புகளற்றதாகவும் (நிர் குணன்), இயல்புகளுடையதாகவும் (சகுணன்) விளங்குகின்றது. இயல்புகளற்றது என்பது பிரகிருதிக்குரிய எவ்வித கூறுகளோ அல்லது குறைகளோ அற்றவர் இறைவன் என்பதாகும். மேலும் உயிர்களுக்கு அவற்றின விழிப்பு, கனவு, ஆழ்ந்த உறக்கம், மயக்கம், இறப்பு, ஆகிய நிலைகளில் உரிய குறைகளெதுவும் இறைவனுக்கில்லை. இயற்கையுடன் உண்டான தொடர்பினாலும் இறைவனுக்குக் குறையில்லை. உணர்வற்றதில் நிலைபெற்றதனாலேயே உணர்வுக்கு இன்ப துன்பம் ஏற்படுவதில்லை; மாறாக உணர்வற்றதின் தாக்கத்திற்குட்பட்டு உணர்வு செயல்பட்டாலே அதற்கு இன்பதுன்பங்கள் நேரிடும். இறைவன் எச்செயலின் தாக்கத்திற்கும் உட்படாதவனாதலால் அவன் எவ்வகைக் குறைகளுமற்றவன், இயல்புகளற்றவன் என்பதன உண்மையாக விளங்குகின்றான்.

பரம்பொருளாகிய இறைவனை உண்மையானது (சத்து தானே இருப்பது), உயிர் (ஆன்மா, பெரியது (பிரம்மன்), ஈசுவரன் (கர்த்தா செயல்புரிபவர்), எங்கும் பரவியது (விபு) என்றெல்லாம் குறிப்பிடுவதுண்டு. இறைவனை உண்மையானது என்று கூறுவதற்கு இயல்பு என்ற ஒன்று இருத்தல் இன்றியமையாதது. விசிட்டாத்வைதம் இறைவன் எண்ணற்ற நற்பண்புகளை எண்ணற்ற அளவில் (அனந்தகோடி கல்யாண குணங்கள்) உடையவன் என்று கூறுவதே இறைவனைப் பண்புகளுடன் கூடியவன் (சகுணன்) என்று ஏற்பதாகவும், அத்வைதிகள் பிரம்மனை எவ்வகைப் பண்புகளுமற்றதாக (நிர்குணனாக) கருதுவதன்றிப் பண்புகளுடன் கூடியதாக கடந்த நிலையில் ஏற்பதில்லை. விசிட்டாத்வைதம் இறைவனைக் கடந்த நிலையில் மட்டுமின்றி ஏனைய நிலைகளிலும் பண்புகளுடன் கூடியவனாகவே கருதுகின்றது.

இறைவனின் பண்பு நலன்களை இராமானுசர் சார்பற்ற அடிப் படைப்பண்புகளெனவும், சார்புடைப் பண்புகளெனவும் இருவகையாகப் பிரிக்கின்றார் இவற்றுள் சார்பற்ற அடிப்படைப் பண்புகள் இறைவனின் அனைத்து வடிவங்களுக்கும் பொதுவானவையாகும் சார்புடைப் பண்புகள் சார்புப் பொருள்களைப் பொருத்து ஒன்றுக் கொன்று வேறுபடுபவையாகும்.

இறைவனின் சார்பற்ற அடிப்படைப்பண்புகள் எண்ணற்றவையாயினும் பின்வரும் ஐந்தினை விசிட்டாத்வைதம் உயர்ந்தவையெனக் கூறும். அவை; 1. அறிவு (ஞானம்): 2. மகிழ்ச்சி (ஆனந்தம்) இறைவன் துன்பக்கலப்பற்ற தூய்மையான மகிழ்ச்சியின் இருப்பிடமாக இருத்தலாலே மகிழ்ச்சி வடிவினன் (ஆநந் சொரூபி). 3. உண்மை (சத்தியம்): இறைவன் எவ்வித மாற்றத்திற்குட்பட்டவனல்ல; மாறுகின்ற உலகின் நிலைக்களன். எனவே தான் இறைவனை உண்மை அல்லது உள்ளது (சத்து) என்கிறோம். அதேபோன்று அவனது உணர்வும் உயிர்களின் பண்பாகிய உணர்வு போன்று சுருங்கி விரிவடைவதில்லை. இறைவன் உள் பொருள்களுக்கெல்லாம் உள்பொருள் உண்மைகளின் உண்மை, 4 எல்லையற்ற தன்மை: இறைவன் காலஇடங்களையும் கடந்து நிற்பதால் எல்லையில்லாதவன்; 5. தூய்மை இயலுலகச் சார்பான இன்பம், துன்பம், பசி, தாகம், வயது முதிர்ச்சி, இறப்பு போன்ற குறைகளற்று என்றும் தூயவடிவினனாக இறைவன் இருக்கின்றான் என்பனவாகும்.

இறைவனின் சார்புடைப் பண்புகளை உலகத் தொடர்பான பண்புகள், உயிர்த் தொடர்பான பொதுப்பண்புகள். உயிர்த்தொடர்பான சிறப்புப் பண்புகள் என மூவகைப்படுத்துகின்றார் இராமானுசர்,

இறைவன் உலகின் பொருள் மற்றும் அறிவுக்காரணமாக இருந்து உலகைப் படைப்பதுடன், அதனைக் காப்பவனும், ஊழிக் காலத்தில் அனைத்தையும் உள்வாங்குபவனும் ஆவான். உலகத் தொடர்பாக பின்வரும் ஐவகைப் பண்புகள் இறைவனுக்குண்டென்று இராமானுசர் கூறுகின்றார். 1. தன்னிடத்தே அனைத்தையும் தாங்கிக்கொள்ளும் ஆற்றல் (பலம்) 2. உலகின் மாற்றங்களுக்குட்படாது நிற்கும், நிலை (வீரியம்): 3. எதனையும் தான் விரும்பியவாறு செய்யும் வல்லமை (சக்தி): 4 அனைத்தும் தனது உடைமையாக தன்கட்டுக்குள் வைத்திருக்கும் திறன் (ஐசுவரியம்): 5. இறைவனின் எண்ணம் விருப்பம் ஆகியவற்றை எதனாலும் தடை செய்ய இயலாத நிலை என்பனவாகும்.

உயிர்த்தொடர்பான இறைவனின் பொதுப் பண்புகளாவன: 1. உயிர்களின் அனைத்துச் செயல்களுக்கும் முன் அனுமதி அளிக்கும் இயல்பு, 2. உயிர்களுக்கு அவற்றின் வினைப்பயன்களை அளிக்கும் இயல்பு, 3. அனைத்துயிர்களுக்கும் தன் இனிய இயல்பை விளக்கும் தன்மை (மாதூரியம்), 4. கருணை வடிவு (காருண்யம்), 5. தன்னைப் பற்றியவர்களுடன் என்றும் கூடியிருக்கும் இயல்பு (மார்தவம்), 6 நேர்மையியல்பு (ஆர்ஜவம்), 7. அன்புநெறிப் பட்டவர்களின் குறைமறக்கும் தன்மை (சாதுரியம்), 8. அனைவராலும் எவ்வகைப் பிரிவுமின்றி விரும்பப்படும் இயல்பு (காமியம்), 9. அனைவரிடத்தும் பரிவு காட்டும் பண்பு (வாத்சலயம்), 10. நல்லெண்ணம்-நல் உள்ளம், நட்பு உடையனவாம் தன்மை (சௌகார்தம்)

உயிர்த்தொடர்பான இறைவனின் சிறப்பியல்புகள் 1. தான் மிக உயர்ந்த பொருளாயினும் எத்துணை தாழ்ந்த நிலையுடையவரிடத்தும் யாதொரு வேறுபாடின்றி ஒருங்கே கலந்து பழகித் தண்ணளிபுரியும் இயல்பு (சௌசீல்யம்) 2. எச்செயலையும் உறுதியுடன் செய்யும் இயல்பு (சாதைரியம்) 3. வீரம் (சௌர்யம்) 4 தலைமைப் பண்பு (பராக்கிரமம்) 5 நன்றி பாராட்டும் இயல்பு (கிருதஞாதி), 6. புகலடைந்தோரைக் காக்கும் இயல்பு (சரண்யாதி) 7. மனஉறுதி அல்லது வாக்குறுதிகளை நிறைவேற்றும் இயல்பு (தைரியம்), 8 துன்பத்தை நீக்கும் இயல்பு (ஆர்தி ஆராதி), 9. அனைத்தையும் விட உயர்ந்த ஒளியியல்பு (தேஜஸ்), 10. அனைவரும் தன்னைப் பற்றிக்கொள்ள எளியனாக இருக்கும் இயல்பு (சௌலப்பியம்), 11. பெருந்தகைமைப் பண்பு (ஔதார்யம்)

இத்தகைய பண்பு நலன்கள் பெற்றிருக்கும் இறைவனது திருமேனியும், அவனது திருவிடமும் தூய ஒளியினால் ஆனவை இறைவனது திருவிடம் நித்திய விபூதி என்றழைக்கப்படுகிறது பரம்பொருளாகிய இறைவனை, விட்டுணுவை, திருமாலை, வைணவர்கள் பகவான் என்று அழைக்க விரும்புகின்றனர். பகவான் என்னும் சொல்லின் பகுதியாகிய 'பக்' என்பது ஆறு பண்புநலன்களைக் குறிக்கும் வைகுந்தத்தில் உறையும் பகவான் ஏந்தியுள்ள வளைநரலும் வட்டத்திகிரியும் (சங்கு, சக்கரம்) முறையே அறிவையும் (ஞானம்) ஆற்றலையும் (சக்தி) குறிக்கும். வளைநரலால் தீவினையைத் தொலைக்கின்றான்; வட்டத்திகிரியால் அறியாமையை அழிக்

கின்றான். அவனது அருட்கரம் (அபயஉறஸ்தம்) பரிவையும். (வாத்சல்யம்), திருமுடி தலைமைப் பண்பையும் (சுவாமித்துவம்), திருமுகமும் புன்முறுவலும் மக்களோடு கலந்து நுகரும் சீலத்தையும் (சௌசீலயம்). திருவடி, காட்சிக்கெளிமையையும் (சௌலப்பியம்) குறிப்பதாகக் கருதுவர். பகவான் ஏந்தியுள்ள வாள் ஆறிவாற்றலை யும், தாமரை மலர் பிரபஞ்சத்தின் பல நிலைகளையும் தண்டு (கதை), வில் (சார்ங்கம்), மார்பில் அணிந்துள்ள மணி (கௌசுதுபம்); மார்பிடைத் துலங்கும் மடந்தை (சிரீவத்சம்) முதலியவை இறை வனின் தூய (திவ்விய) தன்மையை எடுத்துக் காட்டுவனவாகும்.

*பண்புகளற்ற பிரம்மன் என்பதன் மறுப்பு:* பரம்பொருளாகிய பிரம்மனை அனைத்து நிலைகளிலும் பண்புகள் உடையவராகவே (சகுணனாகவே) விசிட்டாவைதம் கருதுகிறது. பிரம்மன் பண்புகளற் றவன் (நிர்குணன்) என்று கருதும் அத்வைதக் கோட்பாட்டினை இராமானுசர் திறனாய்வு செய்து பின்வருமாறு அதனைக் கண்டனம் செய்கின்றார்

அத்வைதிகள் பிரம்மனைப் பண்பற்றதன் ஒளியும், கட்டற்றது மான உணர்வும் என்கின்றனர். இருப்பினும் கட்டுண்டதாக அது தோன்றுகிறது. உண்மையான அறிவாகிய 'அதுவாக நீ இருக்கி றாய்' (தத்துவமசி) என்ற உணர்வு ஏற்பட்டவுடன் உயிர் தன்னைப் பிரம்மனாக உணரும். அந்நிலையில் அனைத்து வேறுபாடுகளும், ஆசிரியர், நூல். கற்போன் மற்றும் நூல் கொண்டு கற்ற அறிவு ஆகியவையும் தோற்றங்கள் என்பது உரைப்படும் என்கின்றது அத் வைதம்.

இதனை மறுத்து இராமானுசர் இறைவன் பண்புகளுடையவன் என்பதனை நிலைநிறுத்துகின்றார். சாந்தோக்கிய உபநிடதம் "அது பலவாக எண்ணியது. அனைத்தும் அதிலிருந்து தோன்றி, அதிலேயே தங்கி அதனையே பற்றிநின்றன" என்று குறிப்பிடுகின்றது. இக் கூற்றில் 'அது' பிரம்மனைக் குறிக்கும். எனவே பிரம்மன் படைத்துக் காத்து அழிக்கின்றார், என்பது பெறப்படுவதுடன் இவற்றிற்குரிய முற்றறிவு, அனைத்தாற்றல், அனைத்திறைமை கொண்டவராகவும் விளங்குகின்றார் என்பதுவும், அதற்கு இணை எதுவுமில்லை என்ப துவும், அனைத்தையும் வீடுபேற்றடையச் செய்யும் விருப்பமுடைய வர் என்பதுவும் தெளிவாகும். பிரம்மன் பண்புகளற்றவரெனின் இப் பண்புகளும் இன்னபிறவும் பொருளற்றவையாகிவிடும்.

அத்வைதிகள் பிரம்மன் மட்டுமே உண்மை; படைக்கப்பட்ட உலகம் தோற்ற நிலையானது என்கின்றனர். இராமானுசர் "பயனாகிய உலகம் தோற்றமெனில் உபநிடதக் கூற்றான 'ஒன்றினை அறிந்தால் அனைத்தையும் அறிந்ததாகும்', பிரம்மன் அறியப்பட்டால் அனைத்தும் அறியப்பட்டவையாகும்' என்பது பொருளற்றதாகிவிடும் மேலும் உலகு தோற்றமெனில் அறிவதற்கெதுவுமில்லை என்றாகும். அனைத்தும் என்று குறிப்பிடப்படும் உலகத்தையும் உண்மை என்று ஏற்றாலே இக்கூற்று பொருளுடையதாகும் என்று கூறுகின்றார்.

சில உபநிடதங்கள் பிரம்மன் பண்புகளற்றது எனக் குறிப்பிடுகின்றன. முன்னம் இது மட்டும் உண்மையிலிருந்தது' எனச் சாந்தோக்கியமும்; "இரண்டற்ற ஒன்றாக இது மட்டுமே இருந்தது உண்மை, உணர்வு எல்லையற்றதே பிரம்மன்" எனத் தைத்திரீயமும், "பகுதிகள், செயல்கள், பண்புகளற்றதே பிரம்மன்" என சுவேதாசுவரமும் சுட்டுகின்றன இவையனைத்திலும் 'இது' என்பது படைக்கப்படாத உலகைக்குறிப்பதாகும் என இராமானுசர் கூறுகின்றார். பிரம்மன் உலகின் பொருட்காரணமாகிய பிரகிருதியுடனும், சித்தாகிய உயிர்களுடனும் காரணநிலையில் இருப்பதை இக்கூற்றுக்கள் சுட்டுகின்றவே அன்றி பிரம்மன் பண்புகளற்றது என்பதனை அல்ல பிரம்மன் காரணநிலையிலும் பயன் நிலையிலும் பண்புகளுடனே விளங்குகின்றது. படைப்புச் செயலில் பிரம்மனின் பண்புகளிலே மாற்றம் நிகழ்கின்றது. 'பிரம்மன் மாறாத பொருளாகும். இத்தகைய பிரம்மன் இரண்டல்லாதது' எனக் குறிப்பிடப்படுவது அதற்கு இணையான வேறெதுவும் இல்லை என்பதற்காம்.

மேலும் இவ்வுலகுக்கு பிரம்மனுடன் உள்ள தொடர்பு, உடலுக்கும் உயிருக்கும் உள்ள தொடர்பினைப் போன்றதே எனக் கருதுகின்றார். இதற்குச் சான்றாக 'எவன் ஆன்மாவில் உறைகின்றானோ', 'எதனுடைய உடலாக இந்த ஆன்மா விளங்குகிறதோ', எதனுடைய உடலாக இப்பூமியிருக்கின்றதோ போன்ற பிருகதாரணியக உபநிடதக்கூற்றுக்களைச் சுட்டுகின்றார். உயிர்களையும், பொருள்களையும் உடைய இப்பிரபஞ்சம் பிரம்மனின் உடலாக விளங்குகின்றது "அது நீயாக இருக்கின்றாய்" என்றும் உபநிடதக் கூற்றில் 'நீ' என்பது பிரபஞ்ச உடலில் உள்ளுறையும் காரியப் பிரம்மனையும். 'அது' என்பது பிரபஞ்சத்தின் காரணப் பிரம்மனையும் குறிக்குமென்றும் காரியப்பிரம்மனும், காரணப் பிரம்மனும் தம்

இயல்பில் ஒன்றே என்பதே இக்கூற்றின் பொருளாகுமே தவிர அத்வைதிகள் கருதுவது போன்று வரம்பற்ற உணர்வாகிய பிரம்மனும், வரம்புடைய உணர்வாகிய உயிரும் ஒன்று என்பதல்ல'' என இராமானுசர் கூறுகின்றார்

அத்வைதிகள் 'புனித நூல்களில் பிரம்மன் பண்பற்ற உணர்வு என்று மட்டுமே குறிப்பிடுவதால் பிரம்மன் பண்புகளற்றவன் என்கின்றனர் ஆனால் இராமானுசர் உணர்வைப் பிரம்மனின் ஒரு பண்பு என ஏற்கின்றார் பிரம்மன் உணர்வுடன் மட்டுமே ஒன்றாயிராமல் அதனைக் கடந்தும் இருப்பதாகும். பிருகதாரணியக உபநிடதம்' பிரம்மன் முற்றறிவும், அனைத்தையும் பரவி நிற்கும் இயல்புகளையும் கொண்டதாகக் கூறுவதுடன் பிரம்மனின் 'தொடர்ந்த ஆற்றலுடன் கூடிய செயல் தன்மை உள்ளார்ந்த நிலையில் உள்ளதாகவும், அது பலவாறானது' என்றும் குறிப்பிடுகின்றது உணர்வுடன், உண்மை, தூய்மையான மகிழ்ச்சியும் பிரம்மனுக்குக் குறிப்பிடப்படுவதானது பிரம்மன் பண்புகளுடையது என்ற முடிவிற்கே செலுத்தும், பிரம்மன் பண்புகளற்றது எனச் சுட்டுவது அதனிடம் பொருள்களுக்குரிய பண்புகள் இல்லை என்பதாம்

அத்வைதிகள் பண்புகளற்ற பிரம்மன் 'தன் ஒளியானது' எனவும் இத் 'தன் ஒளியே' அதனிடம் எப்பண்பும் இல்லை என்பதனை விளக்கும் என்றும் கூறுகின்றனர் இதற்கு மறுப்பாக இராமானுசர் அனைத்துப் பண்புகளையும் பிரம்மனிடமிருந்து ஒதுக்கி விட்டாலும், தூய உணர்வாகிய பிரம்மனிடத்து தன் ஒளிப்பண்பு உள்ளதாகின்றது; 'தன் ஒளியாகிய ஒரு பண்பு பிரம்மனுக்கு உண்டென்று ஏற்பதற்கும், பிற பண்புகளாகிய வரம்பற்ற தன்மை, உண்மை, மகிழ்ச்சி போன்றவையும் பிரம்மனுக்குண்டென்று ஏற்பதற்கும் வேறுபாடில்லை' எனக் கூறுகின்றார்.

பாதராயனார் தனது பிரம்ம சூத்திரம் என்றும் உரை நூலில் பிரம்மனை எல்லைக்குட்பட்டதாக்கும் பண்புகள் பிரம்மனுக்குரியதாகக்கூடாது என்று கூறுகின்றார் அத்தகைய பண்புகளையே மறுக்கின்றார். பிரம்மனிடம் பலவாந்தன்மை இல்லையென்பது பிரம்மனைச் சாராது தனித்த இருப்புடையவை இல்லை என்பதாகும். பலவாந்தன்மை பிரம்மனிடத்து இல்லை எனக்கூறுவது பிரம்மன் மட்டுமே ஒரே இறைவன் என்ற நம்பிக்கைக்கு வலுவூட்டுகின்றது.

அத்வைதிகள் பண்பற்ற உணர்வாகிய ஒரே உள்பொருள் அறியாமையினால் பலவாகத் தோன்றுகிறது என்கின்றனர். இக் கருத்து பின்வரும் காரணங்களினால் ஏற்புடையதல்ல என்கிறார் இராமானுசர். அறியாமை அல்லது மறைத்தல் என்பது ஒளித் தன்மை உண்டாவதைத் தடுத்தல் அல்லது ஒளித்தன்மையை இல் லாது செய்தல் என இருவகையில் பொருள்படும். பிரம்மனிடத்து ஒளித்தன்மை உண்டாவதில்லையாதலால், மறைத்தல் என்பது பிரம் மனின் தன் ஒளியை இல்லாமல் செய்தலாகும் என்றே பொருளாகும். அந்நிலையில் பிரம்மனே இருப்பில் இல்லாதொழிவதால் எவ்வாறு அது பலவாகத் தோன்றும். இதன் தொடர்பாக அத்வைதிகள் மேலும் இரு முரணான கூற்றுகளை அளிக்கின்றனர். பிரம்மனின் தன் ஒளியை அவித்தை பாதிக்காது என்பது ஒன்று; அவித்தையினால் ஒன்றான பிரம்மன் பலவாகத் தோன்றுகின்றது என்பது மற்றொன்று, முன்னது அவித்தை பிரம்மனைப் பாதிக்காது என்றும் பின்னது அவித்தை பிரம்மனைப் பாதிக்கும் என்றும் கூறுகின்றது.

அத்வைதிகளின் கருத்துப்படி சீவ பிரம்ம ஒருமையறிவு அவித்தையை நீக்கும். இராமானுசர் இக்கருத்தையும் எதிர்க்கின்றார். திரிபு நீக்கம் அடிப்படையின் ஒரு பகுதி எனில், திரிபை நீக்க எடுக் கும் முயற்சி பயனற்றதாகும். அது பிரம்மனிலிருந்து தனித்ததெனில் எந்த அளவு முயற்சியும் அதனை நீக்கவல்லதல்ல எனபதாகும் மேலும் அவித்தையை நீக்கும் அறிவின் தன்மையும் அவித்தையின் தன்மையாகும். அவித்தையியல்பு கொண்ட அறிவு அவித்தையை நீக்குவது எங்ஙனம்?

''இயலுகைத் தோற்றமென அறிவது யார்?'' என்ற வினா வெழுப்புகின்றார் இராமானுசர். அது பிரம்மன் எனில் பிரம்மன் அறிவான் என்றாகும். பிரம்மன் அறிவான் எனில் அறியும் பண்பு பிரம்மனுக்குரியதாகும். எனவே பிரம்மன் பண்புடையது என்றாகும். அறிவான் பிரம்மன் இல்லாது. அதன்மீது திணிக்கப்பட்ட ஒன்று எனில் திணித்தலியல்பும், அதன் காரணமாகிய அவித்தையும் தொடர்ந் திருப்பவையாக அத்வைதிகள் ஏற்க நேரிடும்.

அத்வைதிகள் மறை நூல்களையும் தோற்றயியல்பு கொண்டவை என்கின்றனர். எனவே தோற்ற நிலை கொண்டவற்றிலிருந்து பெறும் அறிவும் அத்தன்மையதேயாகும். எனவே அத்வைதிகள் மறை நூல்

களையும் அவைதரும் அறிவையும் உண்மை எனக் கருதவேண்டும் அல்லது அவைகளைத் தமது கூற்றுகளுக்கு அடிப்படையாகக் குறிப்பிடுவதைத் தவிர்க்க வேண்டும். மறைநூல்களில் எச் சொல்லும் அல்லது சொற்றொடரும் பிரம்மனிடத்திலிருந்து அதன் பண்புகளை நீக்குவதாகவோ அல்லது நீக்குவதை நோக்கமாகவோ கொண்டிருக்கவில்லை என இராமானுசர் கருதுகின்றார்.

பரம்பொருளாகிய பிரம்மன், இறைவன் பண்புகளற்றவன் என்று கருதும் அத்வைதிகளின் கூற்றுக்கு எதிராக இராமானுசர் கூறும மறுப்புரைகள் இறைவன் எஞ்ஞான்றும் பண்புநலன்களுடன் கூடியவன் என்பதை உறுதியாகத் தெரிவிக்கின்றன. இதனடிப்படையிலேயே இறைவனின் பல்வேறு பண்புநலன்களை விசிட்டாத்வைதம் வியந்தோதுகின்றது.

*இறைவனின் ஐவகை வடிவநிலைகள் :*

பரம்பொருளாகிய பிரம்மன் ஆள்சார்புடைய விட்டுணுவாக, திருமாலாக வழிபடப்படும் பொழுது ஒரு குறிப்பிட்ட வடிவம், ஒரு குறிப்பிட்ட பெயர் முதன்மையாகக் கொள்ளப்படுகிறது. இறைவனின் வடிவங்களாக பாகவத மரபு பின்வருபனவற்றைக் குறிப்பிடுகின்றது. அவைகடந்த வடிவநிலை (பரத்வம்), வெளிப்பாட்டு வடிவநிலை (வியகம்), தோன்றிவந்த வடிவநிலை (விபவம்), உள்ளுறை வடிவநிலை (அந்தர்யாமித்வம்), படிமவடிவநிலை (அர்ச்சை) என்பனவாகும் விசிட்டாத்வைதத்தை வழங்கிய இராமானுசர் இவற்றில் வெளிப்பாடு வடிவநிலையைக் குறிப்பிட்டாலும், அதன் வகைகளை விரித்துரைக்கவில்லை.

கடந்த வடிவநிலை :– இறைவன் தூய்மையான ஒளிப்பொருளால் ஆன திருமேனியுடனும் அதற்குரிய படைக்கலங்கள், அணிகலன்களுடனும் அறுவகைப் பண்புகளுடனும், அதே தூய்மையான ஒளிப்பொருளால் ஆன வைகுந்தம், பரமபதம், திவ்ய விபூதி, மோட்ச உலகம் என்றெல்லாம் அழைக்கப்படும் கடந்த நிலை உலகில் விளங்கும் நிலையினையே கடந்தவடிவநிலை (பரத்துவம்) என்றழைக்கப்படுகின்றது. இவ்வடிவில் இறைவன் வாசுதேவன் என்றழைக்கப்படுகின்றார். இறைவன் தன் வடிவத்தால் எங்கும் பரவி நிற்கும் நிலையாகும் இது)

வெளிப்பாட்டு வடிவநிலை : இறைவனின் வெளிப்பாடு உலகு தொடர்பு பற்றியதாகும். வாசுதேவன் சங்கர்சணன், பிரதியும்னன், அநிருத்தன் என்பவை கடந்த வடிநிலை வாசுதேவனின் (பரவாசு தேவன்) வெளிப்பாடுகள் ஆகும். இவற்றை இறைவனின் நான்கு வெளிப்பாடுகள் (சதுர்வியகம்) எனக் குறிப்பிடுவர். இவ்வெளிப்பாடுகள் முறையே ஒளி உலகம் (சத்யலோகம்), விட்டுணுவின் மூவுலகங்களான ஆமோதம், புவனம், பிரமோதம் ஆகியவற்றில் விளங்குபவை இயலுலகம் படைக்கப்படுதல். இருத்தல், அழிக்கப்படுதல் ஆகிய மூன்று நிலைகளையுடையது. கடந்த நிலை இறைவன் இம்முத்தொழில்களைப் புரிய முதலில் வாசுதேவ வடிவில் வெளிப்படுகின்றார். வாசுதேவனிடத்திலிருந்து படைத்தல் தொழில் புரிய பிரதியும்னனும், அதிலிருந்து காத்தல் தொழில் புரிய அநிருத்தனும், அதிலிருந்து அழித்தல் தொழில்புரிய சங்கர்சணனும் வெளிப்படுகின்றனர். இறைவனாகிய வாசுதேவனிடம் அறிவு, பலம், ஐசுவரியம், வீரியம், சக்தி, தேசசு ஆகிய ஆறு பண்புகள் விளங்கினாலும், சங்கர்சணனிடம் அறிவும் பலமே அடங்கியுள்ளன. உலகிற்கு மெய்யறிவு புகட்டுதலும், உயிர்களை கவனிக்கும் பொறுப்பும், ஊழிக்காலத்தில் உலகை அழித்தலும் சங்கர்சணனின் பணிகள் ஆகும். பிரதியும்னனிடம் ஐசுவரியமும், வீரியமும் அடங்கி அறத்தை நிலை நாட்டுவதிலும், தூய ஒளிப்பொருள்களைப் படைப்பதிலும், நால்வகை சமூகப் பிரிவைச் சீரமைப்பதிலும் பங்குபெறுகின்றன அநிருத்தனிடம் சக்தியும் தேசசும் அடங்குவன. உலகில் அறிவொளியை ஏற்றுதலும், அதனைக்காத்தலும், கலப்பான படைப்புக்களைக் செய்தலும் இவனது பணிகளாகும்.

விட்டுணு, புருசன், சத்தியன், அச்சுதன், அநிருத்தன் எனும் ஐவகை இறைவெளிப்பாடும் குறிப்பிடப்படுவதுண்டு. வாசுதேவன் பரம்பொருளாயினும் தன் விருப்பத்தைக் காரணமாகக் கொண்டு சங்கர்சண, பிரதியும்ன, அநிருத்த வடிவங்களைப் பயன்களாகத் தன்னிலிருந்தே வெளிப்படுத்துகின்றான். வாசுதேவன் மேலான உயிர் எனில், சங்கர்சனின் தனித்த உயிர்; பிரதியும்னன் மனம்; அநிருத்தன் 'தான் எனும்' எண்ணமாகும். உலகின் தொடர்பாக இறைவன் இவ் வடிவங்களில் வெளிப்படினும் அவன் ஒருவனேயாம் உள்பொருள்.

ஆகம இலக்கியங்கள் பன்னிரு இறை வெளிப்பாடுகளை குறிப்பிடுகின்றன. வாசுதேவனின் வெளிப்பாடுகளான கேசவன், நாராய

னன், மகாதேவன், சங்கர்சணனின் வெளிப்பாடுகளான கோவிந்தன் விட்டுணு, மதுசூதனன்; பிரதியும்னனின் வெளிப்பாடுகளான திரிவிக்கிரமன், வாமனன், சிரீதரன், மற்றும் அநிருத்தனின் வெளிப்பாடுகளான இருடிகேசன், பத்மநாபன், தாமோதரன் என்பனவாகும்.

தோன்றி வந்த வடிவநிலை : இந்நிலையை அவதார வடிவ நிலை எனவும் குறிப்பிடுவர். இறைவன் தனது விண்ணுலகிலிருந்து கீழிறங்கி மண்ணுலகில் தோன்றி வடிவு கொள்ளும் நிலையே அவதாரம் அல்லது விபவம் எனப்படுகிறது. அவதாரம் என்பது இறைவன் இயலுலகிற்கு இறங்கிவர எடுத்துக் கொள்ளும் வடிவத்தைக் குறிப்பிடும் இயலுலகில் இறைவன் தோன்றி வடிவெடுப்பினும் அவ்வடிவமும் தூய ஒளிப்பொருளால் ஆனதேயன்றி பிரகிருதப்பொருளால் ஆனதல்ல. எனவே பிரகிருதப்பொருளுக்குரிய குறைகள் இறைவனின் தோன்றிய வடிவிற்குக் கிடையாது. வெளிப்பாட்டு வடிவநிலை உயிர்களின் தொடர்புடையதாகும். விண்ணுலகம் திவ்விய விபூதி எனப்படுவதைப் போன்று. இறைவனின் திருவிளையாடலுக்கிடமான இம்மண்ணுலகை லீலா விபூதி எனக் குறிக்கப்பெறும்.

இறைவன் தோன்றிவந்து வடிவெடுப்பதன் முதன்மையான நோக்கம் செவ்வியோர்க்கு அருளுதலேயாகும். தூய்மையான வாழ்க்கையை மேற்கொண்டு உயர்ந்த வழிபாட்டு நிலையையடைந்தவர், இறைக்காட்சியைப் பெறாது வாழ்தலில் பயனில்லை என்ற முடிவுக்கு வருவாரேயாயின் அப்பொழுது இறைவன் தோன்றி அவரின் இறைப் பிரிவுத் துன்பத்தை நீக்குகின்றான். துருவன் முன்பு இறைவன் தோன்றியதை இங்குக் குறிப்பிடலாம்

இறைவன் தோன்றி வடிவெடுப்பதன் இரண்டாவது நிலை நோக்கமாகவே கொடியோரைத் தெறுதல் கருதப்படுகின்றது. இதற்கு வேழவேந்தனது வீடு பேற்றைக் (கசேந்திரமோட்சம்) குறிப்பிடலாம். வேதத்தின் கடமையை (தருமம்) நிலைநாட்டலும் ஒரு நோக்கமாகக் குறிப்பிடுவதுண்டு.

இறைவன் மண்ணுலகில் தோன்றுவது பழவினைகளின் பொருட்டல்ல; தன்விருப்பத்தின் பொருட்டேயாகும். எனவே இவ்வடிவம் உண்மையானது. ஒளி உடலானது. இந்நிலையிலும் கடந்த தன்மைகளும் அனைத்தையும் பரவி நிற்கும் நிலையும் உண்டு. இறைவனுடன் அவனது அருளாகிய இலக்குமியும், அவனது படைக்கலன்களும்,

மணிமுடியும், ஊர்தியும் கூடவே தோன்றிவந்து வடிவெடுக்கின்றன. இறைவனே தோன்றிவந்து வடிவெடுப்பதை நேர் தோன்றிய வடிவம் (சாட்சாத்அவதாரம்) என்றும், அவனது பகுதிகள் உடன் தோன்றி வந்து வடிவெடுப்பது பகுதி தோன்றிய வடிவம் (அம்ச அவதாரம்) எனவும் வகைப்படுத்துவர். தோன்றி வந்து வடிவெடுத்தவையின் எண்ணிக்கை பற்றிப் பலவாறு கூறப்படுகின்றது. சிரீநிவாசதாசர் தச அவதாரங்களையும், இராமானுசர் முப்பத்தொன்பது அவதாரங்களை யும் குறிப்பிடுகின்றனர்.

உள்ளுறை வடிவநிலை: இறைவன் உயிர்களையும் உலகை யும் பிரிக்க வொண்ணாத உடலாகப் பெற்றவன். உடலில் உயிர் உட்கலந்து இயக்கியும் இயக்குவித்தும் இருப்பதைப் போன்றே இறைவன் உயிர்களிடத்தும் உலகிடத்தும் கலந்து இயங்கியும் இயக் குவிக்கவும் செய்கின்ற இந்நிலையே உள்ளுறை வடிவநிலை எனப் படுகின்றது.

படிமவடிவநிலை: இது வழிபடுற்குரிய வடிவம் ஆகும். வழி படும் அன்பர்களுக்கு எளிவந்து அருள் செய்வதன் பொருட்டு திருக் கோயில்களிலும் இல்லங்களிலும் அவர்களின் விருப்பத்திற்கிசைந்த வடிவில் எழுந்தருளச் செய்துள்ள வடிவங்களில் இறைவன் தங்கியிருப் பது படிமவடிவநிலையாகும். இவ்வடிவில் இறைவன் வழிபடும் அன் பர்களைச் சார்ந்து நிற்கின்றது. இவ்வடிவங்களை அமைக்கும் முறை இவற்றை வடிக்கப்பட வேண்டிய உலோகம், நிறுவப்படும் இடம், மற்றும் வழிபடும் முறை, ஆகியவற்றை ஆகமங்கள் தெளிவாக விளக்குகின்றன இவ்வடிவங்கன் அன்பர்களின் உள்ளத்தில் உணர் வார்த்தையும் (ருசிசதகத்வம்), பெருமகிழ்ச்சியையும் (சுபாச்ரயத்வம்), ஏனையோரிடத்தும் அன்பைப்பாய்ச்சி வளைத்தலையும் (அசேசலோக சரண்யத்வம்), மனத்தை ஒருமுகப்படுத்திச் சித்தனை செய்ய இசை வாக இருக்கும் இயல்பினையும் கொடுக்கின்றன.

வைணவ மரபு இறைவனின் படிமவடிவ நிலைகளை இருபத்து நான்காக வகுப்பினும், இறைவனின் நின்ற திருக்கோலம், இருந்த திருக்கோலம், கிடந்த திருக்கோலம் என மூன்றாகவே பாகுபடுத்திச் சிந்திப்பர் வைணவர்.

இறைவனின் ஐவகை வடிவங்களை முறையே வானத்திலுள்ள மேக நீர் (சீமூதசலம்), பருகற்கியலாக் கடல் நீர் (சாகரசலிங்கம்),

ஓடிக் கழிந்த ஆற்றுநீர் (சரித்சலிலம்), பெருகுகின்ற கிணற்றுநீர் (கூபபயசு), அள்ளியெடுத்துப் பருகுவதற்கேற்ப நிறைந்து நிற்கும் குளத்து நீர் (வாபபயசு) என ஒப்பிட்டுப் பேசுவர்.

*இறையருள் :*

இறைவனது அருளே அவன் வடிவங்களுக்கெல்லாம் அடிப்படையாகும். இவ்வருள் நல்லோரைப் பேணுதல், தீயோரை அழித்தல் என்னும் இரு வகைகளில் செயல்படுகின்றது தோன்றிவந்த வடிவை விளக்கும்பொழுது விண்ணுலகின் நித்திய சூரிகளைப்போன்று லீலா விபூதியாகிய மண்ணுலகிலுள்ளவ்ரும் தன்னை நுகர்வதன் பொருட்டே இறைவன் இவ்வடிவை ஏற்கிறான் என்பர். உயிர்களை நோக்கிவரும் திருவருளை இரண்டு நிலைகளில் விளக்குவதுமுண்டு இறைவன் பேரருளாளராயினும் அவனருள் அன்பு செலுத்துவோரிடமே செல்லும் என்பது ஒரு கருத்து பிறிதொன்று அவனருள் அனைவரிடத்தும் ஒரே நிலையில் செல்லுமென்பதாகும். இறைவனருளே அனைவரையும் உய்விக்க வல்லது. உய்விற்கு இறையருளை வழியாகக் கொள்வது பாஞ்சாரத்ர நெறி எனக் குறிப்பிடுவர்

இறைவனது அருள் அவனது ஆற்றலாக, திருமகளாக, மகா இலக்குமியாக விளங்குகின்றது. இலக்குமிக்கு பத்மா, கமலா, அரிப்பிரியை, சிரீ, பெரிய பிராட்டியார் எனும் வேறுபெயர்களுமுண்டு. இறைவனாகிவ நாராயணன் தன் திருநாட்டில் மலர்மகளாகிய இலக்குமி, மண்மகளாகிய சிரீதேவி மற்றும் நீலா ஆகிய தேவியருடன் இருக்கினறார் என இம்மரபு கூறுகின்றது மூவருள் தலைமையானவள் இலக்குமியே. இறைவனின் அருளைக் குறிக்கும் கிருபை என்றொரு பெயரும் உண்டு. இலக்குமி எனப்படுவது அறிவு, செல்வம், இன்பம், நல்வாழ்வு, பொருள், தான்யம், வெற்றி ஆகியவற்றின் தலைவி என்பதாகும் பொன்னிற வடிவுள்ளவளாதலால் உருக்குமணி (உருக்கு - பொன்) இவள் தனது யோக ஆற்றலால் எட்டுவடிவங்களைப் (அட்ட இலக்குமி) பெறுபவள்.

பிருகு, கியாதி ஆகியோரின் மகளாய்த் தோன்றிய காலத்து 'சிரீ' என்றும், பாற்கடலில் தோன்றியதால் மகாஇலக்குமி எனவும், நாராயணனையும், பலராமனையும் முறையே அடைந்த காலத்து 'பத்மா', தரணி எனவும், இராமனையும், கண்ணனையும் அடைந்த காலத்து முறையே சீதை, உருக்குமணி எனவும் பெயர் பெற்றனள்.

சிரீசூக்தம் என்னும் உபநிடதப் பகுதி பதினைந்து இருக்குகளால் இவளது பெருமையைப் பேசுகிறது. ஒவ்வொரு பலனை நாடி ஒவ்வொரு இருக்குவை ஓதுவதுமுண்டு. திருமால் அரி எனில் திரு மகள் அரிணி ஆவாள். பில்வமரத்தில் உறைவதால் இவள் பில்வ நிலயா என்ற பெயரையும், அம்மரம் சிரீமரம் எனவும் பெயர் பெற்று விளங்குகின்றது.

'சிரீவைணவ மரபில் திரு என்ற அடைமொழியற்ற சொற்கள் அரிது' என்பதிலிருந்து இறையருளாக விளங்கும் திருமகளின் சிறப்பு விளங்கும். திருமால் என்ற சொல்லிலிருந்து 'திரு' நீங்கின் 'மால்' என்பது மயக்கம் என்றே பொருள்படும் அச்சொல் பொருளற்றதா கின்றது. மேலும் துவயமந்திரம் திருமகளையே அடிப்படையாகக் கொண்டது. அ-உ-ம் என்று பிரிக்கப்படும் ஓங்கார மந்திரத்தில் 'உ' திருமகளைக் குறிக்கும் 'அ' என்ற எழுத்து நாராயணனையும், 'ம்' எனும் எழுத்து உயிர்வகைகளையும் குறிக்கும். திருமகள் தனது இரு கைகளால் அவர்களைச் சேர்த்து வைப்பதிலிருந்து அவளது கருணை விளங்கும். பாஞ்சராத்திர ஆகமம், ''சிரீ'' என்ற பெயர் 'அடையப் படுபவள்; இறைவனை உயிரின் பொருட்டு அடைபவள்; உயிரின் குறைகளைக் கேட்பவள்; அவற்றை உயிரின் பொருட்டு இறைவனிடம் உரைப்பவள்; உயிரின் பாவங்களை ஒழிப்பவள்; உயிர்க்குப் பக்குவநிலையை உண்டு பண்ணுபவள் எனும் ஆறு பொருள்படும்'' எனக் கூறுகின்றது. திருவருளான திருமகளின் பெருமையை முற்றும் உணர்தல் அரிதாகும்.

விசிட்டாத்வைத மெய்ப்பொருளியல் இவ்வாறு உபநிடதப் பரம் பொருளையும் பாகவத நெறியின் இறைக்கொள்கையையும் தனது இறையியலில் இணைத்துக் கூறுகின்றது. மெய்ப்பொருளி யலின் முடிநிலைப் பொருளைச் சமயத்தின் முடிநிலைப் பொருளுடன் முற்றொருமைப் படுத்தியதால் விசிட்டாத்வைதம் சமய மெய்ப்பொரு ளியல் என்ற சிறப்புப் பெயர் பெறுகின்றது. இம் முற்றொருமைப் படுத்திய முயற்சியானது துன்பச்சுழலில் சிக்கித் தவிக்கும் உயிர் களுக்கு உயர்ந்த ஆறுதலைத் தருவதாக அமைந்துள்ளதே விசிட் டாத்வைதத்தின் சிறப்பெனலாம்.

### ஆ) சித்து அல்லது உயிர்க்கோட்பாடு

சித்து என்பது உணர்வுப் பொருளான (Conscious substance) உயிரை அல்லது ஆன்மாவைக் குறிக்கும். விசிட்டாத்வைதத்தின்

மூவிருப்புக்களில் ஒன்றான சித்தும் இறைவனுடன் பிரிக்க வொண்ணாத நிலையில் இணைந்திருக்கும் பொழுது சீவன் என வழங்கப் பெறும்.

விசிட்டாத்வைதம் உயிரை வேறுபாட்டியல்பிலும் உடன்பாட்டியலிலும் விளக்குகிறது. உயிரின் வேறுபாட்டியல்பு விளக்கம், உயிர் அறியாமையினால் தன்னை இயற்கைப் பொருள்களுடன் ஒன்றுபட்ட நிலையில் உணர்கின்ற அனைத்தினின்றும் வேறுபடுத்திக் காட்டுகின்றது. விசிட்டாத்வைதம், சீவனை உடல், புலன் உறுப்புக்கள், மனம், இன்றியமையாத காற்றுகள் அல்லது மன-உடல் உறுப்புடன் முழுமையாக ஒன்றுபடுதல்லாததாகக் காட்டுகிறது. உயிர் உடலினின்னும் வேறுபட்டது என்பதை 'இது எனது உடல்' என்று உயிர் சுட்டுவதிலிருந்து அறியலாம். மேலும் உடல் பல பகுதிகளைக் கொண்டது. "உயிர் உடலுடன் ஒன்றுபட்டதெனில், உயிர் உடலின் அனைத்து உறுப்புக்களுக்கும் உரியதா? அல்லது சில உறுப்புக்களுக்கு உரியதா?" என்ற வினா எழுகின்றது. "உயிர அனைத்துறுப்புக்களுக்கும் உரியதெனில் ஒரே உடலில் பல உயிர்கள் உள்ளன" எனக்கருதவேண்டியிருக்கும். உயிர் சில உறுப்புக்களுக்கே உரியதெனில் உடலின் அவ்வுறுப்புக்களில் மட்டுமே உணர்விருக்கும். எனவே உயிர் உடலின்றும் வேறுபட்டு உடலின் அனைத்துறுப்புக்களிலும் பரவியிருக்கின்ற ஒரு உணர்வுப் பொருளாகும்.

உயிரைப் புலன் உறுப்புகளுடன் இணைந்த ஒன்றாகவும் கருதுதல் இயலாது. அவ்வாறு கருதினால் உடலின் கண்ணுள்ள ஐந்து புலன் உறுப்புகளைப் போன்று ஐந்து உயிர்கள் ஓர் உடலில் இருப்பதாகக் கொள்ள நேரிடும். மேலும் பார்வையற்ற மனிதன் தனது ஒரு உயிரை இழந்ததாகக் கூறுதல் பொருத்தமுடையதன்று. உயிரானது அறிவானாகவும் புலன் உறுப்புக்கள் அறிவதற்குத் துணை புரியும் கருவிகளாகவும் அமைந்துள்ளவையாதலால் உயிரைப் புலன் உறுப்புக்களெனக் கருதுதல் இயலாது.

அதே போன்று உட்புலனான மனமாகவும் உயிரைக் கருதுதல் இயலாது. ஏனெனில் வெளிப்புலன் உறுப்புக்களைப் போன்றே மனத்தையும் நினைவு மற்றும் கருதுதல் ஆகிய அறிவிற்குத் துணை புரியும் கருவியாக உயிர் பயன்படுத்திக் கொள்கிறது. மனமே உயிர் எனில் இவ்வுள் நிகழ்ச்சிகள் இயலாதவை ஆகிவிடும்.

உயிரை இன்றியமையாக் காற்றுகளுடன் ஒன்றானதாகவும் கூற முடியாது. ஏனெனில் இன்றியமையாக் காற்றுக்கள் ஐவகை யானதால் ஓர் உடலில் ஐவகை உயிர்கள் உள்ளன எனக் கருத வேண்டியிருக்கும். அதுவும் ஏற்க இயலாத ஒன்று.

உயிரை மன-உடல் உறுப்புடன் ஒன்றுபடுத்திப் பார்த்தல் இயலாது. ஏனெனில் உயிரைத் "தான்" எனவும் மன - உடல் உறுப்பை "எனது" எனவும் குறிப்பிடுகின்றோம். மேலும் ஆழ்ந்த உறக்க நிலையில் மன-உடல் உறுப்பு உணர்ச்சியற்றுள்ளது. ஆனால் உயிரைப்பற்றிய உணர்வு, தொடர்ந்த ஒன்றாகும். மன உடல் உறுப்பு பிறப்பிற்கும் இறப்பிற்கும் உட்பட்டது; உயிர் அழியாதது, நிலையானது. எனவே அழியக்கூடிய மன-உடல் உறுப்புடன் உயிரை ஒன்றெனக் கருதுவது ஏற்க முடியாததாகும். இவ்வாறு விசிட்டாத் வைதம் உயிரை அது சார்ந்துள்ள இயற்கைப் பொருள்கள் அனைத் திலிருந்தும் வேறுபடுத்திக் காட்டுகிறது.

உயிரின் உடன்பாட்டியல்பு விளக்கத்தில் உயிரின் சில இயல்பு கள் இறை இயல்புகளுக்கு இணையானவையென்றும், ஏனைய இயல்பு கள் உயிரின் தனித்த இயல்புகள் எனவும் கூறப்படுகின்றது. இறை வனுக்கும் உயிருக்கும் பொதுவான இயல்புகளாக அகவயத்தன்மை (பிரத்தியக்குவம்), உணர்வுத் தன்மை (சேதனத்துவம்), உயிர்த் தன்மை (ஆன்மத்துவம்), மற்றும் செயல்படும் தன்மை (கர்த்தத்துவம) ஆகியவை குறிப்பிடப்படுகின்றன. இறைவனும் உயிரும் அகவயத் தன்மை கொண்டவை என்பதில் இறைவன் உலகு மற்றும் உயிர் களில் உள்ளுறை நிலையில் விளங்குகின்றது என்பதுவும், உயிர் உடலில் மட்டும் உள்ளுறை நிலையில் விளங்குகிறது என்பதுவும் சுட் டப்படுகின்றது. உயிர் உணர்வை அடிப்படையாகக் கொண்ட பொரு ளாகும். உயிர் உடலின் உள்ளுறைக் கோட்பாடாகவும், அதனைத் தனது கட்டுப்பாட்டிற்குள் வைத்திருப்பதாலுமே ஆன்மா என வழங் கப்படுகிறது. இதே போன்று இறைவன் உயிரையும் உலகையும் தன் கட்டுக்குள் வைத்திருப்பதால் அதனையும் ஆனமா என்கிறோம் இறைவனைப் போன்றே உயிரும் தனது உடல், உறுப்புக்களைச் செயல்படுத்துவதால் செயல்பாட்டுத் தன்மை உடையதெனக் கூறப் படுகிறது. உயிரும் இறைவனைப் போன்று இறந்த, நிகழ் மற்றும் எதிர் காலங்களிலும் தொடர்ந்திருப்பதால் நிலையானது எனப்படு கிறது.

உயிரின் தனித்த இயல்புகளாக அணுவளவு, துணை நிலை (சேசத்துவம்), தாங்கப்படும் நிலை (ஆதேயத்துவம்), சார்ந்ததன் நிலை (விதேயத்துவம்), முன்னனுமதி பெற்ற செயல் நிலை (பராதீனகர்த்துவம்), கடந்த நிலைத் தன்மை (பரதந்திரத்துவம்), அசடத் தன்மை, தூய மகிழ்ச்சியுடைமை (ஆனந்தம்), புலன்களால் அறியப் படாத தன்மை (அவியக்தம்), சிந்தனைக்குட்படாத தன்மை (அசிந்த்யம்) போன்றவை குறிக்கப்படுகின்றன. உயிர் அணுவினளவு கொண்டதென விசிட்டாத்வைதம் கருதுகிறது. இல்லையெனில் உயிர் ஒரு உடலிலிருந்து ஏனைய உடல்களுக்குச் செல்வதை விளக்க முடியாது. உடலின் எல்லாப் பகுதிகளிலும் நிகழுகின்ற இன்ப துன்ப உணர்ச்சிகளை உயிர் நுகர்வதற்கு அதன் சிறு தன்மை தடையாக இருப்பதில்லை. எவ்வாறெனில் உயிரின் பண்பாகிய அறிவு சுருங்கிவிரிந்து இதனைச் செய்ய வல்லது.

உயிர் இறைவனின் ஒரு (அடிமைப்) துணைப் பொருளாகும். ஏனெனில் உயிர் முழுமையாக இறைவனால் தாங்கப்பட்டும், கட்டுப் படுத்தப்பட்டும், பயன்படுத்தப்பட்டும் இருக்கின்றது. உயிருக்குக் கட்டுப்பாடற்ற தனித்த இருப்பு இல்லையாதலால் அது இறைவனின் துணைப் பொருளாகும். உயிர் இறைவனால் தாங்கப்படுவதால் ஆதேயத்துவமும், உயிர் இறைவனை முழுமையாகச் சார்ந்திருப்பதால் விதேயத்துவமும், உயிரின் செயல்கள் அதன் விருப்பப்படியே இயக்கப்படுபவை எனினும், பொதுவடிப்படையில் இறைவனால் முன்னனுமதி வழங்கப்படுபவையாதலால் பராதீனகர்த்தத்துவமும் உயிரின் இயல்புகளாக உள்ளன. இருப்பினும் தனி உயிர் எச் செயலையும் தேர்ந்தெடுக்கும் உரிமையுள்ளதாகும். ஆனால் அவை நிகழ்த்தப்படுவது இறைவனின் அனுமதியுடன்தான். உயிரின் வினைகள் இறைவனால் தீர்மானிக்கப்படுவதில்லையெனினும் அனுமதிக்கப்படுபவையேயாகும். விசிட்டாத்வைத்தின் முப்பொருள் உண்மைகளில் ஒன்றாக உயிர் விளங்குவதால் கடந்த நிலை இருப்பு உயிரின் தன்மையாக விளங்குகின்றது.

உயிர் தன்னை வெளிப்படுத்தும் தன்மை கொண்டதால் அசடம் எனப்படுகிறது. உயிர் தன்னை வெளிப்படுத்துவது தன்னொளித் தன்மையினால் (சுயம்பிரகாசத்துவம்) ஆகும். உயிர் தூய்மையான மகிழ்ச்சியையும் இயல்பாகப் பெற்றது. ஆழ்ந்த உறக்க நிலையில் எப்பொருளும் உயிர்க்கு அளிக்கப்படாத நிலையிலும் உயிர் தான்

மகிழ்ச்சியாக இருந்ததை உணர்கிறது என்பது, உயிர் ஆழ்ந்த உறக்க நிலையில் தன்னைத்தான் அறிகின்றது என்பதாகும். இவ்வுணர்வு தூய மகிழ்ச்சி எனப்படுவதால் அதுவும் ஆன்மாவின் இயல்பாகும். வெளிப்புலன் உறுப்புக்களினால் உயிர் அறியப்படாதாகையால் உயிர் அவியக்தம் எனப்படுகிறது. உயிர் ஏனைய அனைத்துப் பொருள் களைப்பற்றிக் கருதிப் பார்த்தாலும் தன்னைப் பற்றித் தானே கருத இயலாததால் சிந்திக்கப்பெற இயலாதது எனப்படுகிறது.

உயிர் தர்மபூதஞானம் எனப்படும் பண்பாகிய அறிவின் இருப் பிடமாக உள்ளது. அறிவு உயிரின் உடைமையாகும். பொருளுக்கும் அதன் உடைமைக்கும் பிரிக்கவொண்ணாத தொடர்பிருப்பதால் பொரு ளுணர்வான உயிரிலிருந்து உடைமைப் பண்பு உணர்வான அறிவையும் பிரிக்க முடியாது. எனவேதான் பண்பாகிய அறிவின் இருப்பிடமாக உயிர் (தருமிபூத ஞானம்) கருதப்படுகிறது.

உயிர் அறிகின்ற, நுகர்கின்ற, செயல்படுகின்ற இயல்புகளைப் பெற்றதாகும். இம் மூன்று இயல்புகளும் தளையுண்ட நிலையில் உயிருக்கு உரியன. வீடு பேற்று நிலையில் உயிர், அறிகின்ற இயல்பை மட்டுமே பெற்று விளங்கும். அறிகின்ற செயலைச் செய்யும் இதனை ஞானகிரியகர்த்தத்துவம் என்பர். நுகர்வும் இயக்கமும் உயிர் உடலுடன் இணைகின்ற பொழுது தோன்றுகின்றன. கடந்த நிலையில் உயிர்க்கு அறிகின்ற செயலை உரியதாக்குவது என்பது பண்பாகிய உணர்வில் சுருங்கி விரியும் தன்மையைக் குறிக்குமே தவிரப் பொரு ளாகிய உணர்வான உயிரைக் குறிக்காது.

விசிட்டாத்வைதம் உயிர்களின் பன்மையை ஏற்கின்றது. ஒவ் வொரு உயிரும் தனித்தனியானவையெனினும் அனைத்துமே இறை வனிடமிருந்து பிரிக்க இயலாத உறவு கொண்டவை. விசிட்டாத் வைதிகள் மூவகையான உயிர்களைப் பற்றிக் குறிப்பிடுகின்றனர் நிலையான உயிர்கள் (திவ்யசூரிகள்) எனப்படுபவை என்றென்றைக் கும் தளைக்குட்படாத அதே சமயம் இறைவனுக்குப் பணிபுரிவதற் கென்றே இருக்கின்ற உயிர்களாகும். கருடன், பாம்பு, சங்கு, சக்கரம், சிரீ இலக்குமி போன்றவை இவ்வகைப்பட்ட உயிர் களாகும். இரண்டாவது வகை உயிர்களான முத்தசீவர்கள் ஒரு பொழுது தளைக்குட்பட்டிருந்து தற்பொழுது முத்தியடைந்தவையா கும். மூன்றாவது வகை உயிர்கள் பத்த சீவர்கள் எனப்படுவர் இவை தொடர்ந்து தளைக்குட்பட்டவை; மென்மேலும் தளைக்குரிய வினைகளைச் செய்து பிறப்பு இறப்பிற்கு உட்படுபவை

### இ) உணர்வற்ற பொருள் அல்லது அசித்து பற்றிய கோட்பாடு

விசிட்டாத்வைதம் கூறும் முப்பொருள் உண்மைகளான இறைவன், சித்து, அசித்து ஆகியவற்றில் சித்தும் அசித்தும் இறைவனின் உள், வெளி உடல்களாகத் திகழ்பவைகளாகும். சித்தைப் போன்றே அசித்தும் இறைவனுடன் பிரிக்கவொண்ணாத நிலையில் இணைந்ததாகும். அசித்து என்பது உணர்விற்கு அடிப்படையல்லாத இறைவனின பகுதியாகும். உலகில் காணப்படுகின்ற அனைத்து மாறுதல்களுக்கும் அடிப்படையான புறநிலைக் கோட்பாடு அசித்தாகும். செயலாற்றல் கொண்டதால் அது தன் இயல்பிலோ, வடிவிலோ ஒரே நிலையில் இருப்பதில்லை. சித்தைப் போன்றே அசித்தும் மூவகைப்படும். அவை தூய்மையான ஒளிக்கூறு (சுத்தசத்துவம்); செயல்கூறு (இராசசம்) மற்றும் இருள்கூறு (தாமசம்) ஆகியவற்றுடன் கலந்த ஒளிக்கூறு (கலப்புசத்துவம்); ஒளிக்கூறற்ற இருள் மற்றும் செயல்கூறு கலப்பு (சத்துவசூனியம்) என்பனவாகும். இவற்றுள் முக்கூறுகள் கலந்ததும், ஒளிக்கூறற்ற ஏனைய இரு கூறுகளின் கலப்புப் பருப்பொருளும் சடப்பொருள்களாகும். தூய்மையான ஒளிக்கூறு அசடப் பொருளாகும்.

#### i) தூய்மையான ஒளிக்கூறு (சுத்த சத்துவம்) அல்லது அபிராகிருதம் :

தூய்மையான ஒளிக்கூறு அபிராகிருத உலகு, வைகுந்தம், நாகஉலகு, பரமபதம் போன்ற பெயர்களாலும் வழங்கப்படுகிறது. தூய்மையான ஒளிக்கூற்றில் செயல், இருள்கூறுகள் இல்லை. அது நிலையானது; அறிவைத் தருவது, கலப்பற்ற மகிழ்ச்சியை அளிப்பது; இறைவனின் எண்ணப்படி விமானங்களாகவும், கோபுரங்களாகவும், மண்டபங்களாகவும் தானே மாறவல்லது; பிறவற்றால் மேலோங்க முடியாத ஒளியைப் பெற்றது. இதனை தன் ஒளி கொண்ட ஒன்று என இயல் வரையறை செய்வர். தன்னொளித் தன்மையினால் அறிவிற்குக் காரணமாக அமைகின்றது. இது உயிரில் தோன்றுகின்ற பொழுது அறியாமை அழிகின்றது. தூய்மையான ஒளிக்கூறின் காரணமாக ஏற்படும் அறிவைச் சார்பற்ற அறிவு (நிருபாதிகஞானம்) என வழங்குவர். இவ்வறிவு மனத்தில் தூய்மையான ஒளிக்கூறு தோன்றியபொழுதும் ஏற்படும். அவ்வறிவே வீடு பேற்றிக்கு வழியாக அமைவதாகும். எனவே தூய்மையான ஒளிக்கூறு உண்மையறிவின் அடிப்படையெனக் கருதப்படுகிறது. தளைக்குட்பட்ட உயிர்கள் இவ்

வுண்மையை அறியாது, அறியாமையினால் உணர்வற்ற பருப்பொருள் போன்ற நடத்தையை வெளிப்படுத்துகின்றது தூய்மையான ஒளிக் கூறு உயிரில் தோன்றினாலும் உயிரின் அடிப்படை உணர்வுத்தன்மை வெளிப்பட்டு, உயிர் தன்னை வெளிப்படுத்தும் திறனை உணர்கின்றது உயிரின் அசட இயல்பை உணர்வதற்கு இது கருவியாதலால் இதனையும் அசடப்பொருள் என அழைக்கின்றோம். இறைவனின் இருப்பிடம், அவருடைய உடல், இறைவியின் உடல், நிலையான உயிர்கள் மற்றும் வீடு பேறடைந்த உயிர்களின் உடல்கள், இறைவன் இறைவி மற்றும் அனைத்து வகை உயிர்களின் அறிவும் ஒளிக் கூறினால் அமைந்தவையேயாகும் நுகர்வு நிலையில் தூய்மையான ஒளிக்கூறு அறிவதற்குரிய பொருளாக அமைவதில்லை. அதன் இருப்பைச் சமய நூல்களிலிருந்தே அறியமுடியும்.

**ii) *கலப்பு ஒளிக்கூறு (கலப்பு சத்துவம்) அல்லது பிரகிருதி உலகியல் :***

கலப்பு ஒளிக்கூறானது ஒளி, செயல் மற்றும் இருள் கூறுகளின் அடிப்படையாகும். அவை தொடர்ந்து மாறுதல்களுக்கு உள்ளாவதால் அதனைப் பிரகிருதி என்கின்றனர். இப் பிரகிருதியின் சேர்க்கையினாலேயே தளைக்குட்பட்ட ஆன்மா உண்மையறிவு, தூய்மையான மகிழ்ச்சியின்றித் துன்புறுகின்றது. இதனாலேயே பிரகிருதியை அவித்தை என அழைக்கின்றனர். அவித்தை அல்லது அறியாமை, உயிர் தனது உணர்வுத் தன்மையை உணர்வதினின்றும் தடுக்கின்ற கோட்பாடர்கும் பிரகிருதி உலகில் காணப்படும் வேறுபாடுகளுக்கும் பன்மையியலான தன்மைக்கும் அடிப்படையாய் உள்ளதால் மாயை எனவும் அழைக்கப்படும். பிரகிருதியானது தன்னியல்பில் தொடர்ந்து மாறிக்கொண்டேயிருக்கின்ற ஒன்றாகும். விசிட்டாத்வைதிகள் பிரகிருதியின் இம்மாற்றத்தில் மூன்று நிலைகளைக் குறிப்பிடுகின்றனர். முதல் நிலையான இருள்வடிவப் பிரகிருதி வெளிப்படாத இருட்கூறு நிலை (அவிபக்த தாமசம்) எனவும், வெளிப்பட்ட இருட்கூறு நிலை (விபக்ததாமசம்) எனவும் பிரிந்து மூன்று நிலைகளாகின்றன. இவற்றுள் இரண்டாவதே மிகவும் நுண்ணியதாகும். இந் நிலையில் பிரகிருதி எந்தவொரு திட்டமான வடிவம் அல்லது பெயரைப் பெறுகின்ற நிலையில் இல்லை. இம் மாற்றம் தன்னிலை மாற்றமான்தால் பாகுபாடுகளையோ, வேறுபாடுகளையோ அனுமதிப்பதில்லை. ஆனால் மூன்றாவது நிலையில் பிரகிருதியில் வேறுபாடுகள்

தோன்றுவதற்குரிய அமைப்புக் காணப்படும். இந்நிலையை வடிவ நிலை (அச்சரஅவத்தம்) எனக் குறிப்பிடலாம். பிரகிருதியின் இந்நிலை அதிலிருந்து பல தத்துவங்கள் தோன்றுவதற்கு அடிப்படையானது. எனலாம் பிரகிருதியின் கூறுகளிடையே நிலை மாற்றங்கள் வெளிப் படுகின்ற பொழுதுதான் பல்வேறு தத்துவங்கள் தோன்றுவதற்குரிய தன்மைகள் காணப்படும். இந்நிலையைத் தத்துவங்கள் முழுமையாக வெளிப்படாத நிலை (அவியக்தம்) எனக் கூறலாம். உலகப் படைப் பிற்கு முன் பிரகிருதியானது மேற்கூறிய மாற்றங்களுக்கு உட்படு கிறது. தத்துவம் என்ற நிலையில் பிரகிருதி முதலாவதாகும்.

*காரண - காரியக் கோட்பாடு :*

விசிட்டாத்வைதத்தின் காரண – காரியக் கோட்பாடு சத்காரிய வாதம்' ஆகும் இக் கோட்பாடு பயனானது, அது உண்டாக்கப் படுவதற்கு முன்னரே வெளிப்படாத நிலையில் அதன் காரணத்தில் தங்கியிருக்கின்றது என்பதாகும். இக் கோட்பாடு உபநிடதக் கூற் றாகிய காரணமாகிய ஒன்றினை அறிவதனால் பயன்களாகிய அனைத்தையும் அறிவதாகும் என்பதனையும், காரணமும் பயனும் ஒரே பொருட் தன்மையைக் கொண்டவை என்பதனையும் விளக்கும் காரணமும் அதன் பயனும் வேறுபட்ட பொருள்கள் எனில் காரணத்தை அறிவதன் மூலம் அதன் பயனையும் அறியலாம் என்பது இயலாத தாகிவிடும் பயன் என்பது காரணத்தின் வேறு நிலையையும் பிற தன்மைகளையும் கொண்ட ஒரு புதிய அமைப்பாகும். எடுத்துக் காட்டாக களிமண்ணை அறிவது அதன் பயனாகிய களிமண் பானையை அறிவதற்கு இணையானதாகும் களிமண் பானையாகிய பயன் களிமண்ணாகிய காரணத்தின் புதிய வடிவத்தினையும் அவ் வடிவத்திற்குரிய தன்மைகளையும் கொண்ட புதிய அமைப்பாகும்.

இராமானுசர் ஒரு பயனை உண்டாக்குவதற்கு மூவகைக் காரணங்கள் இன்றியமையாதவையாகுமெனக் கருதுகின்றார் அவை பொருட் காரணம் (உபாதான காரணம்), அறிவுக் காரணம் (நிமித்த காரணம்), துணைக் காரணம் (சககாரிகாரணம்) என்ப வையாகும். இவற்றுள் பொருட்காரணம் பயன்களின் வடிவில் பல மாற்றங்களுக்கு உட்படும் பருப்பொருளாகும். அறிவுக் காரணம் அப்பருப்பொருளை மாற்றங்களுக்கு உட்படுத்துவதாகும். பருப்

பொருளின் நிலைமாற்றங்களுக்கு உதவியாக அமைகின்ற கருவிகள் துணைக் காரணமாகும் பொருட்காரணம் பயன்நிலையிலும் அப் பொருளாகவே அமைந்திருக்கும். பயனில் ஏற்படுவதெல்லாம் பொருட்காரணம் ஒரு புதிய அமைப்பில் உண்டாக்கப்படுவதேயாகும் காரணப் பயன் நிலைகளில் பொருட் காரணம் ஒன்றாக இல்லா விடில் எக்காரணமும் எந்தப் பயனையும் அளிக்கும் என்று கருத வேண்டியிருக்கும்.

இராமானுசர் காரண காரியப் தொடர்பிற்குப் பின்வரும் தன்மைகளைக் குறிப்பிடுகின்றார், 1) பயன் மீண்டும காரண மாக இயலாது பால் தயிராக மாறுமேயேன்றி தயிர் மீண்டும் பாலா வதில்லை 2) காரணம் பயனின் தொடர்ச்சியாகவும் சீரானதாகவும் ஆகும். எப்பொழுதுமே பயன்தான காரணத்தைப் பின் தொடரும், 3) காரணகாரியத் தொடர்பில் தற்செயல் நிகழ்வு என்பது இல்லை. குறிப்பிட்ட பயனானது அதற்குரிய காரணத்திலிருந்து தான் தோன றுமே யன்றிப் பிறவற்றிலிருந்து ஏற்படாது.

காரணம் மற்றும் பயன் என்ற சொற்கள் பொருளின் வேறு பட்ட நிலைகளையே குறிப்பதாகும். காரண காரியத் தொடர்பு என் பது பொருட் காரணத்தின் மாறுகின்ற நிலையினையும் அம் மாற் றத்தை உண்டாக்குவதற்கே அதனைச் செயல்படுத்துகின்ற அறிவுக் காரணம் தேவை என்பதையும் குறிப்பிடுகின்றது. பயன், காரணத் தின் பிறிதொரு நிலை என்பதனாலே தான் சத்காரியவாதம் பயன் அது உண்டாக்கப்படுவதற்கு முன்பாகவே அதன் காரணத்தில் இருக்கின்றது எனக் கருதுகின்றது. படைப்பு அல்லது உற்பத்தி யென்பது பொருட்காரணம் பயனளிக்கக் கூடிய வகைகளில் புதிய அமைப்புகளைப் பெறுகின்ற நிலையேயாகும். எனவே இராமானு சரின் கருத்துப்படி படைப்பு என்பது ஒரு புதிய நிலையை உண்டாக்கு வதேயன்றி மறைந்திருக்கக் கூடிய ஒன்று பயனிலையில் வெளிப்படு வதாகாது. சங்கரரின் காரண காரியக் கோட்பாடான விவர்த்தவா தத்தின்படி காரணம் உண்மையாகவும் அதன் பயன் தோற்ற நிலை என்பதனையும் இராமானுசர் மறுக்கின்றார். ஏனெனில் காரணத்திற் கும் அதன் பயனுக்கும் எவ்விதத் தொடர்பும் அக் கோட்பாட்டின்படி இருத்தல் இயலாது.

விசிட்டாத்வைதத்தில் படைப்பானது உண்மையானதாகும். பரம்பொருளாகிய பிரம்மன் தன்னுடன் பிரிக்கவொண்ணாத நிலையில் இணைந்துள்ள சித்து அசித்து ஆகிய தன்மைகளுடன் இவ்வுலகைப்

படைப்பிற்குக் காரணமாக இருக்கின்றது. இந்நிலையில் அதனைச் சித்து அசித்து விசிட்ட காரண பிரம்மன் என வழங்குவர். உலகொடுக்கக் காலத்தில் பிரம்மன் அசித்துடனும் உடல்களற்ற உயிர்களுடனும் இணைந்திருக்கின்ற நிலையாகும் அது. படைப்பின் பொழுது சித்து அசித்து விசிட்டகாரண பிரம்மன் தன் இயல்பான உயிர்கள் உடல்களைப் பெறுவதற்கும் கலப்புச் சத்துவம் உலகப் பொருள்களின நிலைகளைப் பெறுவதற்கும் தன்னுணர்வை அறிவுக் காரணமாகக் கொண்டு செயல்படுகின்றது. பயன் நிலையில் உயிர்கள் உடலகளைப் பெற்று மனிதர்களாகவும் பிரகிருதி உலகப் பொருள்களாகவும் மாறியுள்ள நிலையைக் சித்து அசித்து விசிட்டகாரிய பிரம்மன் என்கிறோம். உலகப்படைப்பின் பொழுது பிரம்மன் எவ்வகையிலும் மாறுதலுக்கு உட்படுவதில்லை. அதன் இயல்புகளில் மட்டுமே மாறுதல்கள் நிகழ்கின்றன. பிரம்மன் அறிவுக் காரணமாக இருப்பினும் அதன் பிரிக்கவொண்ணாத இயல்புகள் பொருட்காரணமாக அமைந்திருப்பதாலும் பிரம்மனையே பொருட்காரணம் எனவும் வழங்குவர் இவ்வாறு பிரம்மன் அறிவு மற்றும் பொருட்காரணமாக விளங்குவதை வேறுபாடற்ற அறிவுப் பொருட்காரணம் (அபின்ன நிமித்த உபாதான காரணம்) என்பர். காரண பிரம்மன் காரிய பிரம்மனாக உண்மையான மாற்றத்தைப் பெறுவதால் விசிட்டாத்வைதத்தின் சத்காரியவாதம் பிரம்மபரிணாம வாதம் எனவும் பெயர் பெறுகின்றது காரண நிலையில் பிரம்மன் கடந்த தன்மையிலும் காரிய நிலையில் பிரம்மன் உள்ளுறை தன்மையிலும் விளங்குகினறது. காரண பிரம்மன் காரிய பிரம்மனாக உண்மையான மாற்றத்திற்கு உட்படுவதே பிரம்ம பரிணாம வாதம் எனப்படுகிறது.

சித்து அசித்து விசிட்ட காரண பிரம்மன் சித்து அசித்து விசிட்ட காரிய பிரம்மனாக உண்மையாக மாறுவதனால் இம்மாற்றத்தின் அடிப்படையில் உண்டாக்கப்பட்ட உலகமும் உண்மையானதேயாகும். உலகம் சங்கரர் கருதுவது போன்று தோற்ற நிலையானதல்ல. உலகம் உண்டாக்கப்படுவதற்கு முன்பு நுண்ணிய பிரகிருதியாக இருக்கும் நிலையில் இன்மை (அசத்) அல்லது பொய் எனப்படும். இங்கு இன்மை எனப்படுவது நுண்ணிய நிலையில் அது வடிவங்களையும் பெயர்களையும் பெறுவதற்கு ஏற்ற நிலையற்றது என்பதே பொருளாகும். உலகம் உண்மையான பொருளின் உண்மையான மாற்றம் என்பதால் உண்மையே எனினும் அதன் மாறுகின்ற இயல்பினால் நிலையற்றது (அநித்தியம்) எனப்படுகிறது.

பிரகிருதி இருக்கின்ற பொருளாக மட்டுமன்றி இருப்புகளுக்குள் வருகின்ற (being and becoming) ஒன்றாகும். பிரகிருதியிலிருந்து வந்த உலகப் பொருட்கள் அனைத்தும் கூட மாறிக் கொண்டேயிருப்பதால் அவற்றை இருப்பவை (அத்தி) மற்றும் இல்லாதவை (நாத்தி) என்கிறோம்.

உலகப் படைப்பு :

உலகப் படைப்பு அல்லது படிமுறை வளர்ச்சி பிரம்மனைச் சார்ந்ததாகும் உலகப் படைப்பினைப் பொறுத்துப் பிரம்மனை மாயாவி என்பர் இதன் பொருள் பிரம்மன் தனது வரையறைக்கப் பாற்பட்ட சக்தியினால் உலகைப் படைக்கின்றார் என்பது ஒரு கண்கட்டு வித்தைக்காரன் வித்தையை நிகழ்த்துவதைப் போன்றதாகும் இறைவனின் சக்தியான மாயை இறைவனின் எண்ணமேயாகும். இவ்வெண்ணத்தினால் நுண்ணிய பொருள் படிப்படியாக வளர்ந்து உலகமாக மாறுகின்றது. உலகின் அடிப்படைப் பொருளான பிரகிருதியின் (1) வெளிப்படாத நிலைக்கும், அதன் முதல் வளர்ச்யான 'பெரியத' (மகத்து அல்லது புத்தி) ற்கும் (2) இடையில் ஒரு நிலையிருப்பதாக விசிட்டாத்வைதிகள் கருதுகினறனா. அவ்விடைபட்ட நிலையை 'பிராணக பிரகிருதி' நிலை எனக்குறிப்பிடுவர். உலகவொடுக்கக் (பிரளய) காலத்தில் தளைக்குட்பட்ட உயிர் இப் பிராணக பிரகிருதியுடன் நெருங்கிய தொடர்பு கொண்டிருக்கும முதல் படிமுறை வளர்ச்சித் தத்துவமான பெரியது பின்னர் 'தான்' (அகங்காரம்) (3) எனும் தத்துவமாக வளர்ச்சி பெறுகின்றது. பிரகிருதியின் ஒளி, செயல் மற்றும் இருள்கூறுகளின் மேலோங்கிய நிலையினைப் பொறுத்து 'தான்' எனும் தத்துவம் வைகாரிகம், தைசாசம், பூதாதி என மூவகைப்படும். வைகாரிகத்திலிருந்து மனம் (4), ஐந்து புலனுறுப்புக்கள் (9), ஐந்து தொழிலுறுப்புக்கள் (14) தோன்றுகின்றன. இவையனைத்தும் உளநிலை அடிப்படையிலான படிமுறை வளர்ச்சியாகும். விசிட்டாத்வைதம் மனமே இதயத்தின் இருப்பிடமெனவும், மனம் அகங்காரம், சித்தம், புத்தி என்ற நிலைகளிலும் செயல்படவல்லதெனவும், மனமே தளைக்கும் வீடு பேற்றிற்கும் அடிப்படையெனவும் கூறுகின்றது. ஆனால் இராமானுசர் மனம் இதயத்திற்கு மட்டுமின்றி ஏனைய புலனுறுப்புக்களுக்கும், அணுவளவான உயிர்களுக்கும் இருப்பிடமாகும் என்று கருதுகின்றார்.

பூதாதி நிலையிலிருந்து ஐந்து தன் மாத்திரைகள் (19) தோன்றுகின்றன. இவ்வைந்து தன்மாத்திரைகளும் தொடர்ந்த படி முறை வளர்ச்சியினால் ஐந்து பருப்பொருள்களாக (24) (பஞ்ச பூதங்கள்)

மாறுகின்றன. முதலில் பூதாதியிலிருந்து ஒளித் தன மாத்திரை தோன்று கின்றது. அதிலிருந்து வெளியும், தொடு உணர்வுத் தன் மாத்திரையும் தோன்றுகின்றன. இதிலிருந்து வளியும் வடிவத் தன்மாத்திரையும் தோன்றுகின்றன. வடிவத் தன்மாத்திரையிலிருந்து நெருப்பும், சுவைத் தன்மாத்திரையும் தோன்றுகின்றன. இச் சுவைத் தன்மாத்திரை யிலிருந்து நீரும், மணத் (நாற்றம்) தன்மாத்திரையும் தோன்று கினறன. இத் தன்மாத்திரையிலிருந்து நிலம் தோன்றுகின்றது. இவ்வாறு பிராணக பிரகிருதியிலிருந்து இருபத்துநான்கு இருப்பு நிலைகளாக இவ்வுலகப்படிமுறை வளர்ச்சி முற்றுப்பெறுகிறது உலகப் படைப்பின் நோக்கமாக பிரம்மனின் விளையாட்டு முனைப்பை விசிட்டாத்வைதம் குறிப்பிடுகின்றது. உலகப் படைப்பிற்கு ஏதாவ தொரு நோக்கம் கற்பிக்கப்படுவதானது பிரம்மனிடத்து இதுவரை நிறைவேற்றப்படாது ஒரு விருப்பம் இருந்தது என்றும் அது படைப் பினால் நிறைவுற்றது என்றும் பொருள்படும். அவ்வாறான நிலை பிரம்மனைக் குறையுடைய தாக்கிவிடும். உலகப் படைப்பு தனையுண்ட உயிர்கள் தங்கியிருந்து வீடு பேற்றையடைய ஒரு வழியாகப் பயன் படுவதாகும்.

பருப்பொருள்களான நிலம், நீர், நெருப்பு, காற்று, வெளி முதலியவை தன் மாத்திரை நிலையிலிருந்து ஐவகை நிலைகளில் மாற்றம் (பஞ்சீகரணம்) பெற்று வந்தவையாகும். தன் மாத்திரை யின் இயல் இருப்பு முதல் நிலையாகும். இது முதலில் இரண்டாகப் பிரிகின்றது. பின்னர் அதன் ஒரு பகுதி நான்காகப் பிரிகின்றது. அடுத்த நிலையில் இந்நான்கு பகுதிகளும் ஏனைய தன் மாத்திரை களுடன் இணைகின்றன. அதேபோன்று அவற்றிலிருந்து ஒவ்வொரு பகுதி முதல் தன்மாத்திரையுடன் இணைகின்றன. இறுதி நிலையில் ஒரு குறிப்பிட்ட தன்மாத்திரையில் அதன் பாதி இயல்பும் மற்றொரு பாதியில் ஏனைய தன்மாத்திரைகள் எட்டில் ஒரு பகுதியாக இதில் இணைந்திருக்கும். இதுவே காணப்பெறும் பருப்பொருளாகும்.

**பஞ்சீகரணம் :**

தன்மாத்திரைகள்




பஞ்ச பூதங்கள்

விசிட்டாத்வைதத்தின்படி உலகின் பொருட்காரணமான பிரகிருதியும் அத்வைதத்தின் மாயைக்கும் இடையே வேறுபாடுகள் உள்ளன. இரண்டுமே பொருட்காரணமெனினும் முன்னது புலன் கடந்த பொருள்நிலையில் உண்மையானது; இறைவனுடன் பிரிக்கவொண்ணாத தொடர்புடையது. பின்னது இருப்பும் இன்மைத் தன்மையும் கொண்டது; புலன் கடந்த நிலை இருப்புடையதல்ல. அறிவினால் மாயை அழியப்படக்கூடியது. அது உயிர் தன்னுணர்வைப் பெறுகின்றவரைக்கும் மட்டுமே இருப்பைக் கொண்டிருக்கும். பிரகிருதியும் அதன் தொடர்ந்த மாறுபடும் தன்மை குறித்தும் இல்

பொருள் என வழங்கப்பெறுவதுண்டு. பருப்பொருட்கள் அனைத்தும் உண்மையான பிரகிருதியிலிருந்து படிமுறை வளர்ச்சியினால் வந்தமையால் அழியக் கூடியவையல்ல; ஆனால் எதிலிருந்து வந்ததோ அதனுள் ஒடுக்கம் பெறுபவை ஆகும்.

iii) *செயல், இருள்கூறுகளின் கலப்பு அல்லது ஒளிக்கூறற்றவை (சத்துவ சூனியம்) :*

இதுவும் பருப்பொருளாகக் கருதப்படுகின்றது. காலம் மட்டுமே இதனால் ஆக்கப்பட்ட பொருளாகும். பிரகிருதி மற்றும் படைக்கப்பட்ட பொருள்களின் அனைத்து மாற்றங்களுக்கும அடிப்படையாய் இருப்பது காலமாகும். காலமும் உண்மையானது. அது பிரம்மனுக்குப் புறத்தே இல்லையெனினும் பிரம்மனில் கலந்ததல்ல. காலம் நிலையானது; எங்கும் பரவிநிற்பது: ஒன்றானது. ஆனால் செயல் முறைகளின் அடிப்படையில் இறந்த, நிகழ், எதிர்காலங்கள், ஆண்டு, திங்கள், நாள், மணி, நொடி எனப் பிரிக்கப்படுகின்றது. நிலையற்றதாகப் பயன்படுத்தப்படுகின்றது. அதில் ஒளிக்கூறு இல்லாததால் அதனால் தன்னை வெளிப்படுத்திக் கொள்ள இயல்வதில்லை. விசிட்டாத்வைதிகள் தனித்த ஒளிக்கூற்றின் இருப்பையும், கலப்புக் கூறுகளின் இருப்மையும் ஏற்பதைப் போன்றே ஒளிக்கூறற்ற செயல், இருள்கூறுகளின் கலப்பிருப்பையும் ஏற்கின்றனர்.

இவ்வாறு விசிட்டாத்வைதம் அசித்தில் அல்லது உணர்வற்றதில் இரண்டு பருப்பொருட்களும் (பிரகிருதியும், காலமும்) ஒரு அசடமும் இருப்பதாகக் கூறுகின்றது. இவற்றுள் முன்னவை இரண்டும் நுகர்வுலகிற்கு அடிப்படையாய் அமைந்துள்ளவையாகும். பொதுவில் இருப்பினை (தத்துவம்) பொருளல்லாதது. பொருள் என இருவகையாகவும், பொருட்களில் பருப்பொருள், அசடப்பொருள் என இருவகையாகவும், அசடப்பொருளையும் காட்சிகுரியவை, உணர்தற்குரியவை என இருவகையிலும், இவற்றிலும் வகைக்கு இரு பொருள்கள் உண்டெனவும் பிரித்து இறுதி நிலையில் நான்கு அசடபொருள்களையும் விசிட்டாத்வைதம் குறிப்பிடுகின்றது

இருப்பு

- பொருளல்லாதவை (சத்துவம், இராசசம், தாமசம், சப்தம், சுபரிசம், சரூபம் இரசம், கந்தம். சம்யோகம், சக்தி)
- பொருள்
  - சடப்பொருள்
    - பருப்பொருள் (1)
    - காலம் (2)
  - அசடப்பொருள்
    - காட்சிக்குரியவை
      - உயிர் (3)
      - இறைவன் (4)
    - உணர்தற்குரியவை
      - சுத்தசத்வம் (5)
      - உணர்வு (6)

*விசிட்டாத்வைதத்தில் அவித்தை :*

அவித்தை அல்லது அறியாமை விசிட்டாத்வைதத்தில் புலன் கடந்த பொருளியல் நிலையிலும், அறவியல் நிலையிலும் கருதப படுகிறது. சங்கரர் தனது அத்வைத மெய்ப் பொருளியலில் அவித்தை யையே மாயை என்று குறிப்பிடுகின்றார். இவ்வவித்தை அல்லது மாயை உலகத் தோற்றத்தின் அடிப்படை எனவும், அது இருப்பு வடிவமுடையது (பாவரூபம்) எனவும், அதன் உண்மைத்தன்மை தீர்மானிக்க இயலாத (அநிர்வசனீயம்) தெனவும், கடந்தநிலையில் திரிபுத்தன்மையுடையது எனவும் விளக்குகின்றார். விசிட்டாத்வை தத்தில் பிரகிருதி சங்கரரின் மாயை போன்ற முக்கூறுகளை உடை யதும், உலகின் பொருட் காரணம் எனவும் கூறப்படுகின்றது. ஆனால் சொற்பொருள்வகை நிலையில் பிரகிருதி மாயையிலிருந்து முற்றிலும் வேறானது. பிரகிருதி உணர்வற்ற நிலையான உண்மைப் பொருள் மட்டுமன்றி இறைவனின் ஒரு நிலையாகத் தன் பொருள் தன்மையின் விளக்கத்தைப்பெறுவது. சங்கரரின் மாயை நிலையற்றது; அறிவினால் நீக்கப்படக்கூடியது; பெயரளவிற்கே இருப்புத்தன்மை கொண்டது. பிரகிருதியானது அசித்தின் ஒரு பகுதியாக உயிர் தனது அடிப்படை உணர்வியல்பைப் பெறுவதினின்றும் தடுப்பதால், விசிட்டாத்வைதம் பிரகிருதியை அவித்தை என்கின்றது மாயை என்ற சொல்லிற்கு

இராமானுசர் பிரகிருதியிலிருந்து இயலுவகை உண்மையாகப் படைக்கும் இறைவனின் ஆற்றல் எனப்பொருள் கொள்கின்றார். மேலும் அவித்தை என்ற சொல்லிற்கு பிரகிருதியிலிருந்து உண்டான உடலுடன் தன்னை ஒன்றெனக் கருதும் உயிரின் அறியாமை எனவும் பொருள் கொள்கின்றார்.

இராமானுசர் இயலுலகத்தையும், அதன் பொருட்காரணமாகிய பிரகிருதியையும் உண்மை எனக் கருதுவதால், உலகின் பொருட் காரணமாகிய மாயையைச் சங்கரர் இருப்புவடிவம் கொண்டது; தீர் மானிக்க இயலாதது என்று கூறுவதை மறுப்பதுடன், ஏழுவகையான மறுப்புரைகளையும் சங்கரரின் மாயை பற்றிய கருத்திற்கு எதிராக எழுப்புகின்றார். அவை :

1. அடிப்படை மறுப்பு (ஆச்ரய அனுபபத்தி) : சங்கரர் கருதும் மாயை தங்கியிருக்கும் இடம் பற்றியது இம்மறுப்பு சங்கரரின் கருத்துப்படி பிரம்மன மட்டுமே தன் வெளிப்பாடுள்ள, இயல்புகளற்ற ஒரே உண்மையாகும். மாயை அதில் தங்கியிருப்பதாபக் கொண்டால் பிரம்மன் இயல்புடையது ஆகும். மேலும் மாயை அவித்தை என்ப தால் வித்தையாகிய பிரம்மனில் அது இருக்க முடியாது. இதே போன்று உயிரிலும் மாயை இருப்பதாக ஏற்கமுடியாது; ஏனெனில் உயிர் மாயை அல்லது அவித்தை. பிரம்மனை எல்லைக்குட்படுத்துவ தால் தோன்றுவதாகும் மாயை தன் இருப்பிற்கு இடமற்று இருப்பது என்பது பொருளற்றதாகும் என இராமானுசர் கூறுகின்றார்.

2. மறைப்பு பற்றிய மறுப்பு (திரோதான அனுபபத்தி) : மாயை பற்றிய நம்பிக்கை அதன் மறைப்பாற்றல் பிரம்மனையும் மறைக்கும் என்பதில் முடியும் இது ஏற்கவொண்ணாதது. மறைத்தல் இருவகைப்படும். அவை அறிவின் தோற்றத்தை எதிர்ச்செயலால் தடுத்தல், மற்றும் அறிவை அழித்தல் என்பவையாகும். பிரம்மன் தூய அறிவு அல்லது உணர்வு ஆகையால் அதனைத் தடுக்கவோ அழிக்கவோ இயலாது. அவை இயலுமென்பது இருள் ஒளியை மறைக்கும் என்பதைப் போல்வதாகும்.

3. தன்வடிவம் பற்றிய மறுப்பு (சுய உருவ அனுபபத்தி) : அவித்தை அல்லது மாயையின் இயல்பு, உண்மை எனக் கருத முடியாது உண்மையெனில் அதனை நீக்கிப் பிரம்ம உணர்வைப் பெற இயலாது. மேலும் பிரம்மனுடன் மற்றொரு உள்பொருளாக

மாயையை அத்வைதிகள் ஏற்க நேரிடும். மாயையை இல்பொருள் என்றும் கூறமுடியாது. அவ்வாறு ஏற்பது முடிவிலாது சென்று கொண்டிருக்கும் பிழையில் செலுத்தி விடும். மாயையை உள்பொருள் மற்றும் இல்பொருள் என்று இணைத்துக்கூறுவது தன் முரண் பாடாகும். இவை எதுவுமே அல்லாத ஒன்றாக மாயையைக் கருதுவது அனைத்துவகைச் சிந்தனையையும் கைவிடுதற்கொப்பாகும்

4. தீர்மானிக்க இயலாதது பற்றிய மறுப்பு (அநிர்வசனீய அனுபபத்தி) : பொருள்கள் எப்பொழுதும் உள்ளதன் தன்மையவை அல்லது இல்லதன் தன்மையவை. இவ்விரு நிலைகளுக்கும் மாறாக ஒரு பொருள் என்றும் அறியப்படும் பொருளாக அமைவதில்லை. இவ்வாறன்றித் தீர்மானிக்க இயலாத ஒன்றான மாயை அறியப்படும் பொருளாக அமையும் என்று அத்வைதிகள் கூறுவது அனைத்துப் பொருள்களும் அறியப்படும் பொருள்களே என்ற நிலைக்குக் கொண்டு செல்லும்.

5 அறியும் வழி பற்றிய மறுப்பு (பிரமான அனுபபத்தி): இம் மறுப்பு மாயையை அறியும் வழி பற்றியதாகும். புலக்காட்சியானது இருக்கின்ற அல்லது இல்லாத பொருளைப் பற்றிய அறிவைத்தரும். மாயை இரண்டிலும் சேராத ஒனறாதலால் அதனைப் புலக்காட்சி வழி அறிய முடியாது. கருதுதல் அளவை ஏற்புடைத்த ஒரு அடை யாளத்தின் வழி நடத்தப்படுவதால், அத்தகைய அடையாளமற்ற மாயையை அதன் வழியும் அறிதல் இயலாது. உரையளவையான புனித நூல்கள் மாயையை உண்மையான உலகைப் படைக்கும் இறையாற்றல் என்பதால் அது சங்கரரின் கூற்றான மாயையன்று எனவே மாயை அறிய முடியாத ஒன்றாகும் என்பது இராமானுசர் கருத்து.

6. மாயை நீக்கம் பற்றிய மறுப்பு (நிவர்த்தக அனுபபத்தி) : அத்வைதத்தின்படி பண்புகளற்ற பிரம்மனைப் பற்றிய அறிவு அவித்தையை நீக்கும். அத்தகைய பண்புகளற்ற பிரம்மனைப் பற்றிய அறிவு கிட்டாது. ஏனெனில் அறிவு எஞ்ஞான்றும் வேறுபடுத்துதலை உள்ளடக்கியது. பண்புகளற்ற பிரம்மனைப் பற்றிய அறிவை வேறு படுத்த இயலாத நிலையில் அத்தகைய அறிவும் இன்மையாதலால் மாயை நீக்கப்பட இயலாத ஒன்றாகின்றது.

7. வீடு பேறு பற்றிய மறுப்பு (நிவிர்த்திய அனுபபத்தி): பிரம்ம அறிவு என்பது பிரம்மனைப்பற்றிய அறிவல்ல; பிரம்மனாகிய அறிவு.

இது தூய்மையான அறிவு: ஒற்றுமை பற்றிய அறிவல்ல. ஆனால் சங்கரரின் கருத்துப்படி பிரம்மனைப் பற்றிய அறிவாகிய பிரம்மசீவ ஒருமை அறிவே வீடுபேற்றை நல்கும். இத்தகைய ஒருமையறிவும் அவித்தையின் ஒரு வடிவேயாகும். பிரம்மனைப் பற்றிய அறிவு, நெருப்பானது காட்டினை அழித்துப் பின்னர் தன்னையும் அழித்துக் கொள்ளல் போன்று, அவித்தையை அழித்துப் பின்னர் தானும் அழிந்து வீடு பேற்றினை நல்கும் என்பர் அத்வைதிகள். ஆனால் நெருப்பு அணைந்த பிறகும் அங்கு சாம்பல் இருப்பதைப் போன்று அவித்தை அழிந்தாலும் அதன் நீர்த்த பகுதிகள் இருக்குமாதலால் அவித்தை முழுவதும் நீக்கம் பெறாததாகி வீடு பேற்றுக்குத் தடையாகத் தொடர்ந்திருக்கும்.

மேற்கூறியவாறு இராமனுசர் அத்வைதிகளின் மாயை அல்லது அவித்தைக் கோட்பாட்டினை மறுத்து, அவித்தை உண்மையான உள்பொருள் என நிலை நிறுத்துகின்றார். விசிட்டாத்வைதத்தில் அவித்தை உணர்வற்ற பொருளான அசித்தின் ஒரு பகுதியாகிய பிரகிருதியைக் குறிப்பதாகும். அதனை அவித்தை என்பதன் பொருள் உயிர் தன்னை உடல் தொகுதியினின்றும் பிரித்து அறிய விடாது தடுப்பதனாலேயேயாகும்.

அறநிலையில் வினைகளையே இராமனுசர் அவித்தை எனக் கருதுகின்றார். ஏனெனில் வினைகள் தான் பண்பாகிய அறிவின் அனைத்து மாற்றங்களுக்கும் அடிப்படையாய் விளங்கி, உயிரறிவை மறைத்து அதனைச் செயல்படுபவன் என்ற எண்ணத்திற்கு உந்து கிறது, இதனால் உயிர் இயலுலகில் தன்னை ஒரு தலைவனாகக் கருதத் தலைப்படுகிறது. வினையின் வடிவாக அவித்தை உயிர்களின் நுகர்விற்குக் காரணமாக அமைகின்றதே ஒழிய நுகர்வுப் பொருளான பிரகிருதியாகவன்று. உயிர் அவித்தையால் இயலுலகின் தலை வனாக இறைவனை உணராது தன்னையே தலைவனாகத் தவறாகக் கருதுகின்றது. வினைவடிவான அவித்தை ஒருமறைப்புக் கோட் பாடாகும். பொதுவாக விசிட்டாத்வைதம் இறை அல்லது உயிர் உணர்விற்குத் தடையாக இருப்பதையும், உயிர்க்கு உலகின்பப் பொருள்களின் மீது நாட்டத்தை உண்டாக்குவதையும் அவித்தை எனக் கருதுகிறது.

## 12 இறைவனுக்கும் சித்துக்கும், இறைவனுக்கும் அசித்துக்குமுள்ள தொடர்பு

விசிட்டாத்வைதம் என்பதன் பொருள், வேற்றுமைப் பண்பு கொண்ட இரண்டல்லாதது என்பதாகும். இராமானுசரின் கருத்துப்படி, பரம்பொருள் உறுப்புக்களின் ஒரு படித்தான கூட்டு ஆகும். பரம் பொருள் ஒன்றுக்கொன்று தொடர்புடைய, ஒன்றினையொன்று சார்ந்த, உட்பட்ட கூறுகளான, பண்புகளாகிய விசேடங்களும், அவற்றின் உள்ளுறையிலிருந்து கட்டுப்படுத்துகின்ற பொருளான விசேடியமும் இணைந்த முழுமை அல்லது விசிட்டம் ஆகும் இது இரண்டல்லாததால் அத்வைதம் ஆகும். ஒருமையென்பது இம் முழுமையின் இன்றியமையாத ஒரு இருப்பாக உணர்தலேயாகும்.




பொருளாகிய இறைவனும், பண்பாகிய சித்தும் அசித்தும் இணைந்து ஒரு முழுமையாக நிற்பதே விசிட்டாத்வைதத்தின் பரம் பொருள். இம் மூன்றும் ஒன்றாக இருக்கின்ற நிலையைச் சித்து அசித்து விசிட்டஈசுவரன் எனக் குறிப்பிடுவர். இம் மூன்றையும் இருப்பியல் மூவுண்மைகள் (தத்துவத்திரயம்) எனவும் வழங்குவர் இம் மூன்றும் இணை நிலையில் உண்மையெனினும் சித்தும் அசித்தும் இறைவனைச் சார்ந்தவையாகும். அவை உண்மைப் பொருள்கள் எனினும் இறைவனுடன் உறவுகொண்ட நிலையில் பண்புகளா கின்றன. இறைவன் என்னும் உயிர்க்கு உயிர்களும் அசித்தும் உடலாவதால் இறைவனை உயிர்கள் மற்றும் இயற்கையின் உயிர் என்கிறோம்.

இறைவனுக்கும் உயிருக்கும், இறைனுக்கும் இயற்கைக்கு மிடையேயுள்ள உறவு பிரிவல்ல, இணைந்ததல்ல, இரண்டும் சேர்ந்த தல்ல. மூன்றுமே தனித்தனியாதலால் அவைகளுக்கிடையேயுள்ள

உறவு ஒத்ததாகாது. அதே போன்று அவை முற்றிலும் தனித்தனியாகவன்றி இல்லாததால் வேற்றுமையுமாகாது. ஒற்றுமையும் வேற்றுமையும் சேர்ந்ததோவெனில் அது முரணான உறவு நிலையாகும். வெறும் ஒற்றுமையும், வெறும் வேற்றுமையும் சொல்லளவிற்கே உரியனவாதலால உண்மையல்ல. இவ்வாறு விசிட்டாத்வைதம் மூவகை உண்மைப் பொருள்களுக்கிடையேயுள்ள உறவு ஒற்றுமையல்ல, வேற்றுமையல்ல, இரண்டும இணைந்தவையுமல்ல என்று கூறுகின்றது.

விசிட்டாத்வைதிகளின் கருத்துப்படி இறைவனுக்கு உயிர்களிடத்தும இயற்கையினிடத்துமுள்ள உறவு பிரிக்கவொண்ணாததாகும். இவ்வுறவினை அப்பிரதக்சித்தி என விசிட்டாத்வைதம் வழங்குகிறது. இதன்படி உயிரும் இயற்கையும் இறைவனுடன் பிரிக்கவொண்ணாத சார்புடையவை. இப்பிரிக்கவொண்ணாத உறவு உள்ளீடானது; இன்றியமையாதது; உறுப்புக்களின் கூட்டமைப்பானது. இப் பிரிக்கவொண்ணாத உறவை உடல் மற்றும் உடைமைக்காரன் என்ற தொடர்பாகவும், பொருளுக்கும் அதன் பண்புகளுக்கும் உள்ள தொடர்பாகவும், முழுமைக்கும் அதன் பகுதிகளுக்குமிடையேயுள்ள தொடர்பாகவும் விசிட்டாத்வைதம் கருதுகின்றது

உடல் உயிர்த் தொடர்பு (சரீரசரீரி உறவு): இராமானுசரின் கருத்துப்படி உயிரால் கட்டுப்படுத்தப்பட்டு, தாங்கப்பட்டு உயிரின் குறிக்கோளை நிறைவேற்றுதல் பொருட்டுப் பயன்படுத்தப்படுவதே உடலாகும். இந்நிலையில் தான் உயிர்களும் இயற்கையும் இறைவன் என்ற உயிர்க்கு (சரீரி) உடலாக (சரீரம்) பிரிக்கவொண்ணாதபடி இணைந்துள்ளன. இருப்பினும் அவைககளின் தனித்த இருப்பு அழியாமல் இறைவனின் பண்புகளாக அமைகின்றன. அடிப்படையில் இறைவனுடன் ஒன்றாய் இருப்பினும் இறைவனின் நிலைகளாக அவை வேறுபட்டும் இருக்கின்றன. உயிர்கள் இறைவனைப் போன்றவையாதலால் அதன் பெருமையிலும் சிறப்பிலும் பங்கு கொள்கின்றன. வரம்பற்ற உணர்வையும், எல்லையற்ற மகிழ்ச்சியையும் இறைவனின் மூலமே தமக்குரியவைகளாக நுகர்கின்றன. இறைவனின் உடலாய் உயிர்கள் மற்றும் இயற்கை இறைவனால் தாங்கப்பட்டுக் கட்டுப்படுத்தப்பட்டு அவனுடைய நோக்கங்களை நிறைவேற்றுவதில் பயன்படுத்தப்படுகின்றன அந் நோக்கம் என்னவெனில் உயிர்களுக்கு உடல்களை அளிப்பதன் மூலம் அவைகளை அவற்றிற்குரிய வினைப் பயன்களைத் துய்த்துத் தீர்க்க வைத்து வீடுபேறளிப்பதாகும். இயற்

கையின் மூலம் உடல், உறுப்புக்கள், உலகம், நுகர்வுப் பொருள்கள் (தனு, கரணம், புவனம், போகம்) ஆகியவற்றை இறைவன் உயிர்களுக்கின்றான். உயிர்களுக்கும் இயற்கைக்குமிடையேயுள்ள உறவு பிரிக்கப்படக் கூடியதாகும்.

*பொருள்களுக்கும் அதன் பண்புகளுக்குகிடையேயுள்ள உறவு (விசேடிய விசேடண உறவு)* :

இறைவன், உயிர், இயற்கை ஆகியவற்றின் உறவு நிலையைப் பொருளுக்கும் அதன் பண்புகளுக்குமிடையேயுள்ள உறவாகவும் குறிப்பிடுவர். இறைவனைப் பொருளாகவும், உயிர் இயற்கை ஆகியவற்றை இறைவனாகிய பொருளின் பண்புகளாகவும் கருதிப் பொருளிலிருந்து அதன் பண்புகள் பிரிக்கவொண்ணாததைப் போன்றே, இறைவனுக்கும் உயிருக்கும், இறைவனுக்கும் இயற்கைக்கும் இடையேயுள்ள உறவு பிரிக்க முடியாததாகும். உயிர் மற்றும் இயற்கையின் பண்புகள் உலகு ஒடுக்கக் காலத்தில் இறைவனுடன் நுண்ணிய நிலையில் இணைந்திருந்தவை. உலகப்படைப்பில் பருநிலையில் இறைவனுடன் இணைந்திருக்கும். பொருள் பண்பு உறவு அண்மை நிலை எனப்படும் இலக்கண விதியாக எனவும் (சமணாதிகரணம்) குறிப்பிடுவர். இவ்விதியின்படி ஒரு பொருளுக்குப் பல பண்புகளை உணர்த்தும் சொற்களை இணைத்துக் கூறுவர். இதன் பொருள் இலக்கண முறைப்படியும் பிரிக்கவொண்ணாததாகும்.

இராமானுசர் இறைவனுக்கும் உயிருக்கும், "இறைவனுக்கும் இயற்கைக்கும் இடையேயுள்ள உறவைப் பின்வரும் எடுத்துக்காட்டுகளின் மூலமும் விளக்குகின்றார்.

| *உயிர், இயற்கை* | *இறைவன்* |
|---|---|
| 1. தாங்கப்படுபவை (தாரியம்) | தாங்குபவன் (தார்த்தன்) |
| 2. காக்கப்படுபவை (நியாமியம்) | காப்பவன் (நியாமகன்) |
| 3. நுகரப்படுபவை (சேசம்) | நுகர்பவன் (சேசி) |
| 4. பொருளின் நிலைகள் (பிரகாரங்கள்) | பொருள் (பிரகாரின்) |
| 5. பகுதிகள் (அம்சங்கள்) | முழுமை (அம்சி) |

இவ்வாறு உயிர்களும் இயற்கையும் இறைவனுடன் பிரிக்கவொண்ணாத தொடர்புடையனவெனினும் அவை தம்முள் செயல்பட்டுப் பயன்களைப் பெறுபவையாகும். உயிர் மற்றும் இயற்கையின் குறைபாடுகள், நிறைவுறாத் தன்மைகள், மாற்றங்கள் எவ்வகையிலும் இறைவனைப் பாதிப்பதில்லை. இச் சிறப்பு உறவின் அடிப்படையில் இராமானுசர் இறைவனின் மேலாண்மையையும் உயிர்களின் சார்பற்ற செயல்பாட்டுத் தன்மைகளையும் ஒருங்கிணைக்கின்றார். இறைவனால் தாங்கப்பட்டு, கட்டுப்படுத்தப்பட்டு, அவனுடைய நோக்கங்களுக்குப் பயன்படுத்தப்பட்டாலும் உயிர்கள் தன்னளவில் செயல் உரிமையை உடையவை.

இவ்வாறு சித்து ஆகிய உயிர்களும், அசித்து ஆகிய இயற்கையும், பரம்பொருளாகிய பிரம்மனின் பிரிக்கவொண்ணாத பண்புகள் என்னும் பொருளில் பிரம்மனிலிருந்து வேறுபடாதவைடாகும். ஆயினும் தனித்த உண்மைகள் எனும் நிலையில் அவை பிரம்மனிலிருந்து வேறுபட்டவையுமாகும். பிரம்மனுடன் பிரிக்கவொண்ணாத பகுதிகளாகச் சித்தும் அசித்தும் விளங்கி ஒரு முழுமையான பரம்பொருளாக விளங்குகிறது.

## 13. அறவியல் அல்லது சாதனவியல் (Ethics)

மெய்ப்பொருளியலின் (Philosophy) முதற்பகுதியாகிய அறிவாய்வு இயல் (Epistemology) இறைவன், உயிர், உணர்வல்லாதன ஆகியவற்றைப் பற்றிய அறிவே உயர்ந்த அறிவெனக்கூறி, அவற்றை அறியும் வழிகளைப் பற்றிக் கருதுகின்றது. இரண்டாம் பகுதியான உள்பொருளியலில் (Metaphysics) அறியப்படுகின்ற பொருள்களின் அனைத்தியல்புகளும் கருதப்படுகின்றன. மூன்றாம் பகுதியான அறவியலில் (Ethics) தளைக்குட்பட்ட உயிர் மீண்டும் தன் இயல்பை எத்தகைய நடத்தைகளை மேற்கொள்வதன் மூலம் அடையலாம் என்பது பற்றியும், தன் இயல்பு அடைந்த அல்லது வீடு பேறடைந்த அந்நிலை எவ்வாறு விளங்குகின்றது என்பதைப் பற்றியும் கருதப்படும். விசிட்டாத்வைதம், தளைக்குட்பட்ட உயிர் தன் வீடு பேற்றிற்குக் கைக்கொள்ள வேண்டிய நடத்தையே நெறி (இதம்) என்றும், அந்நெறியைக் கடைப்பிடித்தலால் அடையும் பயனே உறுதிப்பொருள் (புருஷார்த்தம்) என்றும் வழங்குகின்றது.

விசிட்டாத்வைதம், உசிர் தளையிலிருந்து விடுபடக் கைக்கொள்ள வேண்டிய நெறிகளாகக் கருமயோகம், ஞானயோகம், பத்தி

யோகம், பிரபத்தியோகம், ஆசாரிய அபிமானம் என்று வகைப்படுத்துகின்றது இந் நெறிகளைப் பின்பற்றுவதால் அடையும் உறுதிப் பொருளை பகவத் கைங்கர்யம், பாகவதகைங்கர்யம் என வகைப் படுத்துகின்றது. கருமயோகம், ஞானயோகம், பத்தியோகம் ஆகிய வற்றைப் பத்திநெறி என்றும், பிரபத்தி, ஆசாரிய அபிமானம் என்னும் இரண்டையும் பிரபத்திநெறி என்றும் கூறுவர்.

***கருமயோகம் அல்லது வினைநெறி :*** ஒவ்வொரு உயிரும் தன் செயல்களைத் தீர்மானித்து இயற்றுவதில் முழுமையான செயலுரிமை (Freedom of will) கொண்டது இச் செயலுரிமையின் அடிப்படையில் அமைந்ததே கருமயோக நெறியாகும். உயிரானது தளைக்குட்பட்ட நிலையில் உடலுடன் இணைத்தே தன்னைக் கருதுகின்றது. உடலின் மூன்று கூறுகளில் (சத்துவம், இராசசம், தாமசம்) ஒன்றான செயற்கூறு (இராசசம்) உள்ளமட்டும் செயல் என்பது நடைபெற்றுக் கொண்டேயிருக்கும். செயலற்ற வாழ்க்கை என்பது இயலாத ஒன்றாகும். உயிர் தான் அடைய வேண்டிய உறுதிப்பொருளை நோக்கமாகக் கொண்டிருப்பினும், உடலுடன் இணைந்து தன்னைக் கருதுகின்ற பொழுது உடல கூறுகளினால் தீர்மானிக்கப்படுகின்ற இன்ப துன்பங்களை அளிக்கின்ற செயல்களையே செய்கின்றது. மேலும் இச்செயல்களை நான் செய்கின்றேன் என்ற தன்முனைப்புடனும் (அகங்காரம்), இவை என்னால் செய்யப்படுகின்றன என்ற செயலுடைமையுணர்வுடனும் (மமகாரம்) செய்கின்றது. இவ்வாறு செய்யப்படும் செயல்களே மீண்டும் தளைக்குட்படுத்தும் வினைகளெனக் கூறப்படுகின்றது. இவ்வினைகள் தவறாது பயன்களை அளிக்க வல்லன. வினைகளும் அவற்றின் பயன்களும் உணர்வற்றவையாதலின் வினைகளுக்கு முன் அனுமதி அளிப்பவராகவும், வினைப்பயன் அவ்வினைகளைச் செய்த உயிரில் சேர்ப்பிக்கும் அற ஆளுநராகவும் இறைவன் இருக்கின்றான் வினைப்பயன்களை அவைகளைச் செய் உயிர்களே துய்த்துத் தீர்க்கவேண்டும். எனவே உயிர்கள் தளைக்குட்படுத்தும் வினைகளை இயற்றும் பொழுது அவ்வினைகளின் தலைவனாகவும். அவ்வினைகளின் அடிமையாகவும் விளங்குகின்றது. உயிர் 'நான்' 'எனது' என்ற உணர்வுகளின்றிச் செயல்களைச் செய்தால் அச் செயல்கள் உயிரை மீண்டும் தளைக்குட்படுத்தாது, உயிர் அடைய வேண்டிய உறுதிப் பொருளை நோக்கி அவை செலுத்தும். அத்தகைய செயல்களை வேள்வியாகக் கருதிச் செய்தலையே கருமயோகம் என்கின்றனர்.

உயிர் உறுதிப் பொருளான வீடு பேற்றினை அடைய தன் இயல்பினாலும் (சுபாவம்) தனது சமுதாயத்தகுதியினாலும் (வருணம்) தனது வாழ்க்கை நிலையினாலும் (ஆசிரமம்) தீர்மானிக்கப்பட்ட செயல்களையும், நாள் மற்றும் என்றாவது ஏதாவதொரு அடிப்படையின் பொருட்டு (நித்திய, நைமித்திக) தீர்மானிக்கப்பட்ட செயல்களையும், மற்றும் மனித இயல்புக்கேற்பட்ட பொதுச் செயல்களையும் (சாதாரண) தனக்குரிய கடமைகளாகச் (சுயதர்மம்) செய்ய வேண்டும் என்கின்றது பகவத்கீதை, இக்கடமைகளையும் எவ்விதப்பயன் கருதாது செய்ய வேண்டும் என்று அது மேலும் கூறுகின்றது. பயன் கருதாச் செயல்கள் நிஷ்காமிய கருமம் என அழைக்கப்படுகின்றன. பயன்கருதாது செயல்களைச் செய்தாலும், அவை தனக்குரிய பயன்களைத் தராதிருப்பதில்லை. அவ்வாறு பயன்கருதாச் செயல்களின் பலனை இறைவனுக்கே அளித்து விடுதலை கரும பலத்தியாகம் என்று கூறுவர். இவ்வாறு தனக்குரிய கடமைகளைப் பயன்கருதாது செய்வதுடன் அதனால் வரும் பயன்களை இறைவனுக்கு அளிக்கும் உறுதியான உணர்வுடன் செய்வதே கருமயோகமாகும். இத்தகைய கடமைகளைச் செய்தல் தளைக்குட்படுத்தாது வீடு பேற்றினை அளிக்கவல்லது. பொதுவாக இந்துக்கள் அனைவரும் ஏற்கும் இக் கருமயோக நெறியே பின்னர் உறுதிப்பொருளான பகவத்கைங்கரியமாகச் செயல் வழிபாடு செய்வதற்கு முதல் நிலையாகும் என்கின்றது விசிட்டாத்வைதம். மேலும் கருமயோகம், ஞானயோகம், பத்தியோகம் ஆகிய நெறிகளிடையே ஒரு நெருங்கிய தொடர்பினையும் சுட்டுகின்றது விசிட்டாத்வைதம்.

*ஞான யோகம் அல்லது அறிவுநெறி* : கருமயோகம் மனத்தைத் தூய்மையாக்கி உண்மையை அறிவதற்குரிய தகுதியினை அளிக்கின்றது. கடமைகளின் வாயிலாக உயிர் தனதியல்பு உணர்வற்ற உடலின்றும் வேறானது என்பதனை அறிகின்றது. பின்னர் இடையறாத சிந்தனையின் வழி தனதியல்பையும், பிரிக்கவெண்ணாத நிலையில் இறைவனுடன் இணைந்துள்ள தனக்கும் இறைவனுக்குமிடையே அமைந்துள்ள உறவு நிலையையும். இறுதியில் இறைவனது உண்மையியல்பையும் அறிகின்றது. இவ்வாறு அனைத்தின் உண்மையியல்பையும் அறிவதால் இதனை ஞானயோகம் என்கின்றோம். இஞ்ஞான யோகத்தைச் சிறந்த ஆசிரியரிடம் சென்று உண்மையினைக் கேட்டல் (சிரவணம்), அதனைத்தனது அறிவினால் சிந்தித்து உண்மைநிலையுணர்தல் (மனனம்), இறுதியில் உண்மைப் பொருள்களைப்பற்றித்

தொடர்ந்து சிந்தித்தல் (நிதித்தியாசனம்) என மூன்று நிலைகளாகக் கூறுவர். விசிட்டாதவைதத்தில் துறவுநெறியினையோ, பண்புகளற்ற பிரம்மனைப் பற்றிச் சிந்தித்தலையோ (நிர்குணப் பிரம்ம உபாசனம்) ஞானயோகம் குறிப்பிடாது. மாறாகப் பத்திநெறியின் அடிப்படையாவே ஞானயோகம் கருதப்படும். பத்திநெறியானது உயிர் தன்னியல்பையும், இறைவனது இயல்பையும், தனக்கும் இறைவனுக்குமிடையே உள்ள உறவின் அடிப்படையில் இறைவன் மீது ஆழ்ந்த பற்று, மதிப்பு, அன்பு கொள்வதைக் குறிப்பிடுவதால் அத்தகைய அறிவைக் கொடுப்பதாகவே ஞானயோகம் கருதப்படுகின்றது. எனவே பத்தி நெறிக்கு ஞானநெறி இன்றியமையாததாகும்.

மேலும் பயன்கருதாச் செயல்களைச் செய்வதற்கு உயிர் 'நான்' 'எனது' என்ற எண்ணங்களை விட்டொழிக்க வேண்டும் உயிர் தன்னை உடலினின்றும் பிரித்தறியாத நிலையில் இது முடியாதவொன்றாகும். எனவே உயிர் தன்னை உடலினின்றும் பிரித்தவறிவதற்கு ஞானம் இன்றியமையாததாகும். முதலில் உயிரின் செயல்களைத் தூய்மைப் படுத்த அறிவு தேவைப்படுகின்றது இவ்வறிவால் உயிர் தன்னை உடலினின்றும் வேறாக உணர்ந்து தன்முனைப்பையும் (அகங்காரம்) செயலுடைமையையும் (மமகாரம்) விட்டு விடுகின்றது. உயிர்தன்னை உணர்கின்ற நிலையாகும் இது. இரண்டாவது நிலையில் உயிர் தனக்கும் இறைவனுக்குமிடையே உள்ள உறவை அறிகின்றது இவ்வறிவு உயிரிடத்தில் இறைவன் மீது ஆழ்ந்த அன்பினையும், பற்றுதலையும் உண்டாக்குகின்றது. இதுபத்தி நெறிக்கு அறிவு காரணமாகின்ற நிலையாகும். மூன்றாவது நிலையில் உயிர் இறைவனுடைய இயல்பினைத் தொடர்ந்து சிந்திப்பதால் இறைபணிகளை உறுதியுடன் செய்யும் ஆற்றலைப் பெறுகின்றது. இவ்வாறு விசிட்டாத்வைதத்தில் வினை, அறிவு, அன்பு நெறிகள் நெருங்கிய தொடர்பினை உடையதாகக் கருதப்படுகின்றது.

*பத்தியோகம் அல்லது சேவைநெறி* : பத்தி என்றசொல் 'பச' என்ற அடிச்சொல்லிலிருந்து பெறப்பட்டதாகும் இதன்பொருள் சேவை என்பதாகும். பரம்பொருளான இறைவனிடத்துப் பற்றுதல் கொள்வதும், வழிபடுதலும் பத்தியின் அடிப்படையாகும் இதன் விளைவாகப் பத்தன் இறைவனைத் தவிர்த்த ஏனைய பொருள்களின்பால் விருப்பமற்றவனாகின்றான். பத்தி நிலையில் இறைவன் உவப்பிற்கு மட்டுமே தனது மன உடல் நிலைகளினால் பத்தன் செயல்படுகின்றான். அவனுடைய அனைத்து எண்ணங்களுக்கும் செயல்களுக்கும் இறைவனே அடிப்படையாக அமைந்திருக்கின்றது.

இறைவனுக்குச் சேவை செய்தல் என்பது இறைவன் மீதுள்ள அன்பினாலேயே என்பதால் பத்தி என்ற சொல்லிற்கு அன்பு என்ற பொருளும் உண்டு. எனவே பத்தி, அல்லது, ஆழ்ந்த இறைப்பற்று, ஆழ்ந்த இறையன்பு, என்பது வினைப்பயன்களை இறைவனுக்கே அளிக்கும் பண்புகளுக்கு இணையானதெனக் கொள்ளலாம். பதஞ்சலி கூறும் இறைமுன்னிலைப்படுத்தல் (பிரனிதானம்), இணையாகக் கருதுதல் (சமராதனம்). வழிபாடு (உபாசனம்). சிந்தித்தல் (தியானம்) போற்றுதல் (வந்தனம்) ஆகியவற்றின் இணையானதாகவும் பத்தியைக் கூறலாம். இராமானுசரின் கருத்துப்படி பத்தி என்பது இறைவனை அன்புடன் தொடர்ந்து சிந்தித்தலாகும். இவ்வண்பு தடையற்றுத் தொடர்வதாகும். அன்பினால் இறைவனுடன் தொடர்பு கொள்வது உயிருக்கு எல்லையற்ற மகிழ்ச்சியைக் கொடுப்பதாகும் உயிருணர் வின் ஒரு படியாகவே பத்தியை இராமானுசர் கருதுகின்றார். உயிரின் உணர்வு ஒன்றே. எனினும் அது வெளிப்படும் நிலைகளினால் மாறு பட்ட தன்மையைப் பெறும். பிரகிருதியின் இருள்கூறின் வழி உணர்வு வெளிப்படின் அது தோற்றத்தின் தன்மையைக் கொண்டிருக்கும்; செயல்கூறின் வழி வெளிப்படின் அது உடலிச்சையாக விளங்கும்; ஒளிக் கூறின் வழி உணர்வு வெளிப்படுகின்ற பொழுது பத்தியாக, அன்பாக விளங்கும் இத்தூய்மையான அன்பு உணர்வே இறைவனின் சேவை யில் மேலோங்கி நிற்கின்றது. அதுவே தளைக்குட்படுத்தும் செயல் களிலிருந்து உயிரை விடுவிக்கின்றது.

'பத்தி செய்தல்' என்பது உயிரின் உணர்வுக்குரியதாதலால் அது மனித முயற்சியின்பாற் பட்டதெனலாம். மனிதன் தன் முயற்சி யினால் இறைவன் மீது அன்பு செலுத்தவும் அவனை வழிபடவும் கடமைப் பட்டவன். ஆனால் இறையன்பு கொண்ட பத்தர்கள் தம் முழுமையான ஆற்றலுடன் இறைவனிடத்து ஒருபொழுதும் அன்பு செய்ய இயலும் என்று நம்புவதில்லை. இறைவனின் பெருந்தன்மையே மனிதனிடத்து இறைவேட்கையை உண்டுபண்ண வல்லது. இதனால் இறையன்பின் முன் தனது அன்பு மிகவும் தாழ்ந்ததெனப் பத்தன் கருதுகின்றான். எனவே மனிதன் இறைவனிடம் அவனை அறியவும் அவனுக்கு அன்பு செலுத்தவும் உரிய ஆற்றலைத்தருமாறு வேண்டு கின்றான். இறையருளாலேதான் மேலான அன்புகிட்டும் என்பது தெளிவாகின்றது. மனித முயற்சியினால் அடையப்பெறும் பத்தியை வழிமுறைபத்தி (சாதனபத்தி) என்றும், இறையருளால் அடையப் பெறும் பத்தியை பலன் வழிபத்தி (பலபத்தி) என்றும் குறிப்பிடுவர்.

இராமானுசரின் கருத்துப்படி இறைவன் எந்தவித வேறுபாடு மின்றி அனைவரையும் காத்துப் புகலிடம் தருகின்றான். பத்திநெறி யாவருக்கும் உரியதே 'ஒருவன் எத்துணை கெடுதலானவனாயினும் அவன் இறைவனை முழுமையாக வழிபடத் தொடங்கினால் அவனை யும் சிறந்த பத்தன் எனல் வேண்டும், ஏனெனில் அவன் சரியான முடிவைத் தேர்ந்தெடுத்ததினால்' என்கிறது கீதை.

பத்தி நெறியை ஒருவன் முழுமையாகக் கடைப்பிடித்தல் என் பது பல நிலைகளைக் கொண்டதாகும். வேதங்கள் பின்வரும் ஏழு பத்தி நிலைகளைக் குறிப்பிடுகின்றன. அவை 1) கேட்டலின் மூலம் அவனை அடையப் பெறுதல், 2) அவனுடைய பெயர் பாடுவோரை உறுதியாகப் பற்றிநிற்றல் 3) இறைவனின் செயல்களைப் போற்றுதல் 4) அவனுடைய பெயரைத் தொடர்ந்து நினைவில் கொள்ளுதல், 5) இறைவனுக்குப் படையல்கள் செய்தல், 6) இறைவனை வணங்குதல் 7) இறைவனை ஆழ்ந்து சிந்தித்தல் என்பனவாகும்.

உபநிடதங்கள் இறைக்காட்சி, அவனைப்பற்றிக் கேட்டல், கருதுதல், சிந்தித்தல், பலவகைகளிலும் வணக்கம் செலுத்துதல் ஆகியவற்றைப் பத்தியின் நிலைகளாகக் குறிப்பிடுகின்றன. பாகவதம பத்தியின் நிலைகளாகப் பின் வருவனவற்றைக் குறிப்பிடுகின்றது. அவை : 1) இறைவனுக்குக் கோயில்கள் அமைத்தலும் வழிபாட் டிற்குரிய மலர்ச் செடிகளை வளர்த்தலும் (யதனம்), 2) இறைவனின் பண்பு நலன்களைப் பிறர் உரைக்கக்கேட்டல் (சிரவனம்), 3) இறை வனின் திருப்பெயர்களைச் சொல்லுதல் (கீர்த்தனம்), 4) பழம், மலர் இன்னபிறவற்றைக் கொண்டு இறைவனை வழிபடுதல் (அருச்சனை) 5) இறைவனைப் பற்றிய பாடல் தொகுதிகளைச் சொல்லுதல் (சுருதி) 6) இறைவனைப்பற்றிய சொற்பொழிவுகள் நிகழ்த்தல் (வசனம்), 7) இறைவணக்கம் செய்தல் (வந்தனம்), 8) இறைவனை மனதால் நினைத்தல் (சுமரனம்), 9) இறைவனைத் தொடர்த்து சிந்தித்தல் (தியானம்) என்பவையாகும்.

இராமானுசர் பின்வரும் பண்புகள் பத்தனுக்கு இருக்க வேண்டும் என்று கருதுகின்றார். இப்பண்புகளனைத்தும் மனத்தைத் தூய்மைப்படுத்தி அதனை இறையன்பில் பால் செலுத்துபவையாகும். எனவே இப்பண்புகளைப் பத்தனுக்குரிய தகுதிகள் எனக் கூறலாம். அவையாவன : 1. உணவுக் கட்டுப்பாடு விவேகம் : ஒரு மனிதன் எதனை உண்கின்றானோ அத்தன்மையதாகவே அவன் மனமும்

விளங்கும். எனவே உணவைத் தேர்ந்தெடுப்பதில் பின்வரும் முறையை இராமானுசர் கடைப்பிடிக்க வேண்டும் என்கிறார். வெங்காயம், பூண்டு போன்ற பொருள்கள் இயற்கையிலேயே தூய்மையற்ற தாகையால் அவைகளைத் தவிர்க்க வேண்டும். சில நிலைகளில் உணவு வழங்குவோரின் தூய்மையற்ற நிலையினால் அவை தவிர்க் கப்படவேண்டும். தற்செயலாகப் பறவை போன்றவற்றால் எச்சமாக் கப்பட்டவைகளையும் தவிர்க்க வேண்டும். எனவே மனத்தூய்மையை விரும்புவோர் தூய்மையான உணவையே உண்ண வேண்டும். 2. உடலிச்சை, கோபம், பெருவிருப்பம், மையல், தற்பெருமை, அழுக்காறு போன்றவை உணர்வு வேட்கையுடையோர்க்குத் தீங்கு பயப்பனவாகும். இவற்றுள் முதல் மூன்றை நரகத்தின் வாயில்கள் எனக் கீதை கூறும். எனவே புலனின்ப நுகர்வுகளின்மீது பற்றின்றி யிருத்தலே (விமோகம்) இறைவனைப் பற்றி நிற்க வேண்டற்பாலதாகும். 3. இறைவனைத் தொடர்ந்து சிந்திக்கப் பழகுதல் (அப்பியாசம்). மனம் பற்றி நிற்க ஏதேனும் ஒரு பொருள் இன்றியமையாதது. அனைத்துப் பொருள்களையும் விட மனம் பற்றற்குரிய சிறந்த பொருள் இறைவனாதலால் அவனையே தொடர்ந்து சிந்திக்க வேண்டும். 4 பிறர் நலன் கருதிச் செய்யப்படும் அன்றாடக் கடமைகள் அல்லது செயல்கள் (கிரியை) 5 அனைவருக்கும் நலன்புரியும் படியான பண்பு நலன்களை வளர்த்துக் கொள்ளுதல் கல்யாணம்) இத்தகைய இருபத்து ஆறு பண்புகள் கீதையின் பதினாறாவது பகுதியின் இறைச் செல்வம் என்ற தலைப்பில் கூறப் பட்டுள்ளன. 6. சோர்வற்றிருத்தல் (அநவசதம்) பத்தி செய்பவன், தனக்கு எத்தகைய துன்பம் நேரிடினும் தனது இறைபணியில் சற்றும் சோர்வடையாதிருக்கும் மனப் பண்பை வளர்த்துக் கொள்ள வேண்டும் 7 பத்தன் தன் நெறியில் மென்மேலும் முன்னேறிச் செல்கையில் அடையும் பக்குவ நிலைகளினாலோ, இறைவன் தனக் களிக்கும அன்பினாலோ செருக்கு அடையாதிருத்தல் வேண்டும் (அனுதர்சம்).

இறைவன் மீது அன்புகொள்ள, பற்று வைக்க மனித முயற்சி யினால் மேற்கொள்ளப்பட்ட பத்தி ஒரு வழியாக அமைகின்ற நிலையில் அதனைச் சாதன அல்லது வழிமுறைப் பத்தி என்கிறோம். இவ்வழி முறைப் பத்தியை நான்கு வகைகளாக இராமானுசர் குறிப் பிடுகின்றார். அவை 1. கீழான நிலையிலுள்ள மகன், மாணவன், இளையவர், வேலையாள் போன்றோர் தம்மிலும் மேலான நிலை

யிலிருக்கும் தந்தை, ஆசிரியர், முதலியோர் போன்றோரிடம் காட்டும் அன்பைப் போன்று பத்தனின் அன்பு இறைவனிடம் இருக்குமாயின் அதனை அடிமைப் (தாசயம்) பத்தி எனலாம். இது ஆண்டான் அடிமை உறவு நிலையில் ஏற்படும் அன்பு ஆகும். 2. மேற்குறிப் பிட்டவற்றின் மறுதலையான அன்பு நிகழுமாயின் அதனைத் தாயன்பு (வாத்சல்யம்) நிலைப்பத்தி எனலாம். இது பெற்றோர் தன் குழந்தை களிடம் காட்டும் அன்பு போன்றதாகும் 3. நண்பர்களுக்கிடையே ஒருவர்க்கொருவர் காட்டுகின்ற அன்பு நட்புநிலை (சாக்கியம்) பத்தி எனலாம். 4. மனைவி தன் கணவனிடம் செலுத்துகின்ற அன்பு மணவினைப் (மாதுர்யம்) பத்தி எனலாம். பத்தன் இறைவனைத் தனது கணவனாகக் கருதுவது பெயரளயில் தான். இவ்வன்பு உலகியல் தன்மை வாய்ந்ததன்று. இந்நால்வகை வழிமுறைப் பத்தி களில் ஆண்டான் அடிமை அன்பையே (தாசயம்) இராமானுசர் சிறந்ததாகக் கருதுகின்றார்.

வழிமுறைப் பத்தியின் நான்கு வகைகளும், அவற்றின் ஏழு நிலைகளும் வினை மற்றும் அறிவு நெறிகளைப் போன்றே இறை வனிடம் அன்பு செலுத்தி அதன் வழி, வீடு பேறு பெற உதவும் கருவியாகவே விளங்குகின்றன. பத்தி மனத்துடன் உயிரையும் தூய்மையாக்கி "இறைநுகர்வு பெறச் செய்து அதனடிப்படையில் இறைவனைத்தன் உள்ளுணர்வு என்று உயிரை உணர வைத்தால் அது பரபத்தி எனப்படும். இதனால் பரம்பொருளாகிய இறைவனது உடைமையாக இவ்வுயிர் உள்ளது என்று அறியப்படும். அந்நிலை யில் இறைவனின் மீது பேரன்பும், மரியாதையும் தோன்ற இறை வனை வழிபடும் வேட்கை தணியாத ஒன்றாக அமைகின்றது. இறைவனிடம் கொள்ளும் இத்தணியாத வேட்கையே பரமபத்தி எனப் படுகிறது. பரபத்தியும், பரமபத்தியும் இணைந்து வீடு பேற்றினை பத்தியின் பலனாக நல்குகின்றன.

*பிரபத்தி (சரணாகதி)*: பத்தியைக் கடைப்பிடிப்பதற்கு ஒருவன் வினை மற்றும் அறிவு நெறிகளைக் கடக்க வேண்டியிருப்ப தாலும் பத்தனுக்குப்பல தகுதிகள் வேண்டியிருப்பதாலும் பத்திநெறி யில் தவறிவிழுந்து மீண்டும் அறியாமையில் சேர்வதற்கும் வாய்ப்புண்டு. மேலும் இந்நெறிகளைக் கடைப்பிடிப்பதற்கு சமுதாயத்தகுதியும் வேண்டப்படுகின்றது. எனவே அனைத்துயிர்களும் கடைத்தேற மிகவும் எளிமையானதும் இயல்பானதுமான பிரபத்தி நெறியையும் வீடு பேற

டையும் வழியாக விசிட்டாத்வைதம் ஏற்கின்றது. 'அடைக்கலம்புக' (to take refuge with) அல்லது 'திருவுளக்குறிப்பிற் கிணங்க' (to piously resign) என்னும் பொருளுடைய 'பிர-பாத்' என்னும் சொல்லே பிரபத்தி நெறியாக உள்ளது,

பிரபத்தி நெறியில் மனிதன் உலகத்துன்பங்களிலிருந்து தன்னைக் காக்குமாறு இறைவனிடம் வேண்டுகின்றான் இறைவனின் எண்ணத்திற்குத் தன்னை முழுமையாக ஒப்படைத்து அதன்வழி இறைவனருள்பெற்று உய்வதில்தான் பிரபத்தி அடங்கியுள்ளது எனலாம். பிரபத்தி என்றசொல் இத்துன்பியல் உலகிலிருந்து மீட்கக் கூடியவர் இறைவன் ஒருவனே என்பதை உணர்ந்து அவனிடம் பாதுகாத்தலைக் கோருவதாகும். பிரபத்தி அல்லது அடைக்கலம் புகுதல் மூன்று பொருள்களைத் தருகின்றன. 1. அனைத்துத் துன்பங்களினின்றும் விடுபட்டுத் தங்குதற்குரியஇடம்; 2 அடைக்கலம் புகுகின்றசெயல் 3 அடைக்கலம் தருகின்ற இறைவனையும் குறிப்பிடும். எனவே பிரபத்தி என்பது உயிர் தனது வீடு பேற்றுணர்வின் இறுதியாய் இருப்பது இறைவனே என்று உணர்வதும், அதனை அடைய இறைவனே வழியாகும் என்பதனை அறிகின்ற ஒரு எண்ணப் போக்காகும் இறைவனே முடிவும் வழியுமாகக் கொள்ளப்படுவதே பிரபத்தியாகும். பிரபத்தியைப்பற்றிய அறிவை 'சரணாகதிவித்தை' என இராமானுசர் குறிப்பிடுகின்றார்.

இறையுடைமையைத் தன்னுடைமையாக பிழைபடக் கருதுவோர், இறைவன் மீது அன்பு செலுத்த இயலாதவர், எதிர்மறையான அறிவினால் இறைவனைப் புரிந்துகொள்ளத் தவறியோர், இறைவனின் பெருமைமீது பொறாமை கொண்டோர் என்றுமே பிரபத்திநெறியில் சேரார் என இராமானுசர் கருதுகின்றார். இவர்களைத் தவிர்த்து ஏனைய மக்கள் அனைவரும், அவர்கள் எவ்வளவு தாழ்ந்த நிலையினராயினும் பிரபத்திநெறியில் வீடு பேறடையலாம் என்பது இராமானுசர் கருத்தாகும்.

பிரபத்தி நெறிக்கு ஆறு உறுப்புக்கள் உண்டென்று விசிட்டத்வைதம் கூறுகின்றது. அவை. 1 அனுகூல்ய சங்கல்பம் அல்லது இறைவனது விருப்பத்திற்கிணங்க வாழத் தீர்மானித்தல், 2. பிரதிகூலவர்சனம் அல்லது இறைவனின் முடிவுகளுக்கு வேறானவற்றைத் துறத்தல், 3. ரக்சயதிதிவிசுவாசம் அல்லது இறைவன் காப்பான் என்ற உறுதியுடன் நம்பியிருத்தல், 4. கோபதிருத்தவ வரணம்

அல்லது இறையருளையே வீடு பேற்றுக்கு நம்பியிருத்தல், 5. கார்பண்யம் அல்லது தனது இயலாமையை முழுவதுமாக இறைவனிடம் வெளிப்படுத்தல், 6. ஆத்மநிக்சேபம் அல்லது தன்னை முழுமையாக இறைவனிடம் ஒப்படைந்தல் என்பனவாகும்

இறைவனிடம் புகலடைதலை மூன்று நிலைகளில் விளக்குவது உண்டு தனது இருப்பே இறைவனால்தான் எனக்கருதி தான் இறைவனுக்கே உரியவன் எனத் தெளிந்து தன்னையே அவனிடம் ஒப்படைத்தலைத் தன் இயல்பு புகலடைதல் (சுயரூப சமர்ப்பணம்) எனப்படும். இதன் பொருள் இறைவனையன்றி வேறெவர்க்கும் வேறெதற்கும் அடிமையில்லை என்பதாகும். தன்வினைப் பலன்களையும் இறைவனிடம் ஒப்படைத்தலைப் பயன் புகலாக்குதல் (பலசமர்ப்பணம்) என்பர். இறைவனையன்றி வேறெவரை வேறெதனையும் வழியாகக் கருதாதநிலை இதுவாகும். இறைநுகர்வையும் அளிக்கும் பொறுப்பினையும் இறைவனிடமே ஒப்படைத்தலைக் கடந்த நிலைப் புகலடைதல் (பார சமர்ப்பணம்) எனக் குறிப்பிடுவர். அவனே முடிவு என உறுயோடு நிற்றல் இதன் பொருளாகும்

பிரபத்தி நெறியில் நிற்க வாழ்க்கையின் தன்மையையே தகுதியாகக் கருதுவோர், பிரபத்தி நெறி நிற்போரை மூவகைப்படுத்துவர். 1. பத்திநெறியைக் கடைப்பிடிக்கத் திறனற்று அனைத்தையும் இறைவனிடம் ஒப்படைப்போர், 2 அறிவின் துணைகொண்டு பத்திநெறியில் செல்லும் திறனிருந்தும், அந்நெறிகள் உயிர் இயல்பிற்குப் பொருந்தா என்னும் உணர்வினால் இறைவனிடம் தம்மை ஒப்படைப்போர், 3. இறைவனை நினைத்த பொழுதில் பேரன்பு பெருக்குபவர்கள், அதனால் மனம் தளர்ந்துவேறு வழியின்றி இறைவனைப் புகலடைவோர். மெய்ப்பொருளியலை வழங்கும் ஆசிரியர்கள் இரண்டாம் வகையைச் சேர்ந்தவர். ஆழ்வார்கள் மூன்றாம் வகையினர் ஆவர். இவர்களுள் உண்மையறிவு பெற்றபின் உடலோடும் உற்றாரோடும் கூடியிருத்தலைப் பொறாது, அருளைப் புகலாகப் பற்றி இறைவனைச் சேர்பவரை ஆர்த்தர் என்றும், முன்வினைப் பயன்நுகர்வின் முடிவில் இறைவனைச்சேர விழைவோரைத் திருப்தர் என்றும் குறிப்பிடுவர்.

ஏனைய நெறிகளில் நிற்பவரைவிட பிரபத்தி நெறியில் நிற்போரே உயர்ந்தவர் எனக்காட்ட, இறைவனை வழியாகக்கொண்டு இம்மை மறுமைப் பயன்களை முடிவாகக் கருதுபவர் தன்னலம் உடையோர் எனவும், ஏனைய நெறிகளை வழியாகவும், இறைவனை

முடிவாகவும் கருதுவோர் தன்முனைப்புடையோர் எனவும், இறைவனையே வழியாகவும் முடிவாகவும் கருதிப் பிரபத்திநெறி நிற்போர் உயர்ந்தோர் எனவும் குறிப்பிடுவதும் உண்டு.

பிரபத்தி நெறி நிற்போர் பிரபன்னர் என அழைக்கப்படுவர். இப்பிரபன்னர்களின் நுகர்வுபடிப்படியாக வளர்வதை 1. இறைவனின் எழில் வடிவக் காட்சியில் விருப்பம், 2. அவனைப் பற்றிய சிந்தனை, 3. அவனது நினைவு, 4. அவனை நுகரும் ஆவல், 5. அது முதிர்ந்து சுவையாதல், 6 அவனைக் கூடுவதில் மகிழ்ச்சி, 7. அவனைப் பிரிவதில் துன்பம் என்னும் நிலைகளாகவோ, 1. உயிருக்கும் இறைவனுக்குமுள்ள உறவைக் கேட்டல், 2. அதனைச் சிந்தித்துணர்தல், 3. அதனை நிலையாக்கல், 4. அது முற்றிக் காட்சியாதல் 5. அக காட்சி உலகப் பொருள்களைப் போன்று தெளிவாக அமைதல் எனும் ஐந்து நிலைகளாகவோ குறிப்பிடுவர். இறைவன்பால் அன்பு பெருகி, அவனை இடையறாது நினைத்துக் கொண்டிருப்பதுவும், அவனைத்தனது உயிராகக் கருதுதலும், அதனால் இறைவனுக்கு மிக்வும் வேண்டியவனாகத் தன்னை மாற்றி இறைவன் அருளைப் பெறுதலுமே இந்நெறியின் சிறப்பான விளைவு ஆகும்.

பிரபத்தி நெறியில் மனித முயற்சியும் வேண்டற்பாலது எனக் கூறுவோர் வைணவ மரபின் வடகலைப் பிரிவினர். அதனைக் குரங்குக்குட்டி தன் முயற்சியால் தாய்க்குரங்கைப் பற்றிக் கொள்வதைப் போன்று உயிர் தன் முயற்சியால் பிரபத்தி நெறியில் இறைவனைப் பற்ற வேண்டும் என்று விளக்குவர். பிரபத்தி நெறியில் அனைத்தும் இறைவனையே சார்ந்தது என்பர் தென்கலையினர். இது தாய்ப் பூனை தனது குட்டியைக் கவ்விச் செல்வதில் குட்டிப் பூனையின் முயற்சி ஏதுமில்லாதது போன்று இறைவனே உயிரைப்பற்றி அதனை வீடுபேற்றில் செலுத்துவதில் உயிரின் முயற்சி இன்மை போல்வதாகும்.

விசிட்டாத்வைத நெறிகளைப் பின்பற்றும் தளைக்குட்பட்ட உயிர்களை அவை மேற்கொள்ளும் வழிமுறைகளின் அடிப்படையில் சிரீநிவாசதாசர் பின் கண்டபடி அட்டவணைப் படுத்துகின்றார். (அட்டவணையை இறுதியில் பார்க்க)

பிரபத்தியில் இறைவனையே வழியாகக் கருதுவதால் இதுவும் இதர வழிகளைப் போன்றே ஒரு நெறியாகும். நெறி என்ற நிலையில் பிரபத்திக்கு சாத்திரங்களில் கூறப்படும் தகுதிகளும், சமுதாயத்

தகுதிகளும் இல்லையெனினும், தொடக்க நிலையில் சில தகுதிகள் உண்டு எனக் கூறலாம். அவை விசிட்டாத்வைதத்தின் அடிப்படை என வழங்கப்படுகின்ற மூன்று மறை பொருள்களை (இரகசியத் திரயம்) ஒரு ஆசிரியரிடம் கேட்டு சிந்தித்துத் தெளிவு பெறுதலாகும். அம்மூன்று மறைபொருள்களாவன 1 இறைவனின் திருப்பெயராகிய எட்டெழுத்து (திருமந்திரம்) 2 இறை உண்மையைத் தெளிவாக்கும் இருவாக்கியங்கள் (துவயம்), 3 கீதையில் பிரபத்தியைப்பற்றிக் கூறப் பட்ட ஒரு செய்யுள் (சரமசுலோகம்), இம்மூன்று மறை பொருள் களையும் நன்கு அறிந்தால் இறைநிலை, உயிர்நிலை, நெறி, அதன் தடை, மற்றும் வினைகள் பற்றிய தெளிவான அறிவு பிறக்கும். இவ் வறிவே பிரபத்தி என்னும் நெறியைப் பின்பற்றி வாழும் உறுதியைத் தருமென்பர்.

***ஆசிரியப்பற்று*** (ஆசாரிய அபிமானம்) : பிரபத்தி நெறி நிற்க விரும்புவோர் முதலில் ஒரு ஆசிரியரிடம் புகலடைய வேண்டும். அவரிடு கின்ற கட்டளைப்படி வாழ்க்கையை மேற்கொள்ள வேண்டும். ஆசிரிய ரின் நெறி இவர்களையும் உய்விக்கும். அகவளர்ச்சி உடையோர் தம்மை முதலில் ஆசிரியரிடம் ஒப்படைப்பர். அவ்வாறு புகலடைந்த வர்களுக்கு அனைத்துமே ஆசிரியர்தான். இராமானுசருடைய உறவை விட்டுப்பெறக்கூடிய இறை உறவும் எமக்கு வேண்டியதில்லை என்னும் கூரத்தாழ்வார் கூற்று இதற்குச் சிறந்த எடுத்துக்காட்டு எனலாம். நம்மாழ்வார், திருமங்கையாழ்வார், இராமானுசர் போன்றோர் இவ் வறிவுரை வழிமுறைகளாலே பிரபத்தியை வளர்த்தவர்கள். ஆசிரி யரிடம் புகலடைதலை ஆசிரியப் பிரபத்தி என்றும், இறைவனிடம் புகலடைதலை ஈசுவரப் பிரபத்தி என்றும் வழங்குவர்.

இறைவனை அடைய அவனது அருளேவழி; தன் முயற்சியன்று. அவனது உடைமையாகிய உயிரைப் பெற அவனே முயல்கின்றான். அதற்கு இசைவாக இருப்பதே வேண்டுவது என்னும் கருத்தே பிர பத்தியின் அடிப்படை உணர்வாகும்.

***உறுதிப்பொருள்களாகிய இறைச்சேவையும் அடியார் சேவையும் (புருசார்த்தங்களாகிய பகவத் மற்றும் பாகவத கைங்கர்யம்)*** : இந்து சமயம் அறம், பொருள், இன்பம், வீடு என்னும் நான்கினை உறுதிப்பொருள் என்கின்றது. இந்து சமயத்தின் ஒரு மரபாக விளங்கும் வைணவமும் வீடு பேற்றினை மேலான உறுதிப்பொருள்

என்றும் அது இயலுலக வாழ்விற்குப் பின்னர் அடைவது என்று ஏற்றாலும் இவ்வுலகில் உயிர்கள் தங்கியிருக்கும் பொழுது அவ்வுறுதிப் பொருளை அடைய உதவும் செயல்களையும் (கைங்கர்யம்) அதனுடன் வேறுபாடற்றுள்ளதாகக் கருதி உறுதிப்பொருள் என்றே வழங்கு கின்றனர். இதன் அடிப்படையில் மேலான உறுதிப் பொருளான வீடு பேற்றினைக் கூட தினசரி வேலையால் அடையப் பெறுவது (நித்திய கைங்கரியப் பிராப்தி) என்றே இராமானுசர் குறிப்பிடு கின்றார்.

விகிட்டாத்வைதத்தில் ஒருவனுச்குச் செய்யும் தொண்டு, பணி அல்லது சேவை (கைங்கர்யம்) எனப்படுகிறது இத்தொண்டு என்பது ஊதியத்திற்காகவோ, நன்றிக்காகவோ, உதவியாகவே, உறவுக்காவோ செய்யப்படுவதன்று. இவ்வடிப்படைகளில் செய்யப்படும தொண்டு உலகியல்பானவை. விசிட்டாத்வைதத்தின்படி இறைவன்-தலைவன்; உயிர்-அவனது அடிமை என்ற உறவில் உயிர் இறைவனுக்குச் செய்யும் தொண்டு மட்டுமே கைங்கர்யம் ஆகும். இது எதன் பொருட்டும் (நிருபாதிகம்) செய்யப்படாது உடையவன்-உடைமை என்ற நிலையில் இயற்றப்படுவதால் இத்தொண்டு உறுதிப்பொருள் எனப்படுகிறது. இவ்வாறு இறைவனுக்குச் செய்யும் தொண்டும் இரு வகைப்படும். திருநூல்களில் கூறியுள்ளவாறு இறைவனுக்குத் தொண்டு செய்வது தன் வடிவ அடிமை நிலையில் (சுயரூப கிரத தாச கைங்கர்யம்) செய்வதாகும். மற்றொன்று இறைவனுடைய பண்பு நலன்களுக்கு வயப்பட்டு, அவ்விறைவனுக்குத் தொண்டு புரியாவிடில் உயிர் நிலைத்திராது எனக் கருதித் தன் உயிர் நிலைத்திருக்க வேண்டி இறைவனுக்குத் தொண்டு செய்வதாகும். இதனைப் பண்பினடிப்படை அடிமை நிலைத் தொண்டு (குணகிருத கைங்கர்யம்) என்பர். இவ்விரு வகையிலும் பின்னர் குறிப்பிட்டதே சிறந்ததாகும்.

தொண்டு செய்யும் பொழுது இறைவனின் திருவுள்ளம் அறிந்து அதன்படி செய்வதே முறையாகும். அதுவன்றி நான் அல்லது என்னால் அல்லது எனக்காக என்ற எண்ணங்களினால் உந்தப்பட்டு இறைபணி செய்தல் கூடாது. தொண்டு செய்தலால் இறைவன் அதன் பலனை அடைகிறார் : அதனைக் கண்டு மகிழ்கிறோம் என்ற நிலை யிலேயே இறைவனுக்குத் தொண்டாற்ற வேண்டும். திவ்விய சூரிகளும், முத்தர்களும் இறைவனுடைய எண்ணத்தை நேரில் அறிந்து அதன்படி தொண்டு செய்து கொண்டிருப்பவர் ஆவர்.

இயலுலகில் இறைவனது திருவுள்ளத்தை வெளியிடுபவை சாத்திரங்களாதலால், அச்சாத்திரங்களில் சொல்லியுள்ள தொண்டினை கடமையுணர்வுடன் இறைவனின் பண்பு நலனகளுக்குத் தோற்றுத் தொண்டு செய்ய வேண்டும். இறையன்பை நுகர நுகர அவனுக்குத் தொண்டு செய்தலல்லது உயிர்நிலைக்காத நிலை உண்டாகிவிடும். இத்தகையோர்க்கு அனைத்துமே இறைவனாகும்.

இவ்வாறு எல்லாக் காலங்களிலும் எல்லா இடங்களிலும், அனைத்து நிலைகளிலும் இறைவனுக்கே தொண்டு செய்தல் வழியாகவும் முடிவாகவும் அமைவதால் இத்தொண்டினை உறுதிப்பொருள் என்கின்றனர். இறைவனின் திருவுள்ளப்படி தொண்டு செய்வது உறுதிப்பொருள் என்று கூறுமிடத்து, அவனது திருவுள்ளத்தை ஆராய்ந்தால் அவனது அடியார்களான ஆசிரியர்களுக்கும், அவனது புகழ் பாடி நிற்கும் பாகவதர்களுக்கும் தொண்டு செய்வது (பாகவத கைங்கர்யம்) அவனுக்கு மகிழ்ச்சியளிக்கும் என்பதை அறியலாம். இவர்களுக்குத் தொண்டு செய்வதே இறைத் தொண்டின் எல்லையாகும். இறைவனுக்குத் தொண்டு செய்வதைவிட அவனது அடியவர்களுக்குத் தொண்டு செய்வதே சிறந்ததாகும். எனவே தான் இறைவனுக்கும் அவன் புகழ்பாடுவோராகிய பாகவதர்களுக்கும் ஒரே சமயத்தில் தொண்டு செய்ய நேரிடின் இறைத் தொண்டினை விட்டு பாகவதர் தொண்டு செய்வது சிறப்பு என்றும் பாகவதர்களுக்கும் ஆசாரியார்களுக்கும் ஒரே சமயத்தில் தொண்டு செய்ய நேரிடின் பாகவதத் தொண்டினை விட்டு ஆசாரியத் தொண்டு செய்வதே அனைத்திலும் மேலானதெனவும் திருநூல்கள் குறிப்பிடுகின்றன. இறையடிவர்களுக்குத் தொண்டு செய்வது என்பது அவ்வடியவர்களிடம் இறைவனைக் கண்ட கிளர்ச்சியில் பணி செய்வதாகும். அடியவர்களின் திருக்கூட்டத்தைக் காண்பதே கண்பெற்ற பயன். அவர்களுக்குத் தொண்டு செய்யும் பொழுது அவர்களை நம் உறவினர் போன்று கருதிப் பணி செய்ய வேண்டும். இவ்வடியவர் தொண்டினால் ஆண்டவனின் தொண்டு கைகூடும். இவ்வடியவர் தொண்டினால் உய்வடைந்தவர்களாக மதுரகவியாழ்வாரும், கூரத்தாழ்வாரும் உள்ளனர். மேற்கூறியவற்றிலிருந்து இறைப்பணியும், இறைத் தொண்டர் பணியும் இயலுலக உறுதிப்பொருள்களாக வைணவர்கள் கருதியதை அறியலாம்.

***வீடுபேறு (முத்தி)*** : விசிட்டாத்வைதத்தின் படி வீடு பேறு என்பது இவ்வுடலை விட்டு நீங்கிய உயிரி இறைவனுடன் கூடியிருத்

தலேயாகும். இயலுலக வாழ்க்கையை விட்டொழித்தபின்பே வீடு பேறு கிட்டும் என்று விசிட்டாத்வைதம் கருதுவதால் உடலினின்றும் நீங்கிய வீடு பேறு (விதேகமுத்தி) மட்டுமே உண்டென்று கூறலாம். விசிட்டாத்வைதிகள் உடலுடன் கூடிய வீடு பேற்றினை (சீவன் முத்தி) ஏற்பதில்லை.

பாகவதம் வீடு பேற்றினை ஐந்து நிலைகள் கொண்டதாகக் கூறுகின்றது. அவை : 1; இறைவனிருக்குமிடத்தில் நிலைப் பெறுதல் (சாலோகம்), 2. இறைவனுக்கிணையான தலைமையை அடைதல் (சரித்தி), 3. இறைனுக்கருகே இருத்தல் (சாமிப்பயம்), 4. இறைவனது வடிவைப் போன்றவடிவைப் பெறுதல் (சாரூபம்), 5 இறைவனுடன் ஒன்றியிருத்தல் (ஏகதத்துவம்) என்பனவாகும். இறுதியாகக் கூறப்படும் ஒன்றாதல் இறைவனுடன் கூடியிருத்தலைக் குறிக்கு எனலாம்

இராமானுசர் வீடு பேற்று நிலையை விரிவாகக்கூறாவிடினும் உயிர் இறையுலகையடைந்து அவனுடனிருப்பில் திளைக்கும் பேறு பெறுவதாகக் கருதுகின்றார். வேங்கடநாதர் இறைவனுடன் கூடியிருப்பதே வீடுபேறு என்கிறார். இதில் இறை உலகு அடைதலும், இறைவனுக்கருகாமையில் இருத்தலும் அடங்குவதாகும் இவையன்றி இறைவனுடன் கூடியிருத்தல் இயலாது. மேலும் உயிர் பெற்றிருக்கும் இறைவடிவு வீடு பேற்று நிலையில் கைவல்யம் எனப் படும் இறைவனுடன் ஒன்றாதலை விசிட்டாத்வைதம் ஏற்றாலும் அதற்கு வேறு பொருள் தருகின்றது இராமானுசரின் கருத்துப்படி தனது உண்மையான இயல்பை அறிய விரும்புபவன் சிக்ஞாசு எனப் படுவான். அவன் தன் இயல்பை அறிந்து தனித்த இருப்பை (கைவல்யம்) பெறுபவன் ஆவான் இராமானுசர் கைவல்யத்தைப் பற்றி எவ்வித ஐயப்பாட்டினையும் தெரிவிக்காவிடினும் வடகலையினர் இயலுலகின் ஏதாவதொரு நிலையில் கைவல்யம் அடையப்படுவதாகக் குறிப்பிடுகின்றனர். ஆனால் தென்கலையினர் ''கைவல்யம் இறையுலகில் பெறப்படும் ஒன்று'' எனக் கருதுகின்றனர்.

U-62

- உயிர்கள்
  - தளைக்குட்பட்டோர் (பத்தர்கள்)
    - புனித நூல்களினால் வழிபடுத்தப்படுவோர் (மனிதர்கள், கடவுள்)
      - உலகப்பயன்களை நுகரவிழைவோர்
        - பொருள், இன்பம் விழைவோர்
        - நன்மையை நாடுவோர்
          - பலகடவுளரைச் சார்ந்து நிற்போர்
            - துன்புறுவோர் (ஆர்த்தர்)
            - அறிவுவிழைவோர் (சிக்ஞாசர்)
            - பொருளைநாடுவோர் (அர்த்தார்த்தி
          - ஒரே கடவுளரைச் சார்ந்து நிற்போர்
      - வீடுபேறடைய விழைவோர்
        - தன்னைத் தூயநிலையில் உணர விழைவோர் (கைவல்யம்)
        - இறைவனுடன் கூடியிருக்க விழைவோர் (மோட்சம்)
          - அன்புவழிப் பட்டோர் (பக்தர்கள்)
            - அன்பினை வழியாக ஏற்றோர் (சாதன பக்தர்)
            - அன்பினை முடிவாகக் கொண்டோர் (சாத்திய பக்தர்)
          - புகல் வழிப்பட்டோர் (பிரபன்னர்கள்)
            - உறுதிப்பொருள்களை இறைவனிடமிருந்தே பெறவிழைவோர் (ஏகாந்திகள்)
              - முன்வினைப்பயன் நுகர்வின் முடிவில் இறைவனுடன் கூடியிருக்க விழைவோர்
              - புகலுறுதி மேற்கொண்டவுடன் இறை [illegible]
            - அறிவு, அன்பு மடுமமே இறைவனிடமிருந்து பெறவிழைவோர் (பரமை கரந்திகள்)
    - புனித நூல்களினால் வழி நடத்தப் படாதவை (பயிரினங்களும் விலங்கினங்களும்)
  - வீடுபேறு பெற்றோர் (முத்தர்)
  - ஒருபொழுதும் தளைக்குப் படாத நிலையானவர் (நித்தியர்)